தொகுதி 3

# தமிழாய்வு

## பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனர் நினைவு மலர்

'திட்பமும் நுட்பமும்'

பொதுப் பதிப்பாசிரியர் :
பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி,
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
டிப்.மானிடவியல், அரசியல் & ஆட்சியியல்,
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

உதவி :
தமிழ்த்துறை ஆசிரியர்களும் மாணவர்களும்



சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு
1974

# TAMILĀYVU

## (Annals of Tamil Research)

## Dr. M. Varadarajanar Commemoration Volume

**"CLARITY AND PRECISION"**

*General Editor :*
DR. N. SANJEEVI, M.A., M.Litt., Ph.D.,
Dip. in Anthro, Pol. & Pub. Admn.,
Professor and Head of the Department of Tamil,
University of Madras.

*Assistance :*
STAFF & STUDENTS OF THE DEPARTMENT OF TAMIL

**DEPARTMENT OF TAMIL**
UNIVERSITY OF MADRAS
**1974**



பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனுர்,

எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி., டி.லிட்.

தமிழ்த் துறைத் தலைவர்,

சென்னைப் பல்கலைக் கழகம், (1961—1971).

தோற்றம்:
25—4—1912.

மறைவு:
10—10—1974.

# பதிப்புரை

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை 1972-ஆம் ஆண்டு தொடங்கி ஒவ்வோராண்டும் வெளியிட்டுவரும் 'தமிழாய்வு' ஆய்வாள ராலும் அன்பர்களாலும் விரும்பிப் படிக்கப்பட்டுவரும் ஓர் ஆய்வு ஏடு ஆகும். தமிழாய்வின் முதல் தொகுதி வெளிவந்த சில திங்கள்களுக் குள்ளேயே தீர்ந்துவிட்டது. தமிழறிஞர்களின் வேண்டுகோளுக்கு இணங்க அது இந்த ஆண்டு மீண்டும் மறுபதிப்புச் செய்ய பெற்றுள்ளது.

இதன் இரண்டாவது தொகுதியில் ஆய்வுக் கட்டுரைகள், நூலடைவு களோடு சிறப்பாகக் கப்பலோட்டிய தமிழர் 'வ. உ. சிதம்பரனாரின் நூற்றாண்டுவிழாக் கருத்தரங்கக் கோவை'யும், அச்சாகாதிருந்த அருந் தமிழ்ச் சுவடியாகிய 'நாககுமார காவியம்' என்பதும் இடம் பெற்று, நல்லறிஞர் போற்ற உலாவந்து கொண்டிருக்கின்றது.

இப்பொழுது தமிழாய்வின் மூன்றாவது தொகுதி உருவாகித் தமிழுலகில் தவழ வெளிவருகிறது. இதில் ஏழு பகுதிகள் இடம் பெற்றுள்ளன. முதற்பகுதி கருத்தரங்கக் கட்டுரைகள். இப் பகுதியில் நால்வர் எழுதிய ஆய்வுக் கட்டுரைகள் தரப்பட்டுள்ளன.

அண்மையில் மறைந்த பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் ஒரு நாடகம் பற்றிய திறனாய்வு முதற்கண் அமைந்துள்ளது. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராயும் மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராயும் விளங்கிய அப் பெருமகனாரின் நினைவாக வெளிவரும் இத் தமிழாய்வுத் தொகுதியில் முதன்மை யாயும் முதலாவதாயும் விளங்குவது தெய்வப் பொருத்தம் போலும்!

அடுத்து வரும் கட்டுரைகள் தமிழியல் வகைகளுள் ஒன்றான 'அகராதிக் கலை', 'கலைக்களஞ்சியத்தில் தமிழியல் பொதுக் கட் டுரைகள்,' 'தமிழின் நடைவகைகள்' என்பன பற்றி அமைந்துள்ளன. தமிழகராதிக் கலைக்கு முதல்வராய் வழிகாட்டி விளங்கும் தொல் காப்பிய நூலைத் தந்த தொல்காப்பியரின் அகராதிக் கொள்கைகள் தெளிவுற விளக்கப் பட்டுள்ளன. நடையின் வகைகள் பற்றிய கட்டுரை தமிழ் மொழியில் காலந்தோறும் வளர்ந்துவரும் பேச்சுநடை, எழுத்து நடைப் போக்குகளை முறைப்படத் தொகுத்தும் வகுத்தும் ஆராய்கிறது.

தமிழ்க் கலைக் களஞ்சியம் பல்பொருட் களஞ்சியமாய்க் கவினுற அமைந்த பெரும் படைப்பு—பெருமைப் படைப்பு. அதில் தமிழியல்

தொடர்பான செய்திகளைத் தனிப்பட அறிவது தமிழாராய்ச்சி யாளர்க்குப் பெருந்துணை செய்யும். தமிழ் மொழி, இலக்கியம் முதலி யன பற்றிய கட்டுரைகளின் மதிப்பீட்டு முயற்சியே 'கலைக்களஞ்சியத் தில் தமிழியல் பொதுக்கட்டுரைகள்' என்பது. இவ்வகை இயல்புடைய கட்டுரைகளை நுணுகி ஆய்ந்து மேலும் வளப்பம் காணுதல் வேண்டும்.

தமிழ்க் கலைக்களஞ்சியத்தில் இடம் பெற்றுள்ள தமிழியல் கட்டுரைகள் எவையெவை என்பதை வகைப்படுத்தித் தொகுத்துக் காண்பது தமிழியல் துறைக்குத் துணை செய்வதாகும். அவ்வப் பொருள்களை வளப்படுத்துவதற்கும் இவ்வாய்வு இன்றியமையாததே. இந் நோக்கில் எழுந்த முதல் முயற்சியே 'கலைக்களஞ்சியத்தில் தமிழியல் கட்டுரைகள் — சங்க காலம்' என்பது பற்றிய வகை தொகை விளக்கம். இவ் வகையில் மேலும் தொடர்ந்து இனிவரும் தமிழாய்வுகளில் இப் பகுதி இடம் பெறும்.

ஒவ்வொரு பொருளையும் பற்றி ஆராய்வார்க்கு அவ்வப் பொருள்கள் பற்றிய 'நூல் விவர அட்டவணை' மிக மிக இன்றியமை யாததொன்று. இத்தகு கருவிகளைத் தொகுத்துத் தரும் நோக்கில் முன்னர் வெளிவந்த தொல்காப்பிய நூலடைவு, நிகண்டடைவு ஆகிய வற்றைத் தொடர்ந்து 'திருக்குறள் நூலடைவு' இத் தொகுதியில் தரப் பட்டுள்ளது. இதனைத் தொகுத்து அளித்தவர் இப்பொழுது உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் இணைப்பேராசிரியராய் விளங்கும் க. த. திருநாவுக்கரசு அவர்களாவர். அவர்கள் இந்தப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைக்கும், திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதிக்கும் பெருமைத்தேடித் தந்துள்ளார்கள். இந்த ஆண்டு சாகித்திய அகாதமி யின் இலக்கியப் பரிசினை அவர்கள் இங்கு இருந்த காலத்து எழுதிய 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்னும் நூலுக்காகப் பெற்றுள்ளார் கள். பரிசுபெற்றபேராசிரியப் பெருந்தகை அவர்களுக்குச் சென்னைப் பல்கலைக் கழகமும் தமிழ்த் துறையும் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறது.

முந்திய தமிழாய்வுகளிற் போலவே ஆங்கிலப்பகுதி ஒன்றும் இதில் அமைக்கப்பட்டுள்ளது. ஆங்கிலேயர் மேலைக் கடற்கரையில் வந்து இறங்கி முதற்கண் வாழ்ந்தபோது, அவர்கள் தமிழர்களோடு அளவளாவும் பொருட்டுத் தொகுத்த சொற்கோவை ஒன்று கிட்டி யுள்ளது. நடைமுறைப் பழக்கத்திற்கு அவசியமான தமிழ் சொற்கள் ஆங்கிலச் சொற்களுடன் இணைத்துத் தரப்பட்டுள்ளன.

தமிழ் நாடு அரசாங்கக் கிழக்குத் திசைச் சுவடி நிலையத்திலிருந்த இந்தச் சுவடியை எடுத்து எழுதி வெளியிடத் துணைபுரிந்தவர் தமிழகராதிப் பணியில் ஈடுபட்டுள்ள திரு. வ. செயதேவன் அவர்க ளாவார். இச் சுவடியினைப் பதிப்பிப்பதற்கு மனமுவந்து இசைந்த கிழக்குத் திசைச் சுவடி நிலையக் காப்பாளர் பேராசிரியர் சம்பத்

அவர்களுக்குத் தமிழ்த் துறையின் நன்றி உரித்தாகும். இந்தச் சொற் கோவை மொழியியல் ஆய்வாளர்க்கும், அகராதியாளர்க்கும் பயன் படும் ஒரு சொற்பொருட் கோவையாகும். இது பற்றிய ஆய்வுக்குறிப் புகள் அடுத்த இதழில் வெளிவரும்.

தமிழாய்வில் இதுவரை அச்சில் வாரா அருந்தமிழ் நூல்களைக் கண்டறிந்து வெளியிடுவதும் அவற்றைத் தனி நூலாய் வெளியிடுவதும் ஆகிய பணி தொடர்ந்து செய்யப்பட்டு வருகிறது. இதுவரை அப்பாண்டை நாதர் உலா, நாக குமார காவியம், திருமேற்றிசையந் தாதி என்பவை வெளிவந்துள்ளன. இந்த மூன்றும் தொகுதியில் வழி வழியாய் வரும் வாய்மொழி இலக்கியங்களாகிய நாட்டுப்புற இலக்கி யங்களை எழுத்துருவில் போற்றும் புது முயற்சியும் தொடங்கப்பட் டுள்ளது. இந்த நாட்டுப்புற இலக்கிய வரிசையில் ‘ஈனமுத்துப் பாண்டியன் கதை’ என்னும் வில்லுப் பாட்டு முதன்முதல் வெளியிடப் படுகிறது. இது தமிழ்த்துறை ஆய்வு மாணவர் திரு. சு. சண்முக சுந்தரம் அவர்களின் ஆர்வ உழைப்பின் அரும்பயன்.

தமிழ் நூல்கள் சிலவற்றிற்கான மதிப்புரைகளை ‘மதிப்புரை மாலை’ என்னும் பகுதியில் காணலாம். 1974-ஆம் ஆண்டில் தமிழ்த் துறையில் நிகழ்ந்த சிறப்பு நிகழ்ச்சிகள் முதலியவற்றைத் ‘தமிழ்த் துறைச் செய்திகள்’ என்னும் தனிப்பகுதியால் அறியலாகும்.

முந்திய தொகுதிகளைப் போலவே இத் தொகுதியையும் செம்மை யுற அமைய அரும்பெரும் உதவி புரிந்த புலவர்மணி மு. சண்முகம் பிள்ளை அவர்களுக்குத் தமிழ்த்துறையின் சார்பில் உளமார்ந்த நன்றி யறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ‘மாரி மாட்டு என்னாற்றுங் கொல்லோ உலகு?’

இத் தொகுதி வெளியிடுவதற்கும் உறுதுணையாய் இருந்த மாண் பமை துணைவேந்தர் அவர்கட்கும் ஆட்சிக் குழுவினர்க்கும் என் நன்றி உரியது.

சென்னை,<br>
31—12—74.

ந. சஞ்சீவி.

# பொருளடக்கம்


| | |
|---|---|
| கருத்தரங்கக் கட்டுரைகள் | 1—108 |
| கலைக்களஞ்சியத்தில் தமிழியல் கட்டுரைகள் — ஒரு வகை தொகை 1. சங்க காலம் | 1—32 |
| திருக்குறள் நூலடைவு | 1—92 |
| Vocabulary and Dialogue | 1—36 |
| ஈனமுத்துப் பாண்டியன் கதை (வில்லுப் பாட்டு) | i—xii + 1—24 |
| மதிப்புரை மாலை | 1—28 |
| தமிழ்த்துறைச் செய்திகள் | 1—30 |

| வ. எண் | பொருள் | கருத்தரங்க நாள் |
|---|---|---|
| 1. | பேராசிரியர் டாக்டர் மு.வ.-வின் நாடகங்கள்<br>—டாக்டர் ந. சஞ்சீவி | 18—8—'72 |
| 2. | தொல்காப்பியரும் அகராதிக் கலையும்<br>— வ. செயதேவன் | 30—7—'73 |
| 3. | கலைக்களஞ்சியத்தில் தமிழியல் பொதுக் கட்டுரைகள்<br>— கு. மோகனராசு | 9—11—'73 |
| 4. | நடையின் வகைகள்<br>— இ. சுந்தரமூர்த்தி | 31—7—'74 |

# 1. பேராசிரியர் டாக்டர் மு. வ.-வின் நாடகங்கள்

டாக்டர் ந. சஞ்சீவி
தமிழ்த்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்.

"மக்கள் அறிவு மட்டும் பெற்றிருந்தால் போதாது. ஒழுக்கமும் பெற்றிருக்க வேண்டும். ஒழுக்கத்தோடு பொருந்தாத அறிவுக்கு மதிப்புத் தரக்கூடாது. டாக்டர் மு. வ. ஒழுக்கத்தை உயிரென ஓம்பும் அறிஞராவார்." [தமிழ் முரசு, ஏப். 1951.]

"டாக்டர் மு. வ. எவரையும் எளிதில் பகைத்துக்கொள்ள விரும்பாதவர். பரஸ்பரம் பகை கொண்ட இரு வேறு சக்திகளிடையே நடைபோட நேருங்கால் எந்த ஒரு சக்தியையும், சார்ந்துவிடாதபடி நடந்து கொள்ளும் பண்பும் திறனும் அவருக்குண்டு."

—சிலம்புச் செல்வர், தாமரைச் செல்வர், திரு. ம.பொ. சிவஞானம். [செங்கோல், 2—7—72.]

1

பேராசிரியர் டாக்டர் மு. வ., பெருந்தமிழ்ச் செல்வர் — இந்திய விடுதலைக்குப்பின் கட்டுரை, கதை, நாடகம், கடிதம் ஆகிய நான்கு துறைகளிலும் சிறந்த தொண்டாற்றியுள்ள தமிழ்ப் பேரறிஞர் — பேராசிரியர் — டாக்டர் — மு.வ., அவர்களே என்று தெளிந்து துணிந்து கூறலாம். இதுவரை அறியப்பட்ட அவருடைய 83 நூல்களுள் கட்டுரைகள் 49. இவற்றையும் இலக்கிய விளக்கம் பற்றியன 13; இலக்கிய ஆராய்ச்சி பற்றியன 11; அரசியல் / சமூகம் / பொது பற்றியன 12; பயணம் பற்றியது 1; வாழ்க்கை வரலாற்று ஆய்வு பற்றியன 4; மொழியியல் பற்றியன 6; ஆங்கில நூல்கள் 2 என்று பாகுபாடு செய்யலாம். சிறுகதை நூல்கள் 2; நாவல்கள் 15; நாடகங்கள் 5*; கடித நூல்கள் 4.

இக்கணக்கீட்டால் பேராசிரியர் அவர்கட்கு எவ்வெவ் வகை இலக்கிய வடிவங்களில் எவ்வளவு ஈடுபாடு என்பது ஒருவாறு விளங்கும். நாடக வகையில் அவர்கள் நான்கு நூல்களே எழுதியிருந்தாலும் அத்துறையில் அவர்கட்கு மிகுந்த ஈடுபாடு உண்டு என்பதை அவரை அறிந்தார் அனைவரும் அறிவர். ஆயினும், நூல்களாக நான்கே நாடக நூல்கள் எழுதியிருப்பதற்குக் காரணம் விற்பனைக் கண்ணோட்டத்தில் நாடகம் படிப்போர் தொகை நலிவுற்று இருப்பதைக் கருதியே ஆகும் எனலாம்.

இனி, இந்த நான்கு நாடக நூல்களும் எவ்வகைப் பாகுபாட்டுக்கு உரியன என எண்ணலாம். 1. மனச்சான்று; 2. காதல் எங்கே?—

*நாடகங்கள் ஐந்தனுள், டாக்டர் அல்லி என்பது இவர்தம் அல்லி என்னும் நெடுங் கதையைத் தழுவி, திரு. டி. கே. கணபதி அவர்களால் எழுதப்பட்டது.

இவை இரண்டும் சமூகம் பற்றியன. 3. மூன்று நாடகங்கள். இந் நூலில் உள்ள நாடகங்களுள் முதலாவது இளங்கோ அடிகளையும், இரண்டாவது திலகவதியாரையும், மூன்ருவது முதலாம் இராசேந் திரனையும் பற்றியன. 4. பச்சையப்பர் வள்ளல் பற்றியது. இது வரலாறு.

இக் குறிப்பாலும் பேராசிரியரின் பெரிய ஈடுபாடுகள் புலனுகும். காசு, காதல், இலக்கியம், சமயம், வரலாறு இவை டாக்டர் மு.வ.-வின் தமிழ் நெஞ்சத்தைக் கவர்ந்தவை என்பது தெளிவு.

## 2

பேராசிரியரின் நாடகங்கள் பற்றிய இவ்வாய்வை, 1. கதை, 2. காட்சி அமைப்பு, 3. பாத்திரப் படைப்பு, 4. நடை நலம், 5. கருத்து வளம் என்னும் ஐந்து தலைப்புகளில் காணலாம்.

முதலாவது, **மனச்சான்று**. இந்நூலுள், 1. மனச்சான்று, 2. கிம்பளம், 3. ஏமாற்றம், 4. பொதுநலம் என்னும் நான்கு தலைப்பு களில் எழுதப் பெற்ற நான்கு ஓரங்க நாடகங்கள் உள்ளன. இந் நூலுக்கு 'முன்னுரை'யாகப் பேராசிரியர் பொறித்துள்ள நன்றியுரை வருமாறு :

> "கல்லூரிக் கழகங்களில் நடிப்பதற்கென்று யான் அவ்வப் போது எழுதிய நான்கு ஓரங்க நாடகங்களின் தொகுதியே இந்நூல். நாடகமாக நடித்த இளைஞர்களின் ஆர்வமும் ஊக்கமுமே இந்நூல் வெளிவரக் காரணமாக அமைந்தன. அவர்களுக்கு என் அன்பார்ந்த நன்றி உரியதாகும்."

**இனி, மனச்சான்றின் கதை :**

செங்கொழுந்து (சிவக்கொழுந்து ?) முதலியார் கள்ள வாணிபம் செய்கிருர் ; காந்தி பக்தர்போல் நடித்து அதிகாரிகளையும் மக்களையும் ஏமாற்றப் பார்க்கிருர். அவர் மகன் திருவேங்கடத்துக்கு இது பிடிக்க வில்லை. தந்தையோடு மாறுபட்டு வீட்டைவிட்டு வெளியேறிக் கல்லூரி விடுதியிலேயே வாழ முற்படுகிருன். மைந்தனின் பிரிவு தந்தையை வாட்டுகிறது. அந்த வாட்டுதலுக்கு இரையான தந்தையின் மனச் சான்று ஓங்கி ஒலிக்கிறது. 'இனிமேல் தவறு செய்வது இல்லை' என்று உறுதி கொள்கிருர். வீட்டை விட்டு வெளியேறி விடுதிக்குச் சென்ற மைந்தனும் தந்தைமேல் தயவுகொண்டு வீட்டுக்குத் திரும்புவதே முறை என்ற மனச்சான்றின் குரலுக்குப் பணிகிருன்.

இந்திய விடுதலையை ஒட்டி எழுந்த ஓரங்க நாடகம் இது. இந் நாடகம் 1950இல் நடைபெற்ற கலைவிழாவில் நடிக்கப்பெற்றதாக நினைவு. (இதன் முதல் பதிப்புப் பற்றிய குறிப்பை 1963இல் வெளி வந்துள்ள நான்காம் பதிப்புக் குறிப்பிடாதது ஒரு சிறு குறையே. ஆசிரியரின் நன்றியுரையும் நாளின்றிக் கையொப்பம் இடப்பட்டுள்ளது.

எனவே, இரண்டாம் உலகப் போருக்குப்பின் இந்தியாவில் தலைவிரித்தாடிய கள்ள வாணிபம் — கொள்ளை லாபப் பின்னணியில் — பேராசிரியரின் முதல் நாடகம் எழுந்ததில் பெரு வியப்பு இல்லை. அதிலும் சிறப்பாக 'அறமும் அரசியலும்' போற்றும் சமூக உணர்வு மிக்க சான்றோராகிய டாக்டர் மு.வ.-வின் மனச்சான்று கொதித்தெழுந்து சிந்திய முதல் தீப்பொறியே இந் நாடகம் எனலாம். மன்பதைக்கு என்றென்றும் தேவைப்படும் மனச்சான்றே பேராசிரியரின் முதல் நாடகத்தின் — முதல் நாடக நூலின் — பெயராய் அமைந்தது போற்றுதற்கு உரியதே ஆகும்.

3

'மனச்சான்று' நாடகத்தின் பாத்திரங்களைப் பார்ப்போம்: அவர்கள், 1. செங்கொழுந்து முதலியார், 2. அவர் மனைவி மாணிக்கவல்லி, 3. தபால்காரன், 4. போலீசு, 5. வேலைக்காரன்-பிரகஸ்பதி, 6. சி. ஐ. டி., 7. சிவக்கொழுந்து முதலியார் மகன் திருவேங்கடம், 8. மாணவர்கள் - நண்பர்கள், 9. டாக்டர், 10. குரல்.

இனி, இப்பாத்திரங்களின் துணைகொண்டு 'மனச்சான்று' ஓரங்க நாடக மலரின் இதழ்கள் ஒவ்வொன்றும் விரியும் எழிலையும் ஏற்றத்தையும் காண்போம்.

ஏழு காட்சிகளைப் பெற்றிருக்கும் இந்நாடகத்தின் முதல் காட்சி பற்றி ஆசிரியர் தரும் அறிமுகம் வருமாறு :

> "இடம் முதலியன : செங்கொழுந்து முதலியார் வீடு — கூடத்தில் நான்கு நாற்காலிகளும் இடையில் ஒரு சோபாவும் — அலங்காரமான சின்ன பெஞ்சு — அதன்மேல் பின்னல் வேலைப்பாடுள்ள ரோஜா நிறத்துணி — அதன்மேல் வெள்ளித் தட்டில் வெற்றிலை பாக்கு ஆரஞ்சுப் பழம் முதலியவை — செங்கொழுந்து முதலியார் சோபாவில் படுத்திருத்தல் —அவருடைய பார்வைக்கு எதிரே காந்தி படம் — அவர் அதைப் பார்த்துக்கொண்டே ஏதோ சிந்தனையில் இருக்கிறார் —பகல் 12 மணி."

இந்தச் சூழலில் முதல் காட்சி, செங்கொழுந்து முதலியாரின் பெருமூச்சோடு தொடங்குகிறது. வேலைக்காரனைச் செங்கொழுந்து முதலியார், 'டேய்! டேய்! (கொஞ்சம் பொறுத்து) டேஎய்!' என்று அழைக்கும் அழைப்பிலேயே அவருடைய உடல் — உள்ளச் சோர்வுகள் புலனாகின்றன.

செங்கொழுந்து முதலியார் துணைவியார் ஆரஞ்சுப் பழம் உரித்துக் கொடுக்கிறார். அதை மென்று தின்னாமல் விழுங்குகிறாராம் செங்கொழுந்து. இதனாலும், அவர் கவலை நெஞ்சம் கண்ணாடியாகிறது.

செங்கொழுந்து முதலியார் வெறும் கவலைக்காரராக மட்டும் இல்லை — கொஞ்சம் துணிச்சல்காரராயும் மாற முனைகிறார் என்பது முதலியார்க்கும் அவர் துணைவியார்க்கும் நடக்கும் உரையாடலால் நன்கு விளங்குகிறது.

மாணிக்: அப்படி இல்லைங்க! நம்ம டாக்டர் போனவாரம் இங்கே வந்தபோது இதைச் சொன்னார். அய்யா அடிக்கடி யோசனை பண்ணுகிறாரா என்று கேட்டார். சாப்பிட்ட பிறகு கவலை இல்லாமல் தூங்குகிறாரா என்று கேட்டார். இப்படியெல்லாம் கவனிக்கவேண்டும் என்று சொல்லிவிட்டுப் போனாருங்க. இல்லாவிட்டால் என்னென்னவோ நோய் வருமாம். என்னவோ அல்சராம், மூத்திர வியாதியாம், இரத்த நோயாம் என்னென்னவோ சொன்னாருங்க.

செங்: நல்ல காலம்! பைத்தியம் பிடிக்கும் என்று சொல்லவில்லையே? அதுதான் குறைச்சலாக இருக்கிறது.

மேலும், தொடரும் உரையாடல் வாயிலாக 'சந்தடி சாக்கில்' மிகப் பொருத்தமான வகையில், ஆசிரியர் முதலியாரின் மைந்தனின் பண்பு நலனையும் அறிமுகப்படுத்தி விடுகிறார்.

மாணிக்: அது டாக்டர் சொல்லவில்லைங்க. நம்ப பக்கத்து வீட்டுப் பாட்டியம்மா சொன்னார்கள். நம்ம பையனைப் பற்றித்தான் சொன்னார்கள். வெள்ளைக் காகிதத்திலே கருப்பெழுத்தை எந்த நேரமும் பார்த்துக்கொண்டே இருந்தால், ஒவ்வொருத்தருக்கு அப்படி ஆய்விடும் என்று சொன்னார்கள். டாக்டரைக் கேட்டால், அதெல்லாம் பொய் என்று சொன்னாருங்க.

செங்: நம்ம பையனைப் பற்றி அந்தப் பாட்டிக்கு என்ன தெரியும்? அது ஒரு கருநாடகம். டாக்டர் சொன்னதுதான் சரி.

இனி, அவரவர் பார்க்கும் பார்வையில் ஏற்படும் கோணமும் — கோணலுமே தவறான முடிவுகட்குக் காரணமாகின்றன என்பது பின்வரும் உரையாடலால் பிறங்கும்.

செங்: (வெற்றிலையை மென்றுகொண்டே) நான் அந்தக் காந்தி படத்தைப் பார்த்துக்கொண்டிருந்தேனே தவிர, வேறே யோசனை பண்ண'லை. எவ்வளவு பெரியவர்! எவ்வளவு பாடுபட்டார்! கடைசியில் ஒரு காசும் சேர்க்கவில்லை. சுட்டுப் போட்டுவிட்டார்கள். என்னத்தைக் கண்டார்?

காந்தியின் சாவுக்காக முதலைக் கண்ணீர் வடிக்கும் முதலியார் காந்தியைத் தன் கள்ள வாணிபத்துக்குப் பயன்படுத்த முனைவதுபற்றி அவரே வனையும் சொற்களைக் கேட்போம்.

செங் : என்ன உலகம்! அட உலகமே! இப்போது அவருடைய பேரைச் சொல்லி நாம் எல்லாம் எவ்வளவு பணம் சேர்க்கிருேம்? எல்லாம் அவரால்தானே? அதனுல்தான் நான் காந்தி பேரைச் சொல்லிக்கொண்டு யார் வந்தாலும் தருமம் செய்கிறேன். நேற்றுக்கூட, ஒரு சங்கத்துக்கு நூறு ரூபாய் கொடுத்தேன். பெரிய காந்தி படம் — இதைவிடப் பெரிய படம் — நிற்கிற மாதிரி காந்தி படம் — என்ன விலையானுலும் சரி — அவர்களுக்கு ஒன்று வாங்கிக் கொடுக்கப் போவதாகச் சொல்லியிருக்கிறேன்.

மாணிக் : ஆமாங்க, ஏதோ இன்கம்டேக்ஸ், இன்னும் என்னவோ கணக்கு என்னவோ தகராறு இருப்பதாகப் போன வாரம் சொன்னீர்களே, அது என்ன ஆச்சு?

செங் : அதுவா? அதற்காகத்தான் நேற்று அந்தக் காந்தி சங்கத்தாருக்கு நூறு ரூபாய் கொடுத்தேன். அந்தச் சங்கத்தில் இருப்பவர்களுக்கு ஆபீசர்கள் தெரியுமாம். அதனுல் அந்தப் படத்தைச் சீக்கிரத்தில் வாங்கிக் கொடுக்கப் போகிறேன். அதுவரையில் வழக்கை ஒத்திவைக்கும்படியாக வக்கீலுக்குச் சொல்லியிருக்கிறேன்.

மாணிக் : காந்தி படம் கொடுத்தால் விட்டுவிடுவார்களா? அப்படியானுல் —

செங் : நீ ஒரு பைத்தியம்! உனக்கு யார் சொல்லுவார்கள்? (எழுந்து போய் வெற்றிலையைத் துப்பிவிட்டு வந்து நடந்துகொண்டே) உனக்கு ஒன்றும் தெரியாது. சும்மா இரு.

மாணிக் : சரி! நான் வாயை மூடிக்கொள்கிறேன். இப்படியே கவலையெல்லாம் உங்கள் மனசிலேயே வைத்துக்கொண்டிருந்தால் —,

செங் : சே! இது ஒன்றும் கவலையில்லை. தந்திரம். லஞ்சமாகக் கொடுத்தால் கைநிறையக் கொடுக்கவேண்டும். அதற்காக இப்படிச் செய்யலாம் என்று பார்க்கிறேன்.

இந்த உரையாடலால், ‘உலகம் தெரிந்த’ ஆண்மகனும், ‘உலகம் தெரியாத’ பெண்மகளும் எத்தகையர் என்பது விளங்கும்.

மாணிக்கவல்லி அம்மையார் செங்கொழுந்து முதலியாரின் மனைவி மட்டும் அல்லர்; (ஒரு மகன்?) திருவேங்கடத்தைப் பெற்ற தாயும் அவர். அந்தத் தாயுள்ளம் வினவும் வினுவும் அதற்குத் தந்தையுள்ளம் தரும் விடையும் வருமாறு:

மாணிக்: எப்படியோ செய்யுங்கள். ஆனால், பையனுக்கு இதெல்லாம் எப்படிக் கற்றுக்கொடுப்பது?

செங்: இந்த வருசம் எம்.ஏ. தேர்வுக்குப் போகிறான். இதை முடித்துவிட்டால், அவன் ஏன் வியாபாரத்துக்கு வரணும்? பெரிய உத்தியோகத்துக்குப் போனால், அவனுடைய கால்மாட்டில் எத்தனையோ வியாபாரிகள் விழுந்து கிடப்பார்களே! அவனுக்கு என்ன குறைச்சல்?

மாணிக்: உத்தியோகத்திலே அவ்வளவாகச் சம்பாதிக்க முடியாது என்று பையன் சொன்னானே!

செங்: யார் சொன்னது! அவனே சொன்னானா? திருவேங்கடமா? (நடப்பதை விட்டு நிற்கிறார்.)

மாணிக்: ஆமாம்; பையன்தான்.

செங்: அட தெய்வமே! இதற்காகவா அவனை இவ்வளவு படிக்க வைத்தேன்? புலி வயிற்றில் பூனைக்குட்டி பிறக்கவேண்டுமா? அங்கங்கே நாற்பது ரூபாய் குமாஸ்தா நாலாயிரம் ஐயாயிரம் என்று சேர்த்து வைக்கிறான். இவனுக்கு இப்போதே கையாலாகாத பேச்சா?

மாணிக்: என்? பையன் விருப்பம்போல வியாபாரமே செய்யட்டுமே! நமக்கு என்ன? உங்களுக்குப் பின்னால் மண்டிக்கு ஆள் வேண்டுமே! உங்களுக்கும் துணை வேண்டுமே!

செங்: அடி பைத்தியமே! வியாபாரத்தில் நானும் சம்பாதித்தேன். என்னைப்போல் திறமை இவனுக்கு வருமா? உத்தியோகத்தில் கண்ணுக்கு மறைவாக நாலு காசு வாங்கிக் கைநிறையச் சேர்க்கத் தெரியாதவன் இவனா வியாபாரம் செய்ய முடியும்? வியாபாரம் என்றால் சும்மாவா? தலை போகிற வேலை ஆச்சே! போன மாதத்தில் சர்க்கரைப் பஞ்சம் வந்தது. திடீரென்று நூறு மூட்டையைப் பதுக்கி வைத்தேன். எங்கே வைத்தேன், எப்படி வைத்தேன், எந்த வகையில் செலவு செய்தேன், எத்தனை ஆயிரம் எனக்கு லாபம் வந்தது இதெல்லாம் யாருக்காவது தெரியுமா? உனக்குச் சொல்லியிருப்பேனா? யாருக்காவது மூச்சுவிட்டிருப்பேனா? தெரிந்திருந்தால் என்ன ஆயிருக்கும்? தலைபோயிருக்கும். வீடு,வாசல், மானம் எல்லாம் போயிருக்குமே! எத்தனை பேருக்கு என்னென்ன லஞ்சம் கொடுத்தேன். இந்தக் காசுக்கெல்லாம் ஒரு துண்டுக் காகிதத்தில் கணக்கு உண்டா? எல்லாம் இங்கே தான்! (தன் நெற்றியைச் சுட்டிக் கொள்கிறார்.)

மாணிக்: ஏனுங்க இவ்வளவு பயமான வேலே?

செங்: சே! நீ சும்மா இரு. என்னவோ நடுங்குகிருயே!

மாணிக்: அப்படியானுல் பையனுக்கு வேண்டாங்க வியாபாரம்.

தாய் - தந்தையர் உரையாடல் திருவேங்கடத்திற்கு ஒரு வி. பி. பி. கொண்டு வந்த தபால்காரரால் சற்றே இடையீடுபடுகிறது—ஆனுல் செங்கொழுந்து முதலியாரின் கள்ள வாணிபத்தை — அதற்கான முறைகளுள் ஒன்றை அறிந்துகொள்ள அந்த நிகழ்ச்சியும் பயன்படு கிறது. முதலியார்—தபால்காரர் உரையாடல் வருமாறு :

செங்: வாங்க !

தபால்: ஒரு வி. பி. பி. இருக்கிறது. உங்கள் பையன் பேருக்கு இருக் கிறது. (புத்தகக் கட்டை எடுத்துக் காட்டல்.)

செங்: (நாற்காலியில் உட்கார்ந்து) சரி, நல்லது. எவ்வளவு பணம் கட்டணும்? நான் கட்டுகிறேன்.

தபால்: ஒன்பது ரூபாய் பத்தணு.

செங்: மாணிக்கம்! போய்க் கொண்டுவா. (தபால்காரர் கையெழுத் துக்கு இடம் காட்டுகிருர். செங்கொழுந்து முதலியார் கையெழுத்துப் போடுகிருர். மனேவி உள்ளே போய்ப் பணம் கொண்டுவந்து கொடுக்கிருள். தபால்காரர் பணத்தைப் பெற்றுக்கொண்டு புத்தகக் கட்டைக் கொடுத்துவிட்டு விடை பெறுகிருர்.)

தபால்: வரேனுங்க.

செங்: அய்யா! ஒரு சின்ன உதவி.

தபால்: என்ன சொல்லுங்க.

செங்: இந்த வாரத்தில் மண்டித் தெருவில் யாருக்காவது கல்கத்தாவி லிருந்து ஏதாவது பாஸ் வந்திருக்குமா?

தபால்: நேற்று, ச. மு. க. தா. வுக்கு (சனு முனு கனு தானுவுக்கு) ஒன்று வந்தது. அது என்னவோ தெரியாதுங்க.

செங்: பம்பாயிலிருந்து?

தபால்: நினேவு இல்லேங்க. இனிமேல் வந்தால் சொல்வேன்.

செங்: கொஞ்சம் நினைவு இருக்கட்டும். வியாபாரம், லாட்டரிச்சிட்டு மாதிரிதான். உங்கள் உதவியெல்லாம் இருந்தால்தான் நாங்கள் பிழைக்க முடியும். உதவியை மறக்க மாட்டோம்.

தபால்: அதற்கென்னங்க! போய் வரேனுங்க.

இவ்வளவு தபால்காரரிடம் 'கெஞ்சும்' சிவக்கொழுந்து முதலியார் அவர் திரும்பிச் செல்வதைக் கண்ணெடுத்தும் பார்க்காமல், போய் வாங்க! போய் வாங்க என்று விடை கொடுத்து அனுப்புகிறார். பின்னர்ப் புத்தகங்களை ஒவ்வொன்றாக எடுத்துப் பெயர் படிக்கிறார். (பிள்ளைக்கு வந்த புத்தகக் கட்டை இவர் பிரித்துப் பார்ப்பதே அவ்வளவு சரியா? நாகரிகமா? என்று நினைத்தலும் இக்காலத்தில் இயற்கை.

உத்தம வாழ்க்கை
சத்திய சோதனை
மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்
காந்தி அண்ணல்
அணுசக்தி யோகம்
மாணவர்க்குக் காந்தியடிகள்

இவற்றுள் மூன்றாவது தமிழ் முனிவர் திரு. வி. க. எழுதியது. நான்காவது பேராசிரியரே எழுதிய புத்தகம் ஒன்றின் தலைப்பு. மற்றவை எல்லாம் அண்ணல் காந்தி அடிகள் எழுதியவையே. மேற்குறிப்பிட்ட புத்தகங்களைப் பார்த்ததும் முதலியார் புலம்பியவை வருமாறு :

> அட தெய்வமே! மாணிக்கம்! இது என்ன தொல்லை? என்னவோ என்று பார்த்தால், இந்தப் பையன் எல்லாம் காந்தி காந்தி காந்தி என்று புத்தகங்களைத் தருவிக்கிறான். இதற்கு வேறே ரூபாய் தண்டமா? இதுதான் எம். ஏ. படிக்கிற அழகா! சரிதான்! என்ன பாடுபட்டாலும் அவன் போக்கு இப்படிப் போகிறதே! சரிதான், சிச்சி! மடப்பயன்! (என்று சொல்லிக்கொண்டே எழுந்து பக்கத்து அறைக்கு நடக்கிறார்.)

முதலியார் பக்கத்து அறைக்கு நடக்கும் காரணம் பின்னர் விளங்கும். அதை நாம் அறியோம். ஆனால் ஆசிரியர் அறிவார் அல்லவா?

முதல் காட்சி இத்துடன் முடிந்து இரண்டாம் காட்சி ஆரம்பமாகிறது. இந்தக் காட்சி பற்றிய அறிமுகம் வருமாறு :

> செங்கொழுந்து முதலியார் வீட்டின் எதிரே தெருவில் அவருடைய வேலையாள் பிரகஸ்பதியை ஒரு போலீசுகாரனும் மற்றொரு சி. ஐ. டி. யும் மடக்கி நிற்கிறார்கள்.

இந்தக் காட்சியில் நடைபெறும் உரையாடலால் வேலைக்காரன்—போலீசுகாரர் இயல்புகள் நன்கு விளங்குகின்றன. இதன் காரணமாக நகைச்சுவைக்கும் இக்காட்சியில் இடம் ஏற்படுகிறது. ஒரு சான்று:

சி. ஐ. டி: இந்த வீட்டிலே எத்தனை அறை இருக்கிறது?

பிர: ஒண்ணு, ரண்டு, மூணு, நாலு, அஞ்சி, ஆறு —

சி. ஐ. டி: ஆறுதானா?

பிர: இதோவரேன் இருங்க. ஒண்ணு, ரண்டு, மூணு, நாலு, அஞ்சி, ஆறு, ஏழு, ஏழு, ஏழு.

சி. ஐ. டி: அட என்னடா? எத்தனை ஏழுடா?

பிர: இதோ வரேன். இருங்க (எங்கேயோ பார்த்துக் கொண்டு கூட்டு விரலால் எதையோ எண்ணிக் கொண்டு) ஒண்ணு, ரண்டு, மூணு, நாலு, அஞ்சி, ஆறு, ஏழு, எட்டு, எட்டு, எட்டு.

சி. ஐ. டி: அட என்னடா? பைத்தியமா?

பிர: பைத்தியம் இல்லைங்க! பிரகஸ்பதிங்க.

போலீசு: இதெல்லாம் கேட்கிற இடத்தில் கேட்கணுங்க. கொடுக்கிற உதை கொடுக்கணுங்க.

பிர: (நடுங்கிப்போய்) இல்லைங்க! எட்டுக்கு மேலே என்னவோ சொல்வார்களே, அது வரலைங்க !

சி. ஐ. டி: ஒன்பதாடா ?

பிர: ஆம்! ஆம்! ஒம்பத்து, ஒம்பத்து, அதுதானுங்க.

சி. ஐ. டி: ஒன்பது அறையாடா?

பிர: இல்லைங்க! இன்னும் இருக்குதுங்க.

சி. ஐ. டி: பத்தாடா ?

பிர: நீங்க பூசை அறையை மட்டும் சொல்கிறீர்கள்! அதற்குள்ளே இன்னொரு கதவு வைத்திருக்குதுங்க!

போலீசு: கன்னத்திலே பத்து அறை கொடுங்கள். அப்போதுதான் பதினோராவது அறையைப் பற்றிச் சொல்வான்.

சி. ஐ. டி: பதினொன்று? சொல்லித் தொலை.

பிர: அதுக்குமேலே தெரியாதுங்க! ஒரு நாள் கலெக்டர், காந்தி செட்டியார் எல்லாம் வந்து பார்த்தார்கள். என்னை வெளியே நிற்க வைத்திட்டார்கள்.

நகைச்சுவை நிறைந்த இந்தப் பகுதியில் கருத்துச் சுவையும் இருப்பது காணத் தக்கது. பூசை அறைக்குள் இன்னொரு அறை இருப்பது கள்ள வாணிபத்துக்குக் கடவுளைக் காவலாக்கும் கலையைக் காட்டுகிறது. இந் நிலை நாட்டில் தொடர்ந்து இருப்பதை முதலமைச்சர் நிலையில் இருந்தபோது பேரறிஞர் அண்ணாவும் சுட்டிக் காட்டியது நினையத் தக்கது. அவ்வாறே கள்ள வாணிப அறையை ஒருநாள் கலெக்டரும் காந்தி செட்டியாரும் வந்து பார்த்த 'மர்மம்' எண்ணத் தக்கது.

இக் காட்சியில் வேலையாள் பிரகஸ்பதி எவ்வளவு கரவற்ற முட்டாள் என்பதையும் ஆசிரியர் பாரதியாரைப் போலவே (பார்க்க: அவர் பாடிய கண்ணன் என் சேவகன்) பாமர இயல்பை எவ்வளவு உண்மை யாக அறிந்து உணர்த்துகிறார் என்பதையும் பின்வரும் உரை யாடல் விளக்கும்.

சி. ஐ. டி: தூங்கும்போது ஏதாவது சத்தம் கேட்டு விழிக்கிறதில்லையா?

பிர: நாய் குலைக்கிற சத்தம் கேட்டு விழிப்பேனுங்க. ஆனால், எமன் வரும்போது நாய் குலைக்கும் என்று பெரியவர்கள் சொல் வார்கள். அதனாலே கண்ணைத் திறக்காமலே இருந்துவிட்டுத் தூங்கிவிடுவேன்.

மூன்றாவது காட்சியில் மாணிக்கவல்லி அம்மையார், அவர் கணவர் சிவக்கொழுந்து, அவர்கள் பிள்ளை திருவேங்கடம், அவர்கள் வேலையாள் பிரகு, சிவக்கொழுந்தின் நண்பர் ஆகியோர் இடம் பெறுகின்றனர்.

இக்காட்சியில் முதலில் வேலைக்காரன் பிரகுவுக்கும் மாணிக்கவல்லி அம்மையாருக்கும் இடையே நடைபெறும் உரையாடலால் விளங்கும் உண்மை இரண்டெனலாம். ஒன்று: கல்லானாலும் கணவன்; புல்லானாலும் புருசன் என்று எண்ணும் பழங்கால மரபினராகிய மாணிக்கவல்லி அம்மையார் தன் கணவன் செய்யும் தவறுகளைத் தவறென்று அறிந்திருந்தும் சரியென்றே நடைமுறையில் கொண்டு அவருக்கு அல்லல் ஒன்றும் வரலாகாது என்று அலமருகிறார். இரண்டு: உள்வீட்டு ரகசியம் எல்லாம் ஊரம்பலத்துக்கு வருவது எப்போதும் வேலைக்காரர்களாலேயே என்பது. (பார்க்க: பாரதியாரின் கண்ணன் என் சேவகன்)

மாணிக்கவல்லி—பிரகு உரையாடலுக்கு ஊடே காந்தியத்தில் ஈடுபாடுள்ள திருவேங்கடம் 'டக், டக்' என்று நுழைகிறான் (! ?) அவன் அவ்வாறு நுழைவது கூட நேர்மையின் துடிப்பாகலாம். ஆனால் அவன் ஏன் கோட் அணிந்திருக்கிறான் என்று புரியவில்லை.

இனித் தொடரும் உரையாடலால் வேலைக்காரர்கட்குப் பெரிதும் தங்கள் வீடுகளில் என்ன உரிமை இல்லாததால்—அல்லது என்ன உள் வீட்டு உரிமை இருந்தும் அயல் வீட்டுப் பிச்சையால் எதனால் நம்பத்தகாதவர்கள் ஆகிறார்கள் என்பது விளங்குகிறது. ஆனால் இந் நாடகத்தில் அதற்குச் சான்றில்லை. ஏன்? ஒரு வேளை வேலைக்காரனுக்கும் மனச்சான்று இருப்பதன் விளைவோ அது? குறிப்பிட்ட உரையாடல் வருமாறு:

மாணிக்: அவனை ஒன்றும் கேட்காதேப்பா. நான் கேட்டதே போதும்.

திரு: அவனா பைத்தியக்காரன்? காரியப் பைத்தியக்காரன். பக்கத்து வீட்டிலும் எதிர் வீட்டிலும் வெற்றிலைப் பாக்கு பிச்சை வாங்கிப் போட்டுக் கொள்கிற புத்தி, சொன்னாலும் போகாது. சொல்வார் பேச்சைக் கேட்டுக் கொண்டு போலீசுகாரரிடம் என்னென்னவோ சொல்லிக் கலகம் பண்ணிவிட்டு வந்திருக்கிறான். அப்பாவுக்குச் சொல்லி—

வேலைக்காரனுக்கும் காந்தி ஆர்வலன் திருவேங்கடத்துக்கும் நடக்கும் உரையாடலில் உள்ளூற இரக்கம் இருப்பதாகவே தோன்றுகிறது. ஆனால் ஒருமையில் (ஏக வசனத்தில்) அவன் பேசும் பேச்சிலும், 'எசமானத்துவம்' இருக்கவே செய்கிறது.

இந்தக் காட்சியில் முதலியாரும் நண்பரும் பேசிக் கொள்ளும் பேச்சில் உயிர்நிலையான பகுதி வருமாறு :

நண்பர்: ஆ ஆ! தாராளமாக வாங்க. நான் என்ன சர்க்கார் உத்தியோகஸ்தனா? என் மைத்துனர் ஆபீசராக இருந்தால், என் வீட்டுக்கு வரக்கூடாதா, என்ன? தாராளமாக வாங்க. ஆனால் ஒன்று (மெல்ல) உங்கள் மண்டிக் குமஸ்தா, வீட்டு வேலைக்காரர் எல்லோருக்கும் சொல்லி வைத்துவிடுங்கள். எதை விற்றாலும் வாயை மட்டும் விற்கக் கூடாது. (புறப்பட எழுகிறார்.)

இப்பகுதியால் முதலியாரின் கள்ள வாணிபம் சிக்கலில் சிக்கி விட்டதும் அதை அவிழ்க்க — தேவையானால் — அறுக்க அவர் துணிந்து விட்டதும் நன்கு புலனாகும்.

இந்த மூன்றாவது காட்சியிலேயே திருவேங்கடத்தின் பண்பு நலனும் பளிச்சிடுகிறது. இவ் உண்மைக்கு உரைகல்லாகும் உரையாடல்கள்:

திரு: என்ன'மா இது? இவனுக்குப் பைத்தியம் என்று பார்த்தால் உனக்கே பைத்தியமாக இருக்குது! காரணம் இல்லாமல் இப்படிப் பேசுகிறாயே. (சிறிது எண்ணுகிறான்.) ஓ ஓ! தெரிந்து கொண்டேன். குற்றமுள்ள நெஞ்சுதான் குறுகுறு என்னும். அப்பா வியாபாரத்தில் ஏதோ தப்பு செய்கிறார். அதனாலே

தான் நீ இப்படிப் பேசுகிறாய். சரி, சரி — பிளாக்மார்க்கெட் காந்தி படத்தின் நிழலிலே வந்துவிட்டதா? கல்லூரிப் பிள்ளைகள் என்னைக் கேலி செய்தது சரிதான்—(அப்போது எதிர்பாராமல் சிவக்கொழுந்து இன்னொருவருடன் நுழைகிறார். மாணிக்கவல்லி மகனைக் கையைப் பிடித்து உள்ளே அழைத்துச் செல்கிறாள். வேலைக்காரன் கண்ணைத் துடைத்துக் கொண்டே பரபரப்பாக இங்கும் அங்கும் பார்க்கிறான். அவன் முகத்தில் கலக்கம்.)

திரு: (ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு) அம்மா! அவனுவது ஏழைப் பைத்தியம்! நாம் பணக்காரப் பைத்தியம் ஆகாமல் பார்த்துக் கொள்ள'னும் அம்மா! இதோ காந்திபடம் இருக்கிறது. மனத்தைத் தொட்டுப் பார்த்து — (தாயின் பார்வை அவனுடைய பேச்சைத் தடுக்கிறது. சிவக்கொழுந்து ஒன்றும் விளங்காமல் மாறி மாறி மனைவியின் முகத்தையும் மகனுடைய முகத்தையும் பார்க்கிறார்; மனம் தடுமாறுகிறார்; பெரு மூச்சு விடுகிறார். திருவேங்கடத்துக்குப் பேச வாய் எழவில்லை. பேசாமல் வெளியே போகிறான்.)

'மனச்சான்று' நாடகத்தின் நடுநாயகமாக இருக்கும் நான்காவது காட்சியில் (மிகப் பொருத்தமாக) மனச்சான்றின் குரல் 'கணீர்' என்று ஒலிக்கிறது. இதோ அந்த மணியோசை :

குரல்: நீ சொன்னதில் தவறு என்ன? உண்மையைத் தானே சொன்னாய்? உன் தந்தையார் காந்தி பக்தரா? காந்தி படத்தை வீட்டில் மாட்டிவிட்டால் போதுமா? சங்கங்களுக்குக் காந்தி படத்தைப் பெரிய அளவில் வாங்கிக் கொடுத்தால் போதுமா? காந்தி பிறந்த நாளில் நூறு ஏழைகளுக்குக் கஞ்சி வார்த்துவிட்டால் போதுமா? உன் வீட்டில் நீ வளரும் வீட்டில் காந்தி வெறுத்த திருடு நடக்கிறதே. இதை நீ கண்ணால் பார்த்துக் கொண்டு, காதால் கேட்டுக்கொண்டு, வாயை மூடிக்கொண்டு, இருக்க வேண்டுமா? (பெருமூச்சு. நிற்கிறான். தலையை அசைக்கிறான். கையை நொடிக்கிறான்.) நீ கோழை. வாயை மூடிக் கொண்டிருந்தால் நீ கோழை. படிப்பது காந்தி புத்தகம். பார்ப்பது காந்தி படம். நம்புவது காந்தி நெறி. பேசுவது காந்தி புகழ். தின்பது திருட்டுச் சோறு—சி! சி! இந்தத் துரோக வாழ்க்கை உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்றாக வாழும் வாழ்க்கை, ஏமாற்றும் வாழ்க்கை, ஏழைகளை உறிஞ்சும் வாழ்க்கை — இந்தச் சீர்கெட்ட வாழ்க்கையில் உனக்கும் பங்கு இருக்க வேண்டுமா? (பரபரப்பாக உலவுகிறான்.)

திரு: உலகம் என்னைப் பழிக்கும். என்னை நன்றி கெட்டவன் என்று உலகம் பழிக்கும். பெற்ற தகப்பனுக்குத் துரோகம் செய்தவன் என்று உலகம் பழிக்கும். நான் துரோகியா?

குரல்: தகப்பனைவிட, குடும்பத்தைவிட அறம் பெரியது அல்லவா? பெற்ற தாயின் பசியைக் கண்டாலும் காணலாம். சான்றோர் களின் அறநெறியை விட்டு அப்பால் செல்லக் கூடாது என்று திருவள்ளுவர் வற்புறுத்தவில்லையா? காந்தியடிகள் காட்டிய அறம் பெரியது அல்லவா? தந்தைக்கு அடங்கி வாழ்வதா பெரியது? தாயின் கண்ணீரா பெரியது? திருவள்ளுவரை வணங்கும் நீ, திருக்குறளைப் படிக்கும் நீ, அறத்தையே கடவுளாகக் கொண்ட தமிழரின் மரபில் பிறந்த நீ, தாயின் கண்ணீருக்காகத் தயங்குவதா? தந்தையின் ஆத்திரத்துக்காக அஞ்சுவதா? திருவள்ளுவரைப் படித்த தமிழனாகிய நீ காந்தியைப் போற்றாவிட்டால், காந்தி நெறியில் நடக்காவிட்டால், உலகத்தில் வேறு எந்த நாட்டார் போற்று வார்கள்? வேறு எந்த நாட்டார் நடப்பார்கள்? (தயக்கம், அமைதி.)

திரு: போகட்டும். போனால் போகட்டும். படிப்புத் தானே? எம்.ஏ. பட்டம் போய்விடுமா? போனால் போகட்டும். இன்னும் ஆறுமாதம் படிப்பதற்குத் தந்தையார் பணம் கொடுக்க மாட்டார். அவ்வளவு தானே! இந்த உலகத்தில் வேறு யாரும் உதவ மாட்டார்களா? பார்க்கலாம். (துணிவு) — சரி.

குரல்: என்ன ஆனாலும் ஆகட்டும். இனி அந்த வீட்டு வழியே எட்டிப் பார்க்கக் கூடாது. கள்ளமார்க்கெட்டும் காந்திநெறியும் ஒன்றாக வாழவே முடியாது. என்னை யார் என்ன பழித்தாலும் பழிக்கட்டும். பூசை அறை, அதற்குள்ளே கள்ள வியாபாரம் — பிளாக்மார்க்கெட் கணக்கு — கடவுளுக்குத் துரோகம், அறத்துக்குத் துரோகம், மனித சமுதாயத்துக்குத் துரோகம், தமிழினத்துக்கே துரோகம், உனக்கு நீயே துரோகம் செய்து கொள்ள வேண்டுமா?

திரு: சீ! சீ! இனி இந்த வீட்டு வாசற்படியில் கால் வைக்கவே மாட்டேன். என் படிப்புக்கு, என் வாழ்வுக்கு, இன்றோடு முற்றுப்புள்ளி வைத்தாலும் சரியே! என்ன வந்தாலும் வரட் டும் — (பரபரப்பாக நடந்து போய்விடுகிறான்.)

இந்த உரையாடலால் விளங்கும் பேருண்மை ஆசிரியருக்குத் தமிழ்ப் பண்பிலும் காந்திய நெறியிலும் இருக்கும் இணையான—இணையில்லா ஈடுபாடே ஆகும். தமிழ் மண்ணில் காலூன்றியே அவர் காந்திய விண்ணிற்குப் பறக்க முயல்கிறார்.

ஐந்தாம் காட்சி நான்காம் காட்சியின் செறிவுக்கு மாற்றம் காணும் நெகிழ்ச்சி பெற்றுள்ளது. இக்காட்சி நடைபெறும் இடம் கல்லூரி மாணவர் விடுதி, 128 எண் அறையில். இந்த எண்ணுள்ள பச்சையப்பர் உணவு விடுதியில் மூன்றாண்டுக்காலம் இக்கட்டுரையாளன் வாழ்ந்தான்.

அக் காலமே இந் நாடகம் இயற்றப்பட்டதாகும். இங்கே மாணவர்கட்கு இடையே நடைபெறும் உரையாடல் அவர்கள் உலகத்தில் வலுத்துள்ள போக்கை விளக்கும். இக் காட்சி தரும் உரையாடல்களில் உயிராக விளங்கும் சில பகுதிகள்:

இரண்: போதும் நிறுத்தய்யா. இதெல்லாம் பைத்தியக்காரத்தனம். Practical life — வாழ்க்கை வேறு. Ethics — நீதி வேறு. இந்த இரண்டையும் ஒன்ருகச் சேர்க்கக் கூடாது. நாம் தேர்வுக்குப் படிக்கிறோம்: அதனுல் அறிவுவளர்கிறதா! அறிவு வளர்வதற்கு வேறே வழி தேடிக் கொள்ள வேண்டும். அது போல்தான் இதுவும். திருவேங்கடம் இருக்கிருனே அவன் பைத்தியக் காரன். சென்ற ஆண்டில் தமிழ் மன்றத்தில் அவன் பேசினுனே, அப்போதே நான் சொல்லவில்லையா? அவன் உருப்படியாக மாட்டான் என்பது அவன் பேச்சாலேயே தெரிந்துவிட்டது. திருக்குறளும் சத்திய சோதனையும் படித்து விட்டால், அப்படியே நடக்க வேண்டுமா, என்ன? படிக்கிறவர்கள் எல்லோரும் நடக்கிருர்களா? நமக்கு என்ன'ப்பா தொல்லை! Eat,live and be merry உண்க வாழ்க களிக்க, இதுதான் நம்ம வேதாந்தம்.

முதல்: Eat, smoke and be merry உண்க புகைக்க களிக்க என்று சொல்லய்யா!

இரண்: அப்படிச் சொல்லப்பா ! நம்ம கட்சியில் எப்படியோ சேர்ந்து விட்டாயே!

முதல்: அப்பா பெரிய கள்ளமார்க்கெட் பேர்வழி. அது இவனுக்குப் பிடிக்கவில்லை. அதிலேயிருந்து வளர்ந்திருக்கிறது.

இரண்: அட பைத்தியமே. சர்வம் கள்ளமார்க்கெட் மயம் ஜகத். இவனுக்கு ஏன் இந்த மூளைக் கோளாறு? இவனு செய்கிருன்? எவனே அப்பன் சம்பாதிக்கிருன். அந்தக் கிழம் சம்பாதித்துச் சேர்த்து வைத்துவிட்டுச் சாகட்டுமே. இவன் ஜம் என்று பிற்காலத்தில் அனுபவிக்கலாமே.

ஆருவது காட்சி செங்கொழுந்துவின் மனச்சான்று அவர்க்கு ஏற்படுத்திவிட்ட ஆருத மனப்புண்களைக் காட்டுகிறது. அவர் பிதற்றலும் அவர் மனைவியார் புலம்பலும் டாக்டர் — நண்பரின்— ஆறுதலும் நெருக்கடியின் உச்ச நிலையைக் காட்டுகின்றன.

டாக்டர் : அம்மா? யாராவது கேட்டால், சுமாராக இருக்கிருர்' என்று சொல்லுங்கள். இல்லாவிட்டால், ஊரெல்லாம் இதே பேச்சாகிவிடுகிறது. நான் வைத்தியம் செய்வதும் அல்லாமல், இவருக்காக வாதாட வேண்டியிருக்கிறது. தலைபோகிற

நிலைமையாக முற்றிப் போயிருக்கும். பெரியவர், மனிதர், தான தருமம் செய்கிறவர் நல்லவர் என்றெல்லாம் சொல்லி வழக்குக்கு இடமில்லாமல் செய்து வருகிறேன். அவர் நம் நினைவோடு இருந்தால் சொன்னபடி செய்வார். அது வேறே இடையூறு. இப்போது நீங்கள்தான் குடும்பத்தைக் காப் பாற்ற வேண்டும். ஐயாயிரம் கையிலிருந்தால் வழக்கே இல்லாமல் செய்து விடலாம். இல்லாவிட்டால், இவருக்கு உடம்பு தேறிப் பழைய நினைவு வந்த பிறகு, வழக்குத் தொடங்கி விட்டால், பைத்தியம் பிடித்தாலும் பிடித்துவிடும்.

*மாணிக்:* அய்யோ, தெய்வமே! என் தலைவிதியா?

*டாக்டர்:* இதென்ன'மா இது! அக்கம்பக்கம் தெரிந்தால் தொல்லை. என் பேரும் கெடும். உங்கள் விருப்பம். நான் போகிறேன்.

*மாணிக்:* பணத்துக்காகச் சொல்ல வில்லைங்க. என் நகையை விற்றுவது கொடுக்கிறேன். அவர் நல்லபடி இருக்க'ணுமே!

*டாக்டர்:* நீங்கள் பேசாமல் இருங்கள். உங்கள் பையன் வீட்டை விட்டுப் போனது வேறே தவறு. அதை பற்றித் தப்பாகச் சொல்லித் தூற்றிவிடுவார்கள். (செங்கொழுந்து முதலியார் மறுபடியும் புரண்டு வாய் பிதற்றுகிறார். அவர் சொல்வது சரியாகக் கேட்கவில்லை. மறுபடியும் வாய்பிதற்றுகிறார். டாக்டர் உற்றுக் கேட்கிறார்).

*செங்:* இனிமேல் இந்தத் தொல்லைக்கே போவதில்லைங்க. இப்போது மட்டும் எப்படியாவது என்னைக் காப்பாற்றிடுங்க. காலில் விழுந்து கேட்டுக்கொள்'றேனுங்க. (வாய்பிதற்றிக் கொண்டே இரண்டு கைகளையும் குவித்துக்கொண்டு கட்டிலில் இருந்து புரண்டு அவர் கீழே விழத் தொடங்குகிறார். டாக்டர் அவரைத் தாங்கிக் கொண்டு தடுக்கிறார்.)

*மாணிக்:* பார்த்தீர்களா? இரவெல்லாம் இதே தொல்லைங்க.

*டாக்டர்:* ஆமாம் அம்மா, இருக்கும், இருக்கும். மனச்சான்று இல்லாதவர்கள் கல்மனம் உடையவர்கள் திருடும் தீங்கும் செய்து செய்து பழகிவிடுவார்கள். இவரைப் போல் நல்லவர்கள் செய்தால் அகப்பட்டுக் கொள்கிறார்கள். என்ன செய்யலாம்? ஒன்றும் பயமில்லை. நீங்கள் தைரியமாக இருங்கள். கவலைப்படாதீர்கள். ஆனால் இந்தச் சமயத்தில் பையன் வீட்டைவிட்டுப் போனதுதான் எனக்குப் பிடிக்க வில்லை.

*மாணிக்:* அவனை என்ன செய்வது? என்ன சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறான். வேலைக்காரனிடம் சொல்லி அனுப்பிய

பிறகு வந்தான். சொல்லிச் சொல்லிப் பார்த்தேன்; கண்ணீர் விடுகிறுன், வருந்துகிறுன், அப்பாவைப் பார்த்து அழுகிறுன். ஆனுல் இனிமேல் வீட்டில் சாப்பிடமாட்டேன், விடுதியில்தான் இருந்து படிப்பேன் என்கிறுன். என் கையில் இருந்து இருநூறு ரூபாயை எடுத்துக்கொண்டு போயிருக்கிறுன். வேளை வேளைக்கு வந்து தைரியம் சொல்கிறுன். மருந்து வார்த்துக் கொடுக்கிறுன். தைலம்போட்டுத் தேய்க்கிறுன். எல்லா உதவியும் செய்கிறுன்.

*டாக்டர்:* சரி, மெல்ல மெல்ல வந்து சாப்பிடுவான். அவனையும் பகையாக்கிக் கொள்ளக் கூடாது.

*மாணிக்:* என்ன'ங்க! அப்படிச் சொல்கிறீர்களே. பெற்ற பிள்ளையைப் பகையாக்கிக் கொள்வோமா?

ஏழாவது காட்சியே இறுதியான காட்சி. மாலை 6. 30-க்குப் பூங்காவில் நடைபெறும் இந்தக் காட்சியில் பாத்திரங்கள் திரு வேங்கடமும் அவன் நண்பருமே. மனச்சான்றும் குரல் வடிவில் ஒரு பெரும் பாத்திரமாகச் செயல்படுகிறது. அதன் செயல்பாட்டையும் பண்பாட்டையும் விளக்கும் சொற்பாடுகள் வருமாறு:

*நண்பன்:* குற்றத்தை எடுத்துக் காட்டுவதற்கும் குறை கூறுவதற்கும் ஒரு பட்டதாரி வேண்டியதில்லை; ஒரு கல்லூரி மாணவன் வேண்டியதில்லை; ஒரு காந்தியன்பர் வேண்டியதில்லை. தெருவில் போகின்றவர் அந்த வேலையைச் செய்ய முடியும். குற்றத்தை எடுத்துக் காட்டினுல் போதுமா? திருத்துவதற்கு முயற்சியும் செய்ய வேண்டும். என்னவோ, நேராக வீட்டை விட்டு மூட்டையைச் சுருட்டிக்கொண்டு விடுதிக்கு வந்து விட்டாயே. இதுதான் காந்தி நெறியா? மனைவி மக்களை விட்டுவிட்டுக் கமண்டலத்தை எடுத்துக்கொண்டு பழங்காலத்தில் காட்டுக்கு ஓடிப் போய் விடுவார்களாம் சில ஆசாமிகள். அந்தக் கதையாக இருக்கிறதே, இது!

*திரு:* (பெருமூச்சு, அமைதி)

*நண்பன்:* அப்படி ஓடிப்போக வேண்டும் என்று உங்கள் காந்தி சொல்லவில்லையே?

*திரு:* உங்கள் காந்தி! உங்கள் காந்தி?

*நண்பன்:* (தோள்மேல் கைவைத்து) இதற்கெல்லாம் கோபித்துக் கொள்ளாதேப்பா. சும்மா சொன்னேன். நம் காந்தி தான். போகட்டும். பகைவரையும் திருத்த வேண்டும் என்பதுதான் காந்தி நெறி, திருவள்ளுவர் நெறி. உன்னைப் போல்,

பெற்றோரையும் பகைவராக்கிக் கொள்வது காந்திநெறி ஆகுமா?

திரு: உனக்கு ஒன்றும் தெரியாது, சும்மா இரு'ப்பா. மனச்சான்று என்பது இல்லாத ஆள் நீ. உனக்குத் தெரியாது.

நண்பன்: சரி. அப்படியே இருக்கட்டும். ஒப்புக்கொள்கிறேன். நான் மனச்சான்று இல்லாதவன்தான். இருக்கட்டும். ஆனல் ஒன்று கேட்கிறேன். நீ யாரை ஆதரிக்கிருய்? மனச்சான்று அடியோடு இல்லாதவர்களையா, அரைகுறையாகவாவது மனச்சான்று கொஞ்சம் உடையவர்களையா? (திருவேங்கடம் பேசாமலிருக்கிருன்) சரி. என்னேடு பேசவும் உனக்கு விருப்பம் இல்லை என்று தெரிகிறது. நான் புறப்படுகிறேன். ஆனல், போவதற்குமுன் ஒன்று மட்டும் சொல்லிவிட்டுப் போகிறேன். நான் போனபிறகு எண்ணிப்பார். என் பேச்சு, பைத்தியக்காரத்தனமாக இருந்தால் விட்டு விடு. ஆனலும் சொல்லிவிட்டுப் போகிறேன். நீ உன் தகப்பனர் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் கிடப்பதை அடிக்கடி போய்ப் பார்க்கிருய். தாயின் கண்ணீரைப் பார்த்து நீயும் கண்ணீர் விடுகிருய். அதெல்லாம் சரி. ஆனல், வெந்த புண்ணில் வேல் எறிவது போல், துன்பப்படுகிறவர்களை மேலும் மேலும் துன்பப்படுத்துகிருய் என்பதை மறக்காதே. நீ வீட்டை விட்டு விடுதிக்கு வந்தது தப்பு. அதனல் பலர் பலவாறு உன் குடும்பத்தாரைப் பற்றிப் பேசுகிருர்கள். பெற்ருேர் அதை நினைத்து நினைத்து மனம் வருந்துகிருர்கள். நீ செய்ய வேண்டிய சீர்திருத்தத்தைக் குடும்பத்தில் உள்ளிருந்தே செய்திருந்தால் இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது. தகப்பனருக்கும் இந்த அரைப்பைத்தியம் பிடித்திருக்காது. அப்பா திருவேங்கடம்! நான் கேட்கிறேன். மனச்சான்று உனக்கு மட்டும் கடவுள் கொடுத்த சரக்கு என்று நினைக்கிருயா? உன் தகப்பனர்க்கும் அது இருக்கிறது. மனச்சான்று இருப்பதால் தான் அவர் இந்த நிலைக்கு ஆளானர்; நோய்வாய்ப்பட்டார்; அறிவு கலங்கி வருந்துகிருர்; மனச்சான்று இல்லாத ஆளாக இருந்தால், அவர் என்ன செய்திருப்பார், தெரியுமா? கவலை இல்லாமல் கேளிக்கைகளுக்குப் போய் எந்த வகையிலாவது தம் கவலையை மறந்துவிட்டிருப்பார். திருக்குறள் முதலான உயர்ந்த நூல்களைப் படித்துவிட்டு, எத்தனையோ பேர் அருமையாகக் கள்ள வியாபாரம் செய்து காலத்தைக் கழிக்கவில்லையா? மேலும் மேலும் இன்ப வாழ்க்கைக்கு வழிதேடிக் கொண்டு பிறருடைய துன்பத்தை எள்ளளவும் எண்ணிப்பார்க்காமல் பொழுது போக்கவில்லையா? அவர்களைப் போல் உன் தகப்பனர் வாழ முடியவில்லை என்பதை எண்ணிப்பார் அப்பா. காரணத்தையும் எண்ணிப்பார் அப்பா. மற்றவர்களுக்கு

மனச்சான்று அடியோடு மரத்துவிட்டது. உன் தகப்பனுருக்கு அது இன்னும் மரத்துப்போகாமல் இருக்கிறது. அதன் பயன்தான் இப்போது அவர் படும் துன்பம்! நீ என்ன செய்கிருய் தெரியுமா? அவரை முழுப்பைத்தியமாக்கி அல்லல்பட வைக்கப்போகிருய், அல்லது அவருடைய மனச்சான்றும் மழுங்கிப் போகும்படி செய்கிருய். சரி! இனிமேல் உன்னிடம் பேச்சு இல்லே. வருவேன். (நண்பன் உடனே திரும்பிப் பார்க்காமல் நடந்து செல்கின்ருன். திருவேங்கடம் அவன் போவதைப் பார்த்தபடியே பெருமூச்சு விட்டு எழுந்து இங்கும் அங்குமாக நடக்கிருன். நிற்கிருன்.)

குரல்: ஆமாம்! உண்மைதான்! இந்த உலகத்தில் உள்ள முழு அயோக்கியர்களேப் பற்றி நீ கவலேப்படவே இல்லே. அவர்களேக் குற்றம்கூற ஆண்மை இல்லாமல் கோழையாக அடங்கியிருக்கிருய். ஆனுல் சிறிதளவு குற்றம் செய்கிறவர்களே — ஒரு பங்கு அயோக்கிய வாழ்க்கை வாழ்கிறவர்களே— அடியோடு வெறுக்கிருய்; பழிக்கிருய்; துன்பத்துக்கு ஆளாக்குகிருய். நச்சுப் பாம்பைப் பார்த்து ஒதுங்கிச் செல்கிருய். நல்ல நீர்ப்பாம்பைப் பார்த்துக் கல் எறிகிருய்: கோழைத் தன்மை; வடிகட்டின கோழைத் தன்மை! உன் தகப்பனுர் மற்றவர்களே விட எவ்வளவோ நல்லவர்! அவருடைய வாழ்க்கை கெடுகிறது; கெடுவதற்கு நீதான் காரணம். திருத்த முடியாதபோது கெடுக்க முயல்வது குற்றம். கல்லேச் சிற்பமாக்க வேண்டியது உன் கடமை. ஆனுல் சிற்பமாக்கத் தெரியாத உனக்குக் கல்லே உடைத்தெறிய உரிமை உண்டா? (சிறிது அமைதி—திகைப்பு—கலக்கம்.)

உன்னேப் பெற்று வளர்த்து, உனக்காகவே பொருளும் சேர்த்து, தியாகம் செய்துள்ள தந்தையார் அரைப் பைத்தியமாய் அலறுகிருர். நீ காந்தி நெறியில் வாழும் தொண்டன் என்று உன்னே நீயே ஏமாற்றிக் கொள்கிருய். ஆக்க வேலேயா செய்கிருய்? அழிவு, அழிவு வேலே, குடும்பத்தை அழிக்கும் வேலே செய்து விட்டு இங்கே இந்தப் பூங்காவில் திரிகிருய்.

திரு: உணர்ந்தேன். உணர்ந்துவிட்டேன். ஆனுல் — மனச்சான்று! நல்ல மனச்சான்று! அன்று அது என்னே வீட்டைவிட்டு விடுதிக்குப் போகும்படி துரத்தியது. இன்று மறுபடியும் வீட்டிற்கே போகும்படி தூண்டுகிறது! என் செயல் எனக்கே வெட்கமாக இருக்கிறது.

குரல்: இதோ இந்த முல்லேக்கொடி உன்னேப் பார்த்துக் கேலி செய்வது போல் சிரிக்கிறது. அதோ அந்தச் சிட்டுக்குருவிகளும் உன்னே எள்ளி நகையாடிக் குதிக்கின்றன. இதோ இந்த மரங்களும் உன்னேப் பார்த்து உள்ளுக்குள் சிரித்துத் தலே

யசைக்கின்றன. (அவற்றைப் பார்த்தபடியே அசைவற்ற நிலையில் திருவேங்கடம் பேசாமல் நிற்கிறான். அப்போது எதிர்பாராதபடி வேலையாள் பிரகஸ்பதி ஓடிவந்து எதிரே நின்று)

இந்த நீண்ட பகுதியால் ஆசிரியரின் ஆழ்ந்த காந்திய உணர்வுகள் புலனாகும். இந்திய விடுதலையின் வெள்ளி விழாவின் போது சாத்தண்டனை ஆயுள் தண்டனையாக மாற்றப்படுவதற்கும் பிற தண்டனைகளும் குறைக்கப்படுவதற்கும் எந்த அறம் அடிப்படையோ அந்த அறத்தின் உட்பொருளே காந்தியத்தின் உட்பொருளும் ஆகும்.

இந்த உரையாடல் அமைப்பில் ஆசிரியர் மனச்சான்றின்—குரலின் — ஏவலர்களாக முல்லைக்கொடியையும் சிட்டுக்குருவியையும் மரங்களையும் பயன்படுத்துவது அவர்தம் இயற்கை — இலக்கிய — ஈடுபாடுகளை இனிதின் விளக்குவதாகும்.

3

காட்சி அமைப்புகளைக் காணும்போதே பாத்திரப் படைப்பு பற்றியும் ஒருவாறு கண்டோம். ஈண்டு அது குறித்து மீண்டும் நினைவு கூரத்தக்கது (நாவலைப் போலல்லாத) நாடகத்துக்கு ஏற்ற சொற்செட்டோடு ஆசிரியர் காட்சிகளை அறிமுகப்படுத்துவதன் வாயிலாகவும், தேவையான இடங்களில் பிறை வளைவுகளுக்குள் தக்க குறிப்புகள் தருவதன் வாயிலாகவும், உரிய உரையாடல்களை அமைப்பதன் வாயிலாகவும் காட்சிகளையும் பாத்திரங்களின் (உறுப்பினர்களின்) பண்புநலன்களையும் கற்பவர் நெஞ்சில் கல்லெழுத்தாக்கி உள்ளார். எல்லோரையும் போலவே ஆசிரியர் வேலையாளையே பெரிதும் நகைச்சுவைக்கு உரிய உறுப்பாக ஆக்கி இருப்பது இரக்கத்திற்கு உரியதாய் உள்ளது. ஏழாவது காட்சியில் வரும் நண்பனும், குரலும் ஆசிரியரின் இதய ஒலிகளாகவே இருப்பது ஆசிரியரை அறிந்தார்க்கு நன்கு விளங்கும். ஆனால் திருவேங்கடமே ஒப்புக்கொள்வது போல நான்காம் காட்சியில் அவனை வீட்டை விட்டு வெளியேறுமாறும், ஏழாம் காட்சியில் விடுதியிலிருந்து வீட்டுக்குத் திரும்புமாறும் வாதிடும் திறம் நாடகத்திற்கு இன்றியமையா ஓர் உத்தியிலும் உண்மையிலும் ஆசிரியர் வல்லவராய் இருப்பதை எண்பிக்கும். முதிய தலை முறையைப் புதிய தலைமுறை திருத்துவதாகக் கதையும் பாத்திரப் படைப்புகளும் அமைந்திருப்பது ஆசிரியருக்கு இளமையிடம்—இயல்பாகவே குறிக்கோள் வெறிகொண்ட இளம் மாணவரிடம் — இருக்கும் நம்பிக்கையின் எதிரொலியே ஆகும். ஆனால் இக்கதையில் — நாடகத்தில் பெரிதும் நடைமுறை உலகில் காண இயலாத (காண வேண்டிய என்பது வேறு) தந்தையையும் மைந்தனையும் ஆசிரியர் காட்டுகிறார். விதிவிலக்கை விதியாக்க முற்படும் அவருக்கு வெற்றி கிடைப்பது அரிது என்றே தோன்றுகிறது. மென்மைப் பண்புகளையே மேன்மைப் பண்புகளாக

மதித்த அந்தப் பழங்காலத்தை இன்று பெண்களும் மிதித்துத் தள்ள முற்பட்டு விட்ட 'முற்போக்கு' மறக்க—மறைக்கத் தக்கதோ? மனச்சான்றைப் போல் கொடிய தண்டிப்போன் ஒருவன் இருக்க இயலாது. ஆனால் எத்தனை பேருக்கு?

இனி, தனி மனிதனின் பெருமையாய்த், திகழும் இந்த 'மனச்சான்று' என்ற ஒன்றே கி. பி. 2000த்தில் வாழும் சூழல் இருக்குமா என்பது ஒரு பெருங் கேள்வி. மனச்சான்று என்ற ஒன்று இயற்கையா செயற்கையா — நான்காம் காட்சிக்கும் ஏழாம் காட்சிக்குமே மாறு படும் தன்மை உடையது அல்லவா என்பதும் ஆராயத் தக்கது. இன்னும் விளக்கமாகச் சொன்னால் காந்தி நாட்டில் காந்தியம் நாளும் பலவகைகளிலும் கண்மூடி — கள்மூடி — வருகிறது! இங்கிலையில் காரல் மார்க்ஸ் வெற்றி பெறுவாரே அன்றிக் காந்திஅடிகள் வெற்றி பெறுதல் அரிது. ஒரு வேளை தக்க தலைவரின்மையால், தக்க இயக்கமின்மையால் —'இழுபறி' நடக்கும் இடைவேளையைப் பயன்படுத்திக் கொண்டு கால மானாலும் — காலமாகாமல் — பொதுவுடைமை பூத்தால் செங்நீர் சிந்தாமலே 'செங்கொடி' பறக்கக் கூடும். இல்லையேல் இல்லை.

இனி, மனச்சான்றின் மொழிநடையை ஆராய்வோம். இந்த ஆராய்ச்சியையும் சொல் நிலை, சொற்றொடர் நிலை என இரண்டாகப் பகுத்துக் கொள்ளலாம். இவ்விரு நிலைகளும் நாடகக் கலையைப் பொறுத்தவரையில் பெரிதும் கருதத்தக்கது, கொச்சைத் தமிழின் செல்வாக்கே. நாவலைவிட நாடகக் கலையில் இத்தமிழின் செல்வாக்குப் பெரிதாய் இருப்பதற்குக் காரணம் பாத்திரப்படைப்புக்கு உயிரூட்டவே ஆகும்.

பேராசிரியர் பயன்படுத்தும் கொச்சைச் சொற்கள் சில வருமாறு:

1. வர்'லைங்க 2. சாப்பிட்டாச்சா? 3. ஆச்சுதுங்க 4. என்னங்க 5. வா'ங்க 6. வ'ரேனுங்க 7. போக'ணுமே 8. கோவிச்சுக் கொள்வார் 9. ஏமாற்ற'லைங்க 10. வ'ரேன் 11. தெரியாதுங்க 12. இல்லை'மா 13. கட்ட'ணும் 14. ஒன்னு 15. ரண்டு 16. மூணு 17. அஞ்சி 18. ஒம்பத்து 19. 'ஏன்'பா 20. தொலை'மா 21. சொல்லிட்டேன்'பா 22. நம்ம 13. வரு'தா

இக்கொச்சை மொழிகளில் ஏற்பட்டிருக்கும் ஒலிச்சுருக்கத்தைக் குறிக்க ஆசிரியர் அமைத்துள்ள குறியீடுகள் அவர்தம் உள்ளார்ந்த செந்தமிழ் ஈடுபாட்டையும் மொழியியல் உணர்வையும் புலப் படுத்தும்.

இவ்வாறு கொச்சை மொழிகளைக் கையாளும் ஆசிரியர் அவற்றை அளவறிந்து—இல்லை—அப்படிச் சொல்ல இயலாது—அளவுபடுத்தியே —கையாளுகிறார். மாறாக இன்னும் கொச்சையாக எழுதக்கூடிய பல இடங்களிலும் செந்தமிழிலேயே எழுதுகிறார்.

*பிர :* எனக்கு அப்பா இல்லீங்க. அம்மாதான். அவள்மட்டும் குழந்தை என்று கூப்பிடுவாள். மற்றவர்கள் எல்லாம் பிரகஸ்பதி என்றுதான் சொல்வார்கள்.

*பிர:* நாய் குலைக்கிற சத்தம் கேட்டு விழிப்பேனுங்க. ஆனல், எமன் வரும்போது நாய் குலைக்கும் என்று பெரியவர்கள் சொல்வார்கள். அதனுலே கண்ணைத் திறக்காமலே இருந்துவிட்டுத் தூங்கிவிடுவேன்.

இந்த வேலைக்காரன் பேச்சு உண்மையில்—நடைமுறையில்—இந்த அளவு செந்தமிழாக இருக்கும் என்றுகூட எதிர்பார்க்க இயலாது. ஆனல் ஆசிரியரின் செந்தமிழ்ப் பழக்கம் நாடகத்துக்காக அவ்வளவு விரைவில் மாறிவிட முடியுமா ?

ஆசிரியர் ஐயா, ஐயோ முதலிய சொற்களை அய்யா—அய்யோ என்றே எழுதுவதும் எண்ணத்தக்கது.

இனி ஆசிரியர் ஒரோவழி உயர் செந்தமிழையும் ஊடாடச் செய்யும் உணர்வு—உரைத் திறத்திற்கு இரு எடுத்துக்காட்டுகள்.

1. *மாணிக்:* (நாற்காலியில் உட்கார்ந்து) சாப்பிட்டுக் கொஞ்சம் கண்ணயராமல், யோசனை என்ன? எந்நேரமும் யோசனை பண்ணினல் உடம்புக்குத்தான் ஆகுமா ?

2. 'ஊற்றி' என்பதற்குப் பதில் வார்த்து என்று சொல்லை ஆசிரியர் ஒரு முறைக்கு மேல் பயன்படுத்துகிருர்.

'முந்தானை' என்பது கொச்சை வழக்கு. முன்தானை என்பதே செந்தமிழ் வழக்கு என்பதை ஆசிரியர் புலப்படுத்தும் புலமைத் திறம் போற்றற்கு உரியது. ஆசிரியரின் செந்தமிழ் ஈடுபாட்டுக்கு மிகப் பெரிய எடுத்துக்காட்டாய் விளங்குவது ஓரிடம்விடாமல் எல்லா இடத்திலும் அவர் 'வேண்டா' என்று எழுதுவதே ஆகும்.

தனித்தமிழ் ஆர்வம் மிக்க ஆசிரியர் பிறமொழிச் சொற்களை அப்படியே தமிழொலிப் படுத்தியும் படுத்தாமலும் ஒவ்வோர் இடத்திலும் ஒவ்வொரு வகையாகப் பயன்படுத்துகிருர். காட்டுகள் சில:

" ரோஜா, இன்கம்டேக்ஸ், குமாஸ்தா, அரெஸ்டு, இன்ஸ்பெக்டர், பாஸ், ஸ்டேஷன், சோபா, அல்சர், டாக்டர், வக்கீல், உத்தியோகம், சந்தோசம், வருசம், மார்க்கெட்டு, அபிசேகம், வாரி, கம்பவுண்டர், போலீசு,

இவற்றுள் இன்கம்டேக்ஸ், அல்சர், டாக்டர், வக்கில், உத்தியோகம், சந்தேகம், மார்க்கெட்டு ஆகிய சொற்களையேனும் தவிர்த்து

வருமானவரி, குடற்புண், மருத்துவர், வழக்கறிஞர், வேலை, மகிழ்ச்சி, சந்தை போன்ற சொற்களைப் பயன்படுத்தலாம் என்று தோன்றுகிறது, இந்த நாடகத்திலேயே. நாட்டு வழக்கு ஏட்டு வழக்காவது போலவே ஏட்டு வழக்கும் நாட்டு வழக்காகும்.

ஆசிரியர் இந்த நாடகத் தலைவன் — தலைவிக்கு வைத்துள்ள பெயர்கள் அழகிய தமிழ்ப் பெயர்கள். ஆனால் செங்கொழுந்து என்ற பெயர் புதுமையானது. சிவக்கொழுந்து என்று கேட்டுப் பழகிய காதுகட்கு அது இன்னும் புதுமையானது. இவ்வுண்மை இந்த ஓரங்க நாடகத்திலேயே முற்பகுதியில் செங்கொழுந்தாய் இருப்பவர் பிற்பகுதியில் சிவக்கொழுந்தாய் மாறுவதால் உணரலாம் : (பார்க்க— மூன்றாம் காட்சி).

ஏட்டு வழக்கில் நாட்டு வழக்குப் பெற்றிருக்கும் செல்வாக்கிற்குச் சிறந்ததொரு சான்று பழமொழிகளைப் பயன்படுத்துவதாகும். பேராசிரியர் டாக்டர் மு. வ. இதிலும் வல்லவராய் இருப்பதற்குச் சான்றுகள் இதோ:

1. புலி வயிற்றில் பூனைக்குட்டி பிறக்க வேண்டுமா?
2. மாட்டை மேய்த்தோமோ கோலைப் போட்டோமோ!
3. குற்றமுள்ள நெஞ்சுதான் குறுகுறு என்னும்.
4. வெந்தபுண்ணில் வேலெறிவது போல

ஆசிரியர் பழமொழிகளை அடியொற்றிப் புதுமொழிகளைப் படைக்கும் திறம் போற்றற்கு உரியது.

பழமொழி : விளக்கெண்ணெயைத் தடவி வீதியில் புரண்டாலும் ஒட்டற மண்தான் ஒட்டும்.

புதுமொழி : தேனை ஒட்டித் தெருவில் புரண்டாலும் ஒட்டுவது தான் ஒட்டும் (பக். 41)

ஆசிரியர் ஓரிடத்தில் தரும் விளக்கம் விளங்கவில்லை. அது இது : “காலை நேரம் — ஒரு பூங்கா — திருவேங்கடம் ஒரு மேடையில் ஒரு காலை வைத்துக் கொண்டு, முழங்காலின்மேல் ஒரு கையையும் அதன்மேல் முகத்தையும் ஊன்றியபடி சாய்ந்து நிற்கிறான்.”

இனி உரையாடல்களிலும் சில இடங்களில் குறைகளாகத் தோன்றுவனவற்றைக் குறிப்பிடலாம்.

(அ)

*தபால்:* நேற்று, ச. மு. க. தா. வுக்கு (சனு முனு கனு தானுவுக்கு) ஒன்று வந்தது.

இந்தச் சிறு பேச்சில் பிறை வளைவுக்குள் இருக்கும் வகையிலேயே பேசுதல் இயற்கை. எனவே 'ச. மு. க. தா. வுக்கு' என்பதே தேவையில்லை. இன்னொன்று ச. மு. க. வையும் நெடில்போல் ஒலித்தலே நாட்டு வழக்கு.

(ஆ)

இரண்: Practical life — வாழ்க்கை வேறு. Ethics — நீதி வேறு. Eat, live and be merry உண்க வாழ்க களிக்க

முதல்: Eat, Smoke and be merry உண்க புகைக்க களிக்க என்று சொல்லய்யா

இந்த உரையாடல் பகுதியில் நிறுத்தக் குறிகள் இல்லாக் குறைபாடுகள் ஒரு புறம் இருக்க வேறு இரு குறைகளும் தென்படுகின்றன. (1) Practical life என்பதை நடைமுறை வாழ்க்கை என்று மொழி பெயர்த்தலே சரி. (2) Eat, live and be merry என்றும் Eat, Smoke and be merry என்றும் ஆங்கிலத்தில் முழங்கிய மாணவன் அத்துடன் நிறுத்திக் கொள்வானே தவிர அதற்குச் செந்தமிழில் மொழியாக்கம் புரிவான் என்று தோன்றவில்லை.

(இ)

இனி, ஆசிரியர் கற்காலத்தைக் கல்காலம் என்று பிரித்து எழுதுவதும் தேவையற்றது என்றே தோன்றுகிறது.

(ஈ)

டாக்டர்: வரட்டுமா அம்மா! வருவேன் (ப. 35)

இந்நடை உரையாடலுக்கு ஏற்ற இயற்கை நடை அன்று.

(உ)

இந்த ஓரங்க நாடகத்தில் ஈரிடத்தில் கருத்துப் பிழைகளும் கலந்துள்ளன.

1. தனிச் சொத்து திருடு என்ற கருத்தை முதலில் சொன்னவர் காந்தி அடிகளே என்ற கருத்துப்பட ஆசிரியர் எழுதுகிறார். உலகத்தின் வறுமைக்குக் காரணம் இந்தத் திருடு தான்.........பக். 24.

இதுவரையில் உலகத்தில் எந்த ஞானியும் சொல்லாத பெரிய உண்மை இது. ஆனால் 1809-ல் பிறந்து 1865-ல் மறைந்த பி. ஜே பிரௌடன் என்பவர் தமது Principles of right (உரிமையின் நெறிமுறைகள்) என்ற புத்தகத்தின் முதல் இயலிலேயே இக் கருத்தை முழங்கியுள்ளார்.

2. Eat, drink and be merry என்பதுதான் எப்பிகூரியன் (Epicurean/Epicurieanism) கூற்று. Eat, live and be merry என்பது பொருளற்றது.

(Epicure, N. who is choice and dainty in eating and drinking. Hence Epicurism Epicure'an (Follower) of Epicures, Athenian Philosopher (300 B.C.) who taught that highest good was pleasure (i.e. practice of virtue). (Person) devoted to pleasure, esp. refined sensous enjoyment).—Concise Oxford Dictionary.

## 5

கதைகளிலும் நாடகங்களிலும் ஆசிரியனைக் காணும் கலை அரியது; பெரியது. சிக்கல் நிறைந்த இக் கலை பற்றி அறிஞர் பலர் ஆராய்ந்துள்ளனர். (ஓர் எடுத்துக்காட்டாக, An Introduction to the Study of Literature W. H. Hudson—பக். 252—259 பார்க்க). மொத்தத்தில் எந்தப் படைப்பிலும் ஏதோ ஒரு வகையில் படைப்போன் இடம் பெறுகிறான் என்பது மறுக்க இயலாத மாபேர் உண்மை. இவ்வுண்மையைத் தக்க துப்புகள் கொண்டு துலக்கும் துப்பாய்வாளனே இலக்கியத் திறனாய்வாளன் என்றும் கூறலாம். ஆசிரியனின் வெறும் புறவாழ்வை மட்டுமன்றிப் பெரும் அகவாழ்வையும் இலைமறை காயாகவேனும் புலப்படுத்தும் இயல்புடையதே இலக்கியம் எனலாம்.

இவ்வாறே இலக்கியனின் நடை பற்றியும் அறிஞர் கார்லைலின் கருத்து ஒன்று உண்டு. அது 'நடை இலக்கியனின் சட்டை அன்று; தோலே ஆகும்' என்பதாகும்.

இந்த இரு கருத்துகளையும் நினைவில் கொண்டு இப்போதைக்கு நாம் ஆய்வுக்கு எடுத்துக்கொண்டுள்ள 'மனச்சான்று' — ஓரங்க நாடகத்தின் நடையை நினைவு கூர்ந்தால் தோன்றும் முதல் கருத்து அது நாவன்மை மிக்க பேராசிரியரின் நடை என்பதே ஆகும். வைரமனைய ஒரு சான்று வருமாறு:

*முதல்:* புத்தருக்கு அசுவமேத யாகம் உபதேசம் செய்தாலும் செய்யலாம்; காந்திக்கு அணுகுண்டு உபதேசம் செய்தாலும் செய்யலாம்; திருவேங்கடத்துக்கு இந்த உபதேசம் முடியாதப்பா!

**

## 6

பேராசிரியர் டாக்டர் மு. வ.-வின் 'மனச்சான்று' ஓரங்க நாடகம் பற்றிய இத் திறனாய்வின் இறுதிப் பகுதியாக அவர் தம் கருத்து வளத்தைக் காணலே பொருத்தம் உடையதாகத் தோன்றுகிறது.

பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களிடம் உள்ள சிறப்புகளுள் எல்லாம் — உள்ளச் சிறப்புகளுள் எல்லாம் — தலையாயது அவர்தம் ஆழ்ந்த சிந்தனை ஆற்றலே எனலாம். யான் பச்சையப்பர் கல்லூரியில் முப்பது ஆண்டுகட்கு முன்பு மாணவனாய்ச் சேர்ந்தேன். அப்போது பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்கட்கும் வயது முப்பதே. அப்போதே அவர் சிறந்த சிந்தனைச் செல்வராய்த் திகழ்ந்தார். ஒரு முறை அவர் என்னிடம் 'எண்ணிப்பார்; ஆழ்ந்து ஆழ்ந்து எண்ணிப்பார். ஒரு சில எண்ணங்கள் எழுந்ததும் — எண்ணச் சங்கிலியில் சில கண்ணிகள் தோன்றியதும் — அச் சங்கிலி அறுபடக் காணலாம். அப்படியே விட்டுவிடாது மேலும்மேலும் எண்ண வேண்டும். எண்ணிக்கொண்டே போனால் அடிப்படை உண்மைகள் விளங்கும்' என்ற அடிப்படை மந்திரத்தை அடியேனுக்கு அருளினார். அதன் பயனே நேற்றும் — இன்றும்—நாளையும்—என் வாழ்வு.

பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களை அறிந்தார் அனைவரும் அவர்தம் சிந்தனைச் சிறப்பை அறிவார். கால்நூற்றாண்டுக்கு முன்பே இதைத் தமிழ் முனிவர் திரு. வி. க. வும் உணர்ந்து அவரைத் 'தமிழ்நாட்டு பெர்னாட்ஷா' என்றும் போற்றத் தலைப்பட்டார் (பார்க்க: திரு. வி.க. வாழ்க்கைக் குறிப்புகள், 1944, பக். 803). இன்றைய தமிழ்த் திறனாய்வு வானில் ஒரு புது மீனாய்ப் பூத்துள்ள திரு. எழில் முதல்வன் அவர்கள் பேராசிரியரைத் 'தனி நெறிச் சிந்தனையாளர்' என்றே மதிப்பீடு செய்கிறார். பேராசிரியரின் நாவல்களைக் 'கருத்துரை நாவல்கள்' (Novel of Ideas) என்றே போற்றுகிறார். எனவே, டாக்டரின் 'மனச் சான்று' நாடகத்தில் உள்ள கருத்துகளின் வளத்தை ஒரு சிறிதேனும் ஊன்றிக் காண்போம்.

பொதுவாகப் பேராசிரியர் டாக்டர் மு. வ. கொல்லாமை நெறி போற்றுபவர்—உணவிலும், உணர்வாலும் அதன் பயனாக இருக்கத்தக்க இரக்கம் அவரிடம் எப்போதும் உண்டு. பகைவரையும் நண்பராக்கும் பண்பு அவர்தம் பிறப்புரிமை. இந்த இரு இயல்புகளும் இந்த நாட கத்தில் ஒளிவின்றித் தெளிவாக ஒளிவீசக் காணலாம். 'மனச்சான்று' நாடகத்தில் பேராசிரியர் டாக்டர் மு. வ. வே மனச்சான்று எனலாம். திருவேங்கடத்தைவிட ஏழாவது காட்சியில் நண்பனாகவும் குரலாகவும் வரும் நல்லோர் டாக்டர் மு. வ. வே எனலாம். அறுப்பதைவிட அவிழ்ப்பது நல்லது—தீர்ப்பதைவிடத் திருத்துவது நல்லது — என்ற அண்ணல் காந்தி அடிகள் அறம் பேராசிரியருக்குப் பெருவிருந்தாய் விளங்கும் பெருமருந்து. இதன் இயல்பையே 'மனச்சான்று' நாடகம் மொழிகிறது; பொழிகிறது.

இனி, இந்தத் தலைமையான கருத்துக்கு அடுத்தபடி இந் நாடகத்தில் சிறப்பிடம் பெறும் கருத்தாய்க் கருதத்தக்கது வணிகர்களையும் ஆட்டிப் படைக்கும் வல்லமை அதிகாரிகட்கு இருப்பதை அம்பலப்படுத்துவதே

ஆகும். இவ்வுண்மையைப் பின்வரும் உரையாடல் பகுதிகள் உணர்த்தும்.

செங்: இந்த வருசம் எம். ஏ. தேர்வுக்குப் போகிறுன். இதை முடித்து விட்டால், அவன் ஏன் வியாபாரத்துக்கு வர'ணும்? பெரிய உத்தியோகத்துப் போனல், அவனுடைய கால்மாட்டில் எத்தனையோ வியாபாரிகள் விழுந்து கிடப்பார்களே! அவனுக்கு என்ன குறைச்சல்?

**

டாக்டர்: அம்மா! யாராவது கேட்டால் 'சுமாராக இருக்கிறுர் என்று சொல்லுங்கள். இல்லாவிட்டால் ஊரெல்லாம் இதே பேச்சாகி விடுகிறது. நான் வைத்தியம் செய்வதும் அல்லாமல், இவருக்காக வாதாட (வும்?) வேண்டியிருக்கிறது. தலைபோகிற நிலைமையாக முற்றிப் போயிருக்கும். பெரிய மனிதர், தான தருமம் செய்கிறவர், நல்லவர் என்றெல்லாம் சொல்லி வழக்குக்கு இடமில்லாமல் செய்து வருகிறேன். அவர் தம் நினைவோடு இருந்தால் சொன்னபடி செய்வார். அது வேறே இடையூறு. இப்போது நீங்கள்தான் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும். ஐயாயிரம் கையிலிருந்தால் வழக்கே இல்லாமல் செய்துவிடலாம். இல்லாவிட்டால், இவருக்கு உடம்பு தேறிப் பழைய நினைவு வந்த பிறகு, வழக்குத் தொடங்கிவிட்டால், பைத்தியம் பிடித்தாலும் பிடித்து விடும்.

பண நாயகமே ஜனநாயகம் என்று பெரிதும் பேர் பெற்றிருக்கும் ஓர் அமைப்பில் அதிகாரிகள் வணிகர்களை ஆட்டிப் படைக்கிறுர்களா, வணிகர்கள் அதிகாரிகளை ஆட்டிப் படைக்கிறுர்களா என்பது ஒரு சிக்கலான கேள்வி. ஆனல் அதற்குரிய சுருக்கமான — சுவையான விடை இரண்டுமே உண்மை என்பதுதான். எங்கே எது அதிகமோ அங்கே அது அதிகம்!

இனி, இந்தக் கருத்தை அடுத்து முடிவாகச் (இரு பொருளிலும்) சொல்லத் தக்கது, பேராசிரியர் டாக்டர் மு.வ. தமிழை—திருக்குறளை—(காந்தியத்துக்கு வழிகாட்டியாகவே) உயிரெனப் போற்றுபவர்தான். ஆனல் அந்தத் தமிழினும்—திருக்குறள் படிப்பினும்—ஒழுக்கம் நிறைந்த நடப்பையே அவர் உயிருக்கு உயிராய் விரும்புவர் என்பது வெள்ளிடைமலை. இதற்கு ஒரு சான்று:

நண்பன்:.......அப்பா திருவேங்கடம்! நான் கேட்கிறேன், மனச்சான்று உனக்கு மட்டும் கடவுள் கொடுத்த சரக்கு என்று நினைக்கிறுயா? உன் தகப்பனுர்க்கும் அது இருக்கிறது. மனச்சான்று இருப்பதால்தான் அவர் இந்த நிலைக்கு ஆளானர்; நோய்வாய்ப்பட்டார்; அறிவு கலங்கி வருந்துகிறுர்; வாய்

பிதற்றுகிறர். மனச்சான்று இல்லாத ஆளாக இருந்தால், அவர் என்ன செய்திருப்பார், தெரியுமா? கவலை இல்லாமல் கேளிக்கைகளுக்குப் போய் எந்த வகையிலாவது தன் கவலையை மறந்து விட்டிருப்பர். திருக்குறள் முதலான உயர்ந்த நூல்களைப் படித்துவிட்டு, எத்தனையோ பேர் அருமையாகக் கள்ள வியாபாரம் செய்து காலத்தைக் கழிக்கவில்லையா? மேலும் மேலும் இன்ப வாழ்க்கைக்கு வழி தேடிக் கொண்டு பிறருடைய துன்பத்தை எள்ளளவும் எண்ணிப் பார்க்காமல் பொழுது போக்கவில்லையா? அவர்களைப் போல் உன் தகப்பனர் வாழ முடியவில்லை என்பதை எண்ணிப் பார் அப்பா!

பேராசிரியரின் நடையில் சொல்லழகோடு கருத்தழகும் மங்கல மணங் கொண்டமைக்கு ஒரு நன்கலச் சான்று:

*திரு:* குற்றத்தை எடுத்துக்காட்டுவது ஒரு குற்றமா?

பேராசிரியர் டாக்டர் மு.வ.வை 'எல்லோருக்கும் நல்லவர்' என்று எல்லோரும் சொல்கிறர்கள். அது அவர் 'எல்லோரும் நல்லவரே — இன்றில்லா விட்டாலும் நாளை' என்று நம்பி வாழ்வாதாலேயோ?

***

இணைப்பு :

From : **Psychology Made simple**

— A. P. Sperling, Ph.D., (1967)

*Page 248*

Conscience : The body of ideals by which a person guides or judges his actions.

*Pages 194 - 195*

## HIGHER MOTIVES AND CONSCIENCE

Mention of the conscience brings us to a group of motives sometimes called 'HIGHER' because they are considered to be ETHICALLY SUPERIOR to subsistence, sex and social motives. They include the ALTRUISTIC motives to sacrifice for family, friends, fellow citizens and mankind, the selfless motives of DEDICATION to ideals of truth, and the HONOUR motive to behave morally even when no one would know otherwise.

These motives are obviously even more remote from basic drives than are the derived social motives, but they can still be shown to have developed from the stimuli of bodily needs. To illustrate this development, let us trace the history of a CONSCIENCE THAT IS, OF THE MOTIVE TO PERFORM SOCIALLY APPROVED ACTS IN THE ABSENCE OF SOCIAL PRESSURE.

We have already followed the development of the social approval motive - the desire to be thought well of, at first by parents, then by peers. After a person has formed the habit of desiring approval, he finds that immoral or unethical acts lead to disapproval. Since such acts are associated with unpleasant results, they become unpleasant in themselves through a process of conditioning. Functional autonomy - the force of habit - then makes it difficult for him to act unsocially even in private.

CONSCIENCE, THEREFORE, IS NOT A MYSTERIOUS VOICE, BUT THE ANTICIPATION OF AN UNPLEASANT FEELING ASSOCIATED WITH PARTICULAR ACT. SUCH ANTICIPATIONS ARE LEARNED. Like other acts of learning, the acquiring of a conscience will be eased and speeded up by giving rewards and praise for success as well as punishment for failure. All of the rules for more efficient learning, which were given in our chapter on Remembering, apply to the formation of conscience.

In this particular case, the punishment, or negative incentive to learn, can be the mere with holding of the positive incentives of reward and approval. Children are most willing to learn morality when their inevitable failures are not punished too harshly, and when their successes are rewarded with the approval for which they undertake the learning.

CHOOSING BETWEEN ALTERNATIVE ACTS. People often have to choose which of two confli icting motives to satisfy. Sometimes the conflict is between two pleasures. At other times, the conflict is between a pleasure and a duty. If a person in such a situation chooses the pleasure, he is commonly said to have a 'weak will'. If he chooses the duty, however, he is said to have 'will power'.

It is the duty of psychology to show what really happens when this so-called will-power is displayed.

In general, a strong - willed act is one that pays more attention to FUTURE satisfactions than to PRESENT satisfactions. To postpone trivial but immediate rewards for greater but more remote rewards is one of the best signs of a mature personality. In the eyes of less civilized personalities, a person who can bide his time seems to be doing something that he does not want to do. The man who turns down his friend's invitation to play cricket in order to stay home and mend things around the house for his wife is supposed to prefer cricket to pleasing his wife. Such an opinion is incorrect. The fact that the man stays home to tinker shows that he wants to do so more than he wants to play cricket. There is no other way to measure the comparative strength of two motives than to see which motive triumphs when the two conflict.

*Some Books on Conscience*

1. The conscience — F. D. Maurice (1883).
2. Is Conscience an emotion? — Hastings Rashdall
3. Conscience and its problems — K. E. Kirk (1927)

# 2. தொல்காப்பியரும் அகராதிக் கலையும்

வ. ஜெயதேவன், பி.எசி., எம்.ஏ., சான்றிதழ் — மொழியியல்,
தமிழ் விரிவுரையாளர், சென்னைப் பல்கலைக் கழகம்.

1.0 உயர்தனிச் செம்மொழியில் உதித்த நூல்களுள் மூத்தது தொல்காப்பியம். மொழிக்கும் வாழ்வுக்கும் இலக்கணம் இயம்ப வந்த இத் தொன்னூலுக்கும் பின்னுளைய அகராதிக்கலைக்கும் எங்ஙன் தொடர்பிருக்கக்கூடும் எனக் கட்டுரைத் தலைப்பை நோக்கின் எண்ணத் தோன்றும். ஆயின், தொல்காப்பியத்தை ஆழ்ந்து கற்கின் கதிர் முன் பனி போல் ஐயம் அகலும்; அகராதியியலின் அடிப்படைக் கூறுகள் தொல்காப்பியத்தில் அமைந்திருத்தலைத் தெளியலாம். அவற்றைப் புலப்படுத்துவதே இக் கட்டுரையின் நோக்கம்.

2.0 அகராதி—விளக்கம் .

அகராதி < அகரம் + ஆதி. சொற்களை அகர முதலாக வரிசைப் படுத்திப் பொருள் விளக்கும் நூல்.[1] இற்றைக்கு 'அகராதி'[2] 'அகரவரிசை'[3], 'அகர முதலி'[4] எனக் குறிக்கப்படும் நூற்பொருளுக்கு ஏறத்தாழ இணையாக 'நிகண்டு'[5] 'கூட்டம்'[6], 'உரிச்சொல்'[7] 'உரிச்சொற் பனுவல்'[8], போன்ற சொற்கள் வழக்கில் இருந்துவந்திருக்கின்றன. இவற்றுள், 'உரிச்சொல்', 'உரிச்சொற் பனுவல்' என்னும் பெயர் வழக்கிற்குத் தொல்காப்பியமே அடிமணை எனலாம்.

இதனை, "சொல்லுக்குப் பொருள் கூறும் துறை, முதன்முதல் தொல்காப்பிய உரியியலில் காணப்பட்டது. அதில் உரிச்சொற்கள் பொருள் விளக்கஞ் செய்யப்பெற்றிருத்தலைக் கண்ட பிற்கால அறிஞர்கள், தாமும் சொற்பொருள் விளக்கந்தரும் தனி நூல்கள் இயற்றத் தொடங்கி அவற்றை உரிச்சொல் என்னும் பெயரால் அழைத்தார்கள்,"[9] என்னும் புலவர் சுந்தர சண்முகனாரின் கருத்து அரண் செய்யும்.

3.0 அகராதிக் கலைஞர்—விளக்கம்

இராபர்ட் எம். கோரல்[10] அவர்கள் 'சொற்களின் பொருள்கள், மூல வரலாறு, மரபு வழக்கு, ஒலிப்புமுறை ஆகியவைகளை அறிஞர்

குழுவின் துணையோடு தொகுப்பதோடு மொழியுள் புகும் புதிய சொற்களையும் புதிய பொருள்களையும் பதிவு செய்வதே அகராதிக் கலைஞர்களின் பணியாகும்,' என்பர். இவ்வடிப்படையில் தொல்காப்பியரை அணுகிப் பார்த்தால் அவருக்கும் அகராதிக் கலைக்கும் உள்ள தொடர்பு தெற்றெனத் தெளிவாகும்.

3.1 கோரல் அவர்கள் கருத்துப்படி அகராதி என்பது ஒரு தனி மனிதனால் தொகுக்க இயலாத ஒன்றாயும், ஓரறிஞர் குழுவின் துணையால் தான் அது இயலும் என்பதும் வெளிப்படை. தொல்காப்பியம் ஒரு தனி மனிதனின் படைப்பா? அல்லது கூட்டுப் படைப்பா? என்பது ஆய்வுக்குரியது. தொல்காப்பியம் கூட்டுப் படைப்பாக இருக்கக் கூடுமென தெ. பொ. மீ.[11] போன்றவர்கள் கருதுப. எனினும், நெடுங்காலமாகவே தொல்காப்பியம் தனிமனிதரின் படைப்பாகவே இனங்காட்டப்பட்டு வருகின்றது. படைப்பு உண்மை எப்படியிருப்பினும், தொல்காப்பியம் அகராதிக் கூறுகள் பலவற்றையும் தன்னகத்தே கொண்டு திகழ்கின்றது என்பது தெளிவு.

### 4.0 அகர நிரல்

அகராதியியலின் உயிர்க்கூறு அகர நிரலாகும். தொல்காப்பியர் நூலின் தொடக்கத்திலேயே,

> " எழுத்தெனப் படுப
> அகரமுதல னகர இறுவாய்
> முப்பஃ தென்ப;
> சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே " (1),

என அகரம் முதல் னகரம் ஈறாய் அமையும் தமிழ் நெடுங் கணக்கின் அகர நிரலைச் சுட்டியுள்ளார்.

4.1 மொழி மரபில், இன்னின்ன எழுத்துகள் மொழிக்கு முதலாவன என்றும் எங்தெந்த மெய்யுடன்கூடி முதலாவன என்றும் எவை எவை முதலாகா என்றும் விளக்கமாய் விளம்பியுள்ளார். இவையனைத்தும் அகராதியியலுக்குத் துணை செய்வன.

4.2 உயிர் மயங்கியலில் அகர ஈறு தொடங்கி ஔகார ஈறு ஈறாய் அகர நிரலில் அமைத்துப் பேசுவதைக் காணலாம். இது தொல்காப்பியரின் அகராதியுணர்வைப் (consciousness of lexicography) பறைசாற்றுவதாகக் கொள்ளலாம்.

4 3 ஆனால், தொல்காப்பியத்தில் பொருள்(கள்) சுட்டப்பட்ட சொற்கள் அகரநிரலில் அமைக்கப்படவில்லை. இற்றைக்கு அகராதிகள் குறிப்பு நோக்கீட்டிற்குப் (Reference) பயன்படுத்தப்படுவதைப்போல் பண்டைக் காலத்தில் பயன்படுத்தப்படவில்லை. மனனஞ் செய்வதற்கேதுவாய் நூல்கள் படைக்கப்பட்டன.[12]

4.4 அகராதி என்பது நேற்றுப் பெய்த மழையில் இன்று முளைக்கின்ற காளானைப் போன்று திடீரென்று தோன்றிவிட முடியாது. எந்த மொழியிலும் அப்படித் தோன்றியதில்லை. இற்றைக்குக் காட்சி யளிக்கும் அகராதி நிலை, பல்லாயிரக்கணக்கான வளர்ச்சிப் படிகளைக் கடந்து நிற்கும் கலை முதிர்ச்சி நிலையாகும். 'டிக்ஷனரி' (Dictonary) என்னும் பெயரை உலகுக்கு வழங்கக் காரணமாயிருந்த இலத்தின் மொழியாயினும் [ 'dictio' (saying) > dictionarium > dictionary ] அகராதிக் கலையின் அடிப்படைக் கூறுகளை உலகுக்கு அறிமுகம் செய்த கிரேக்க மொழியாயினும் பல படிமுறை வளர்ச்சிக்குப் பின்னே தான் கலை முதிர்ச்சி நிலையை எட்டியுள்ளது. தமிழும் இதற்கு விதிவிலக் கன்று.

4.5 அகரநிரலில் சொற்களை அமைத்துப் பொருள் விளக்கம் கூறுவது அகராதிக் கலையின் தலையாய கூறாக இன்று ஆகியுள்ளது. எனினும், இலத்தின்—கிரேக்க இடைக்கால அகராதிகளில் கூட அகரநிரல் பின்பற்றப்படாமல் கடினமான சொற்களுக்கும் தனிச் சிறப்பு வாய்ந்த சொற்களுக்கும் விளக்கம் தருமளவிலேதான் உலா வந்தன.[13] தொல்காப்பியமும் அந்த அளவிலேதான் உலா வந்தது.

4.6 தொல்காப்பியம் முற்றாக ஓரிலக்கண நூல்; ஓரகராதியன்று. அகராதிக் கூறுகளையும் கொண்ட நூல். அவ்வளவே; அகராதிக் கலைக்கு அடிகோலிய ஆதி நூல். அன்றியும் அது நூற்பா யாப்புடைய நூல். ஆதி நூலாயும் யாப்புடைய நூலாயும் முற்றாக அகராதியாய் அல்லாது ஓரிலக்கண நூலாயும் இலங்குதலால் அகராதிக் கூறுகிய அகரநிரல் தொல்காப்பியத்தில் பெரிதும் காண முடியவில்லை. எனினும் பிற அகராதிக் கூறுகள் மலிந்து கிடக்கக் காணலாம். சுருங்கக் கூறின், கிரேக்கமும் இலத்தினும் அகராதித் துறையில் இடைக்காலத்தில் அடைந்த வளர்ச்சி நிலையை எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழ்மொழி அடைந்துள்ள பெஞ்சிறப்பைத் தொல்காப்பியம் புலப் படுத்துவதாகவே தோன்றுகிறது. ஏனெனில் கி. மு. மூவாயிரத்தில் முகிழ்த்ததாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் அருஞ்சொற்களும் (rare and difficult words) மரபுச் சொற்களும் (specialized lists of words) உரியியல், மரபியல் முதலிய பகுதிகள் வாயிலாக விளக்கப்படுகின்றன. (மேற்கோள் — 13 காண்க). எனவே, அகராதித் துறையில் கிரேக்கத்தை — இலத்தினைக் காட்டிலும் தமிழ் முன்னணியில் நிற்கத் தொல்காப்பியர் மெத்தவும் காரணமாவார் எனத் துணியலாம்.

5.0 பொருள் சுட்டல் (Meaning).

எழுத்து 'வித்து' வளர்ந்து சொற்'செடி'யாகிப் பொருள் 'பூ'த்திட மொழி 'மணம்' கமழ்கிறது. மொழிக்கு உயிராக ஒளிரும் சொற்களின் கூறுகளைத் தொல்காப்பியர் ஆழ்ந்து தேர்ந்துள்ளார். சொல்லுக்கு இருபெரும் இயல்புகள் உள.[14] அவையாவன:

1. பொருள் சுட்டுதல். 2. இலக்கணம் சுட்டுதல். இதனைத் தொல்காப்பியர்,

"பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர்," (641) என்பர்.




பொருண்மை என்பது சொல்லின் பொருளீடு; சொன்மை என்பது சொல்லின் இலக்கண வடிவம். இவ்விரு சொற்கூறுகளையும் தெளிந்தாலன்றிச் சொற்களையோ மொழியையோ உணர்தல் இயலாது. ஆகவேதான் பொருண்மை ஞானங்கருதி முதலில் நிகண்டுகளும், பின்னர் சொன்மை ஞானங்கருதி இலக்கண நூல்களும் பயின்றே இறுதியில் இலக்கியம் பயில்வது பண்டு தமிழகத்தில் மரபாக இருந்து வந்தது.

5.1 தொல்காப்பிய நூலின் முதன்மை நோக்கம் சொன்மை விளக்குதலே. என்றாலும் பொருண்மை விளக்குதலை இது விலக்கவில்லை. இது தொல்காப்பியரின் 'அகராதி உணர்வை'ப் புலப்படுத்துவதாகும். தம் காலத்திலேயே சொற்களுக்கு மக்கள் பொருள் விளங்கிக் கொள்ளாத நிலையும் பிழையாகப் பொருள் கொள்கின்ற நிலையும் இருந்திருக்கக்கூடும். இவையே அவர் சொற்பொருண்மைத் தேவையை உணர்ந்து கொள்வதற்கு அடிப்படைக் காரணங்களாக இருக்கலாம்

5.2 உரியியல், இடையியல், மரபியல் முதலியவற்றின் வாயிலாக நேரடியாய்ப் பொருளும் மரபும் சுட்டியதோடு மட்டும் அமையாது நூல் முழுமையும் ஆங்காங்கே பொருள் உணர்ந்து கொள்ளுமாறு சொற்பொருள் சுட்டிச் செல்கிறார்.

5.2.1 ஆண் என்னும் அஃறிணைப் பெயர் அம்முப்பெற்று முடியும் எனப் புள்ளி மயங்கியலில் இலக்கணம் கூறப்புகுந்த தொல்காப்பியர்,

"ஆண்மரக் கிளவி யரைமர வியற்றே" (304) எனக் குறிக்கிறார். அம்முப் பெறும் நிலையை வரையறுக்கும் தொல்காப்பியர் ஆணும் அரையும் மரங்களையும் குறிப்பன எனப் பொருள் விளக்குகிறார். இவ்வாறு சுமார் கால் நூறு நூற்பாக்களில் பொருள் விளக்கம் செய்யப்பட்டுள்ளது (இணைப்பு—1 காண்க).

5.3 உரியியல் முழுமையும் பொருள் விளக்கப் பகுதியே ஆகும். இதன்கண் 120 சொற்கள் விளக்கம் பெற்றுள.

> "வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
> வெளிப்பட வாரா உரிச்சொல் மேன" (783)

என்று உரைத்து அருஞ்சொற்களுக்கு மட்டும் தொல்காப்பியர் பொருள் சுட்டுகிறார். ஆனால், இன்றைக்கு எளிய சொற்களாகத் தோன்றும் தீர்தல், தீர்த்தல், பழுது, முழுது, செழுமை ஆகியவையும் இடம் பெற்றுள்ளமை நோக்கத்தக்கது.

5.3.1 இடையியல், மரபியல் ஆகியவற்றில் இடைச்சொற்களும் மரபுச் சொற்களும் பொருள் விளக்கப்பட்டுள. பிற இயல்களில் இலக் கணக் குறியீடுகள், மரபுக் குறியீடுகள் ஆங்காங்கே விளக்கப்பட்டுள. தொல்காப்பியரே விளக்கியுள்ள சொற்பொருள் விளக்கத்தை 'அகராதி'யாய் அமைத்துப் பார்த்தல் இன்பம்; சிறப்பு. (இணைப்பு—2 காண்க). இவ்வகராதி அவர் கால மொழி நிலையைப் பேரளவு இல்லையெனினும் ஓரளவேனும் உணர்த்தும் என்பது உறுதி. அன்றி யும், இதனால் தமிழகராதியியலுக்குத் தொல்காப்பியரால் வழங்கப் பட்ட முதற்பெருங்கொடை தெளிவாகும்.

5.4 பெயர், வினை, இடை, உரி ஆகிய நால்வகைச் சொற்களும் பொருள் சுட்டுவன. இதனைத் தொல்காப்பியர், "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" (640) எனக் குறிப்பர். சொற்கள் குறிக்கும் பொருண்மை நிலையை இருவகையாய்ப் பகுப்பர்.

1. வெளிப்படு நிலை. 2. குறிப்பு நிலை.



"தெரிபுவேறு நிலையலுங் குறிப்பில் தோன்றலும்
இருபாற் றென்ப பொருண்மை நிலையே" (642)

என்பர் தொல்காப்பியர்.

இதற்கு உரை வகுத்த தெய்வச் சிலையார்,

"'தெரிபு வேறு நின்றன' நிலம் நீர், தீ, வளி எனப் பொருள் உணர்த்துவனவும்; உண்டான், தின்றான் எனத் தொழில் உணர்த்துவனவும், 'குறிப்பிற்றோன்றின' இவன் நெருப்பு, இவன்பசு எனக் குணம் பற்றியும், தீமை செய்தாரை நன்மை செய்தீர் எனவும்; கொடுமை செய்தாரை வாழ்வீராக எனவும் அப் பொருள் பயவாது பிற பொருள் பயப்ப வருவன", என விளக்குவர். இவ்விரு பொருண்மை நிலைகளும் அகராதிக் கலைக்கு உறுதுணையாவன.

5.4.1 தமிழ் மொழியில் பெரும்பான்மை வெளிப்படுநிலைப் பொருளகராதிகளும் சிறுபான்மை குறிப்புநிலைப் பொருளகராதிகளும் வெளிவந்துள. சிலேடைகள், பழமொழிகள், மரபு வழக்குகள் (Idioms and Phrases) முதலியன குறிப்புநிலைப் பொருளகராதிகளுக் குரியவை.

5.5 சொல்லுக்குரிய வெளிப்படைப் பொருளையோ குறிப்புப் பொருளையோ விளக்கலாம்; அப்படி விளக்கப்பட்ட சொற்களுக்கும் பொருள் விளங்கவில்லையாயின் இவற்றையும் விளக்க முனைந்தால் அதற்கு எல்லையிராது. இதனாற்றான், தொல்காப்பியர்,

"பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம்பின்றே" (874)
எனக் குறிக்கிறார். ஆயினும், ஆசிரியர் சீரிய முறையில் பொருள் உணர்த்த வல்லராயின் கேட்போனுக்குச் சொல்லும் பொருட்கண் மயக்கந் தோன்றாது. ஆகவே,

"பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்" (875)

என்பர் தொல்காப்பியர். ஆசிரியர் என்னதான் முயன்றுஉணர்த்தினும் கேட்போனின் உணரும் ஆற்றலுக்கேற்பவே பொருள் புலப்படும். ஆதலின், "உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே" (876) என்கிறார்.

இவ்வாறெல்லாம் சொற்பொருண்மைக் கலையைவிளக்கும் தொல்காப்பியர், "மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா"(877) என்பர். எல்லாச் சொல்லுக்கும் பொருளுண்டு; எல்லாச் சொற்பொருளுக்கும் காரணம் உண்டு. ஆனால், அக் காரணம் விளங்கத் தோன்றாது என்பர். தெய்வச் சிலையார், "இச் சொற்குப் பொருள் இதுவென நியமித்தற்குக் காரணம் விளங்கத் தோன்றா. எனவே, காரணம் உளதென்பதூ

உம், அது புலனுகாதென்பதூஉம் கூறியவாறும். என்னை புலனுகாமை எனின், மிகுதல் என்பதற்குப் பொருளாவது முன்பு நின்ற நிலையிற் பெரிதாதல். அப் பொருண்மை அச் சொற்காட்டுதற்குக் காரணம் உரைப்பரிதாதலான். அஃதேல் காரணமுள போலக் கூறியவதனுற் பயனென்னையெனின், பொருண்மேற் சொன்னிகழ்தல் தொன்று தொட்டு வருகின்றதாதலின், உலகினுள் மிக்காரெல்லாரும் காரண மின்றி வழங்குபவோ என்னும் ஐயங் குறித்துக் கூறினர்,'' என விளங்க உரைப்பர்.

மேற்குறித்தவை உரியியலில் இடம் பெற்றிருப்பினும் எல்லா வகைச் சொற்களுக்கும் பொருந்துவனவாகக் கொள்ளலாம். இவை யனைத்தும் தொல்காப்பியரின் சொற்பொருளியியல் (Semasiology) அறிவைப் புலப்படுத்துவன.

6.0 மரபு (Usage)

மரபு காட்டுவது அகராதிக் கூறுகளில் ஒன்று. தொல்காப்பியர் மரபை ஓதுவதற்கென்றே மரபியல் படைத்துள்ளார். இதன்கண் இளமைப்பெயர்கள், ஆண்பாற் பெயர்கள், பெண்பாற் பெயர்கள் ஆகியவற்றின் மரபினை (usage) எடுத்தியம்புகிருர் தொல்காப்பியர். மரபுப் பொருள் 63 நூற்பாக்களிலும் மரபுச் செய்திகள் அவ்வியல் முழுமையும் உள. இணைப்பு-2இல் காட்டப்பட்ட சொற்பொருள் விளக்க அகராதியில் சுமார் 40 சொற்கள் மரபு விளக்கம் பெறுகின்றன. மரபியல் முழுமையும் ஆண்மை, பெண்மை, இளமைப் பெயர்களின் மரபு காட்டுவதோடு நில்லாது உயிர்களின் பாகுபாடும் சிறப்பு மரபும் காட்டுகின்றது. மேலும், நால்வகை வருணத்தார்க்கும் உரிய இயல்புகள், மர வகையின் உறுப்புகள் நூலின் மரபு முதலியனவும் விளக்கப்படுகின்றன.

(1) பொதுவாக மரபிற்குரியவை, (2) இளமைப் பெயர்கள், (3) உயிர்களின் பாகுபாடும் சிறப்பு மரபும், (4) ஆண்பாற் பெயர்கள், (5) பெண்பாற் பெயர்கள், (6) நூலின் மரபு முதலிய அனைத்தும் தொல்காப்பியரால் மரபியலில் விளக்கப்படுகின்றன.

இதனுல், அகராதிக் கலையின் ஒருகூருக இலங்கும் மரபையும் தொல்காப்பியர் சுட்டுகிருர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

இனி, அகராதிக் கூறுகளாகிய ஒலிப்பு முறை, சொற்களின் மூல வரலாறு, புதிய சொற்கள் — பொருள்கள் ஏற்பு ஆகியற்றைக் காணலாம்.

7.0 ஒலிப்பு முறை (Pronunciation)

எழுத்துகளை முறையாக நவிலவில்லையென்ருல் சொற்களின் பொருள்கள் வேறுபட்டுவிடும். நாம் பேசுவதைப் பிறர் பிழையறவும்

தெளிவுறவும் புரிந்துகொள்ள முறையான ஒலிப்பு இன்றியமையாதது. இதனாற்றான், அகராதிகளில் ஒலிப்பு முறை சுட்டப்படுகிறது.

7.1 மொழியியலார் ஒலி ஆய்வுக்கு மூன்று முறைகளைப் பயன் படுத்துவர் : 1. பௌதிக ஒலியியல் (Acoustic Phonetics), 2. கேட்பொலியியல் (Auditory Phonetics), 3. ஒலிப்பொலியியல் (Articulatory Phonetics). இம்மூவகை ஒலியியல்களுள் ஒலிப்பொலியியல் அகராதிக் கலையின் குறிக்கத்தக்கக் கூறுகளுள் ஒன்றாகக் கொள்ளத் தக்கது. தொல்காப்பியத்தின் பிறப்பியல் தமிழ்மொழியின் ஒலிப் பொலியியல் ஆகும்.

7.2 மேனாட்டுப் பேரகராதிகளில் காணப்படும் ஒலிப்பு அட்டவணை (Phonetic chart or Pronunciation key) போன்று தமிழ்ப் பேரகராதி களிலும் ஒலிப்பு முறை காட்டத்தக்க வகையில் தொல்காப்பியப் பிறப்பியல் ஓரளவு துணைபுரிகிறது. தமிழ்ப் பரப்பில் முதல் அகராதிக் கலைஞராகத் (The first lexicographer of the Tamil language) திகழ்கின்ற தொல்காப்பியர் ஒலிப்பு முறை வழங்கியமையை எண்ணி எண்ணி மாத்தமிழினம் பெருமிதம் கொள்ளலாம்.

7. 3 காற்றைச் சுவாசிப்பதைப்போல முயற்சியின்றி நாம் தமிழ் ஒலிகளை ஒலித்து வருகிறோம். தாய்மொழி ஒலிப்பாக இருப்பதால் இளமைதொட்டு வருகின்ற பழக்கத்தால் நாம் எளிதாக ஒலிக்கிறோம்.[15] எங்ஙன் ஒலிக்க வேண்டும் என்னும் முறை தெரியாமலே ஒலித்து வருகிறோம். தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களே வியக்கும்படி ஒலிப்பு முறையைத் தொல்காப்பியர் விளக்குகிறார். இனி, அதனைக் காண்போம் :

அ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), அங்காந்து (85), ஒரு மாத்திரை அளவால் (84 & 3) ஒலிக்கவேண்டும்.

ஆ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), அங்காந்து (85), இரு மாத்திரை அளவால் (84 & 4) ஒலிக்கவேண்டும்.

இ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), அங்காந்து (85 & 86), அண்பல் முதல் நா விளிம்பு உற (86), ஒரு மாத்திரை அள வால் (84 & 3) ஒலிக்கவேண்டும்.

ஈ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), அங்காந்து (85 & 86), அண்பல் முதல் நா விளிம்பு உற (86) இரு மாத்திரை அள வால் (84 & 4) ஒலிக்கவேண்டும்.

உ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), இதழ் குவித்து (87), ஒரு மாத்திரை அளவால் (84 & 3) ஒலிக்கவேண்டும்.

ஊ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), இதழ்குவித்து (87), இரு மாத்திரை அளவால் (84 & 4) ஒலிக்கவேண்டும்.

எ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), அங்காந்து (85 & 86), அண்பல் முதல் நா விளிம்பு உற (86), ஒரு மாத்திரை அளவால் (84 & 3) ஒலிக்கவண்டும்.

ஏ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), அங்காந்து (85 & 86), அண்பல் முதல் நா விளிம்பு உற (86), இரு மாத்திரை அளவால் (86 & 4) ஒலிக்கவேண்டும்.

ஐ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), அங்காந்து (85 & 86), அண்பல் முதல் நா விளிம்பு உற (86), இரு மாத்திரை அளவால் (84 & 4) ஒலிக்கவேண்டும்.

ஒ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), இதழ் குவித்து (87), ஒரு மாத்திரை அளவால் (84 & 3) ஒலிக்கவேண்டும்.

ஓ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), இதழ் குவித்து (87), இரு மாத்திரை அளவால் (84 & 4) ஒலிக்கவேண்டும்.

ஔ — மிடற்றுப் பிறந்த வளியால் (84), இதழ் குவித்து (87), இரு மாத்திரை அளவால் (84 & 4) ஒலிக்கவேண்டும்.

இனி, மெய்யெழுத்துகளின் ஒலிப்பு முறையை நோக்குவோம் :

க், ங் — நாமுதலும் அண்ண முதலும் உற ஒலிக்கவேண்டும் (89).

ச், ஞ் — நாவது இடையும் அண்ணத்து இடையும் உற ஒலிக்க வேண்டும் (90).

ட், ண் — நாவது நுனியும் அண்ணத்து நுனியும் உற ஒலிக்க வேண்டும் (91).

த், ந் — அண்ணத்தைப் பொருந்திய பல்லினது அடியாகிய இடத்தே நாநுனி பரந்து மெய்யுற ஒற்ற ஒலிக்க வேண்டும் (93).

ற், ன் — அணர்நுனி நா அண்ணம் ஒற்ற ஒலிக்கவேண்டும் (94).

ர், ழ் — நுனி நா அணரி அண்ணம் வருட ஒலிக்கவேண்டும் (95).

ல், ள் — நாவிளிம்பு விங்கி பல்லினது அணிய இடத்தைப் பொருந்த அவ்விடத்து முதல் நா அவ்வண்ணத்தை ஒற்ற 'ல்' எனவும், வருட 'ள்' எனவும் ஒலிக்க வேண்டும் (96).

ப், ம் — இதழிரண்டும் இயைய ஒலிக்கவேண்டும் (97).

வ் — பல்லிதழ் இயைய ஒலிக்கவேண்டும் (98).

ய் — அண்ணத்தை நாச்சேர்ந்தவிடத்து மிடற்றினின்றும் எழும் வளி கண்ணுற்றடைய ஒலிக்கவேண்டும் (99).

7. 3. 1 வல்லினம் தலை வளியானும், மெல்லினம் மூக்கு வளியானும், இடையினம் மிடற்று வளியானும் ஒலிக்கப்படவேண்டும் என்று பிறப்பியல் (100) அறிவிக்கிறது.

7. 3. 2 மெய்யெழுத்துகள் அரை மாத்திரை அளவால் ஒலிக்கப் படவேண்டும் என நூன்மரபு (11) தெரிவிக்கிறது. "மெய்யோடியையினு முயிரியில் திரியா" (10) என்று தொல்காப்பியர் கூறுவதால், உயிர்மெய் எழுத்துகள் குறிலாக இருப்பின் ஒரு மாத்திரை அளவாலும் நெடிலாக இருப்பின் இரு மாத்திரை அளவாலும் ஒலிக்கப்படவேண்டும் என்பது தெளிவு.

7. 3. 3 சார்பெழுத்துகள் அவற்றின் சார்பாகிய மெய்களைப் போலவே (101) அரை மாத்திரை அளவால் (12) ஒலிக்கப்படவேண்டும். ஆய்தம் தனக்குப் பொருந்தின நெஞ்சு வளியால் ஒலிக்கப்பட வேண்டும் (101).

7. 4 "தத்தம் திரிபே சிறிய என்ப" (88) என வரும் பிறப்பியலின் சிங்க நோக்காய்க் கிடக்கும் நூற்பா வாயிலாய்த் தொல்காப்பியர், உயிர்களும் மெய்களும் அவற்றிற்குரிய தானங்களுட் பிறந்து ஒலிப்பதைத் தாம் கூறியிருப்பினும் நுண்ணுணர்வான் ஆராயுமிடத்துத் தத்தம் வேறுபாடுகள் சிறியவாய் உடைய எனக் குறிக்கிறார். இவ் வேறுபாடுகளையெல்லாம் இன்றைய மொழியியலார் ஆழ்ந்து ஆய்ந்து கண்டுள்ளனர். தொல்காப்பியப் பிறப்பியலில் சில இடங்களில் மாறுபட்டும் உள்ளனர்.[16] தொல்காப்பியர் இன்றைய மொழியியலார்போல மிகத் துல்லியமாக ஒலிப்பொலியியலை விளக்கவில்லை என்றாலும், அவரது 'பிறப்பியல்' அகராதிக் கலையின் ஒரு பெருங்கூறாகிய ஒலிப்பு முறைக்குப் பேரளவில் துணைசெய்கிறது என்பது வெள்ளிடைமலை. தொல்காப்பியப் பிறப்பியல் இன்றைய மொழியியலாரின் ஒலியியலோடு ஒப்பிட்டு ஆய்தற்குரியது.

7. 5 ஒலிப்புமுறை காட்டல் அகராதிக் கலையின் பெருங்கூறாய் மேனாட்டுப் பேரகராதிகளில் இடம் பெற்றுள்ளது. தமிழ் அகராதிகளில் ஒலிபெயர்ப்பு (Transliteration) முறையில் காலத்திற்கேற்ப ஒலிப்பு முறை சுட்டப்பட்டு வருகிறது. தொல்காப்பியரும் ஓரளவுக்கு இவ்வொலிப்பு முறையை அவர்கால நிலைக்கேற்ப விளக்கிக் காட்டியுள்ளது மெத்தவும் மெச்சத்தக்கதே. பிறப்பியல் நூற்பாக்கள் (84—101), நூன்மரபு நூற்பாக்கள் (3, 4, 10—12) ஆகிய இருபத்திரண்டும் ஒலிப்பு முறைக்குப் பயன்படுவன.

### 8. 0 சொற்களின் மூல வரலாறு சுட்டல் (Origin for the words)

அகராதிகளில் இடம்பெறும் சொற்கள் வந்தவழி சுட்டுவது அக் கலையின் அரிய கூறுகளில் ஒன்று. தொல்காப்பியர் சொற்களின் மூலத்தை விளக்கவில்லை. எனினும் எச்சவியலில்,

"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே" (880)

எனப் பொதுவாய்ச் சொற்களின் மூலத்தைக் குறிக்கிறார்.[17]

இயற்சொல் (Common native words), திரிசொல் (Literary words), திசைச்சொல் (Words of foreign origin), வடசொல் (Words of Sanskrit origin) எனப் பொதுவாய் அக் காலத்தில் வழக்கிலிருந்த சொற்களுக்கு மூல வரம்பு கட்டுகிறார். சொற்களைத் தனித்தனியே எடுத்து அவற்றின் மூலத்தைத் தொல்காப்பியர் விளக்காது போயினும், பொதுவாய் மூலத்தைக் குறித்தமையான் பின்வரும் தலைமுறையினருக்கு — குறிப்பாய் அகராதிக் கலைஞருக்கு — அப்பணியை விட்டுவிடுவதோடு அதற்கு அடியெடுத்துக் கொடுப்பதும் தெளிவாகிறது.

9.0 புதிய சொற்கள்—புதிய பொருள்கள் (New words and New meanings) ஏற்பு

புதிய சொற்களையும் புதிய பொருள்களையும் பதிவு செய்வது அகராதிக் கலைஞரின் முதன்மையான பணியாகும். தொல்காப்பியர் எந்த அளவிற்குப் பதிவு செய்துள்ளார் என்பது விளங்கவில்லை என்றாலும், பதிவு செய்துகொள்ளவேண்டும் என்னும் கருத்தினராய் உள்ளார் என்பது தெளிவாகிறது.

"கடிசொல் இல்லைக் காலத்துப் படினே" (935),

எனத் தொல்காப்பியர் புதிய சொற்களை வரவேற்கிறார்.

"கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே" (781),

என இடையியலின் ஈற்றில் புதியனவற்றைத் தழுவிக் கொள்ள அனுமதிக்கிறார்.

உரியியலில் நூற்றிருபது சொற்களுக்குப் பொருள்களைச் சுட்டி விட்டு அவை பிற பொருள்களை ஏற்குமாயின் அனுமதிக்கப்பட வேண்டியவை என்று குறிக்கிறார்.

"கூறிய கிளவிப் பொருணிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே" (873),

என்று தொல்காப்பியர், தாம் கூறிய பொருள்களோடு இனி வருங்காலத்தில் எழும் பொருள்களையும் அனுமதிக்கிறார். அது வெறும் அனுமதி மட்டுமன்று; புதிய பொருள்களின் வருகைக்கு வழங்கப்படுகின்ற வரவேற்பேலையாகும். அதுவே மொழியின்

வளர்ச்சிக்கும் அதனைப் பதிவு செய்து காட்டுகின்ற அகராதிகளின் வருகைக்கும் வழங்கப்படுகின்ற வரவேற்போலையுமாகும்.

*10.0. தொல்காப்பியமும் நிகண்டுகளும்*

தமிழகராதியியலின் உயிர் நிகண்டுகள் எனலாம். இந் நிகண்டுகளுக்கெல்லாம் மூலம் தொல்காப்பியமே. நிகண்டுகளின் முப்பெரும் பிரிவுகளாய் அமையும் ஒரு பொருள் பல்பெயர்த்தொகுதி, ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி, பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி ஆகியன தொல்காப்பியத்தினின்றும் தோன்றியவையே எனலாம்.

10.1. ''தடவும் கயவும் நளியும் பெருமை'' (803) போன்ற நூற்பாக்கள் ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதிக்கும்,

> ''கடியென் கிளவி
> வரைவே கூர்மை காப்பே புதுமை
> விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
> அச்சம் முன்தேற்று ஆயீ ரைந்தும்
> மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே'' (866)

போன்ற நூற்பாக்கள் ஒரு சொல் பல்பொருள் பெயர்த்தொகுதிக்கும்,

> ''ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
> இரண்டறி வதுவே அதனொடு நாவே
> மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
> நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
> ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
> ஆறறி வதுவே அவற்றொடு மனனே
> நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே'' (1526)

போன்ற நூற்பாக்கள் பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதிக்கும் தோற்றுவாய் எனக் கொள்ளலாம்.

10.2. நிகண்டுகளின் பிரிவுகளுக்கு ஒரு சார் பெயர் வழங்கிய பெருமை தொல்காப்பியத்திற்கே உண்டு. சான்றுகள்:

1. ''ஒரு பொருள் குறித்தவேறுபெயர்க் கிளவி'' (525)
2. ''வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
   வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல் என்று
   ஆயிரு வகைய பலபொரு ளொரு சொல்'' (535)
3. ''..........................................................
   ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும்
   பலசொல் ஒருபொருட் குரிமை தோன்றினும்'' (782)
   ..........................................................

4. "ஒரு பொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி." (882)

10. 3 தொல்காப்பிய நூற்பாக்கள் அப்படியே சேந்தன் திவாகர நிகண்டுள் எடுத்தாளவும் பெற்றுள்ளன. (இணைப்பு - 3 காண்க). ஆதலின், தொல்காப்பியமே நிகண்டுகளுக்கு மூலமாய் அமைந்து, அகராதியியலை வளர்த்தது என்பது தெளிவு.

11. 0 முடிவுரை

இதுகாறும் கூறியவற்றான், இராபர்ட் எம். கோரல் குறிக்கின்ற அகராதிக் கலைஞருக்குரிய கூறுகளுள் பேரளவு தொல்காப்பியரிடத்துப் பொருந்தியுள்ளன என்பது குன்றின் மேலிட்ட விளக்காகும். எனினும், தொல்காப்பியத்தை முழுமையாக அகராதி என்று அறுதியிட்டுக் கூறிவிட முடியாது.

தொல்காப்பியம் முழுக்க முழுக்க ஒரு பேரகராதியாய் இலங்காது போயினும், அகராதிக் கலைக்கு அடிகோலிய நிகண்டுகளுக்கு வித்தூன்றிய ஆதி நூல் என்பதில் ஐயமில்லை. தொல்காப்பிய உவமையியல் பிற்கால அணியிலக்கணக் கலைக்குத் தளமானதைப் போல் உரியியல் முதலிய சில இயல்கள் சொற்பொருண்மைக் கலைக்குக் களமாய் அமைந்தொளிர்வன எனத் துணியலாம்.

குறிப்புகள்

1. Tamil Lexicon, University of Madras, 1936, Vol. I, p. 13.
2. ஐயன்பெருமாள் கோனூர், கோனூர் தமிழ்க் கையகராதி, பழனியப்பா பிரதர்சு. 1955.
3. இராமசாமிப் புலவர் சு. அ., தமிழ்ப் புலவர் அகரவரிசை, கழகம், 1959.
4. இது தேவநேயப் பாவாணர் அவர்களின் சொல்லாட்சி.
5. சங்கர நமச்சிவாயர் உரை, நன். 460.
6. சங்கர நமச்சிவாயர் உரை, நன். 460.
7. நன். 460.
8. மயிலைநாதர் உரை, நன். 388.
9. சுந்தர சண்முகனூர், புலவர், தமிழ் அகராதிக் கலை, புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பக வெளியீடு, 1965, பக். 29.
10. " Lexicographer compiles a lexicon or dictionary. He and a staff of language scholars record facts about words, such

as pronunciation, history, meaning and usage. They also record new words and new meanings of words."

—Robert M. Gorrel, The World Book Encyclopaedia, 1960, Vol. II, p. 200.

11. "There is a certain amount of inconsistency between some of the sutras. This suggests that certain sutras were introduced probably by students who felt a gap in the work or that *Tolkāppiyam itself was the work of a grammatical school developing its ideas from time to time, rather than that of an individual author.*"

— Meenakshisundaram T. P., A History of Tamil Language, Deccan College, Poona, 1965, pp. 51-52.

12. "Tolkāppiyam is in the sutra style, and sutras, like other metrical measures in Tamil, often employ, for mnemonic purposes, etukai, or initial rhyme. It is this initial rhyme that has suggested the arrangement of words and their synonyms in uri-y-iyal. There is neither a strictly logical nor an alphabetical order."

— Introduction to Tamil Lexicon, University of Madras, 1936, Vol. I, p. XXV.

13. "Greek and Latin dictionaries were either lists of rare and difficult words or specialized lists of words."

— The World Book Encyclopaedia, 1960, Vol. II.

14. "A word has both a grammatical and a lexical aspect."

— Brendan J. Carrol, Systems and Structures of English, Oxford University Press, Madras, 4th Impression, 1973, p. 46.

15. Cf. "No fish ever discovered water and no monolingual Speaker ever understood the unique qualities of his own language."

—John. H. Fisher's Foreword to A Linguistic Guide to Language Learning, The Modern Language Association of America, 1966.

16. Meenakshisundaram, T. P., A history of Tamil Language, Deccan College, Poona, 1965, p. 53.

17. Cf. "This rough classification gives us an idea of the source of Tamil vocabulary at that remote time."

— Introduction to Tamil Lexicon, University of Madras, 1936, Vol. I, p. XXVI.

இணைப்பு—1

1. "அத்திடை வரூஉம் கலமென் அளவே" (168)
2. "பனையென் அளவும் காவென் நிறையும்
நினையுங் காலை இன்னொடு சிவணும்" (169)
3. "யாவென் வினாவின் ஐயென் இறுதியும்
ஆயியல் திரியாது என்மனார் புலவர்" (178)
4. "யாமரக் கிளவியும் பிடாவும் தளாவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே" (229)
5. "மாமரக் கிளவியும் ஆவும் மாவும்
ஆமுப் பெயரும்....................." (231)
6. "இனி அணி என்னுங் காலையும் இடனும்
வினையெஞ்சு கிளவியுஞ் சுட்டும் அன்ன" (236)
7. "பனியென வரூஉம் காலவேற் றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை யாகும்" (241)
8. "வளியென வரூஉம் பூதக் கிளவியும்
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப" (242)
9. "உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே" (243)
10. "புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை" (244)
11. "ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே" (245)
12. "ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே" (262)
13. "சேஎன் மரப்பெயர் ஒடுமர இயற்றே" (278)
14. "பெற்றம் ஆயின் முற்றஇன் வேண்டும்" (279)
15. "விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்
அவைமுப் பெயரும் சேமர இயல" (282)
16. "ஆண்மரக் கிளவி அரை மரஇயற்றே" (304)
17. "விண்ணென வரூஉம் காயப் பெயர்......" (305)
18. "வேற்றுமை யல்வழி எண்ணென் உணவுப் பெயர்
வேற்றுமை யியற்கை நிலையலு முரித்தே" (308)
19. "இல்ல மரப்பெயர் விசைமர இயற்றே" (313)
20. "எகின்மர மாயின் ஆண்மர இயற்றே" (336)
21. "ஏனை எகினே அகரம் வருமே
வல்லெழுத் தியற்கை மிகுதல் வேண்டும்" (337)
22. "வேற்றுமை யாயின் ஏனை எகினொடு
தோற்றம் ஒக்கும் கன்னென் கிளவி" (346)
23. "இல்லென் கிளவி இன்மை செப்பின்......" (372)
24. "குமிழ் என் கிளவி மரப்பெய ராயின்
பீர்என் கிளவியொடு ஓரியற்றாகும்" (386)
25. "உண்டென் கிளவி உண்மை செப்பின்......" (430)

இணைப்பு—2

## தொல்காப்பியர் விளக்கும் சொற்பொருள் விளக்க அகராதி

1. அ—1. ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து (3), 2. சுட்டு (31), 3. மரம் (181).
2. அஃது—அஃறிணைப் பெயர் (652).
3. அஃறிணை — உயர்திணையல்லாத பகுப்பு (484).
4. அக்கு—சாரியை (119).
5. அகவல்—ஆசிரியம் (1338).
6. அங்கதம் — வசையொடும் நசையொடும் புணர்ந்த செய்யுள் (1386).
7. அடி—நாற்சீர் கொண்டது (1289).
8. அடிமறிச்செய்தி — அடிநிலை திரிந்து சீர்நிலை திரியாது தடுமாறுதல் (890).
9. அணி—இடம் (236).
10. அத்து—சாரியை (119).
11. அதிர்வு—நடுக்கம் (799).
12. அது—1. ஆறும் வேற்றுமை உருபு (563); தன்னோடு ஒற்றுமையுடைய பொருளானும் தன்னின் வேறாகிய பொருளானும் இதனது இதுவெனும் அன்ன கிளவியால் தோன்றும் கிழமைப் பொருளை உடையது (563); இயற்கை, உடைமை, முறைமை, கிழமை, செயற்கை, முதுமை, வினை, கருவி, துணை, கலம், முதல், ஒருவழியுறுப்பு, குழவி, தெரிந்து மொழிச் செய்தி, நிலை, வாழ்ச்சி முதலியபொருள்களில் வரும் (564), 2. கொடையெதிர் கிளவி (583), 3. அஃறிணைப் பெயர் (652).
13. அந்தில்—' ஆங்கு ' என்னும் இடப்பொருளில் வரும் அசைநிலைக் கிளவி (752).
14. அந்தோ — குறிப்போசை யாற் பொருளுணர்த்தும் சொல் (767).
15. அப்பர் — யாட்டின் ஆண்மைப் பெயர் (1547).
16. அம்—சாரியை (119).
17. அம்ம — 1. உரைப் பொருள் கிளவி (210), 2. அசைச் சொல் (638), 3. ஒருவனை ஒருவன் கேள் என்று சொல்லுதற்கண் வரும் சொல் (761).
18. அம்மா — உரைப் பொருள் கிளவி (212).
19. அம்மாட்டான்—உயர்திணைப் பெயர் (648, உரை).
20. அம்மை—சில்மெல் மொழியால் சீர்புனைந்து செய்யப் பட்ட அடிநிமிர்வில்லாத செய்யுள் (1491).
21. அமர்தல் — மேவல்[விரும்புதல்] (863).
22. அரி—ஐம்மை [மென்மை] (839).
23. அரும்பு—மரத்தின் உறுப்பு (1587).
24. அரை—1. பால் வரை கிளவி (165), 2. மரம் (304).
25. அரோ—அசைநிலை (764).

26. அலமரல்—சுழற்சி (794).
27. அழகு — செய்யுள் மொழியால் சீர் புனைந்து யாக்கப் பட்ட செய்யுள் (1492).
28. அவ் — அஃறிணைப் பெயர் (652).
29. அவ்வாட்டி — உயர்திணைப் பெயர் (648, உரை).
30. அவ்வாளன் — உயர்திணைப் பெயர் (648, உரை).
31. அவர் — உயர்திணைப்பெயர் (647).
32. அவள் — உயர்திணைப்பெயர் (647).
33. அவன்—உயர்திணைப் பெயர் (647).
34. அவை—அஃறிணைப் பெயர் (652).
35. அவையடக்கியல் — வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மின் என்று எல்லா மாந்தர்க்கும் வழிமொழிதல் (1370).
36. அழுங்கல் — 1. அரவமாகிய இசை (832), 2. இரக்கம் (833), 3. கேடு (833).
37. அளகு — 1. பெண் கோழி (1555), 2. பெண் கூகை (1555), 3. பெண்மயில் (1556).
38. அன்—சாரியை (119, 194).
39. அன்மொழித் தொகை — பண்பு தொக வரூஉம் கிளவியானும் உம்மை தொக்க பெயர்வயினானும் வேற்றுமை தொக்க பெயர் வயினானும் ஈற்று நின்றியலுதல் (901).
40. அன்றே—குறிப்போசையாற் பொருளுணர்த்தும் சொல் (767).
41. அன்ன—உவமக்கிளவி (210).
42. அன்னோ — குறிப்போசையாற் பொருளுணர்த்தும் சொல் (767).
43. ஆ — 1. ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து (4), 2. பெண் பெற்றம் (1560), 3. பெண் எருமை (1560), 4. பெண் மரை (1560), 5. வினாப் பொருளில் வரும் சொல் (32), 6. மரம் (181).
44. ஆக — பிரிவில் அசைநிலை (765).
45. ஆகல் — பிரிவில் அசைநிலை (765).
46. ஆங்க—உரையசை (762).
47. ஆசிரியத்தளை—சீரியைமருங்கின் ஓரசை ஒப்புதல் (1313).
48. ஆடூஉ—உயர்திணைப் பெயர் (648).
49. ஆண்—மரம் (304, 336).
50. ஆண்மகன் — உயர்திணைப் பெயர் (648).
51. ஆய்தம்—முப்பாற்புள்ளி (2).
52. ஆய்தல் — நுணுக்கமாகிய குறிப்பு (813).
53. ஆர்—அசைநிலை (755).
54. ஆன்—1. சாரியை (119), 2. ஓம்படைக் கிளவி (581).
55. இ—1. ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து (3), 2. சுட்டு (31).
56. இஃது—அஃறிணைப் பெயர் (652).
57. இக்கு—சாரியை (119).
58. இக—முன்னிலையசை (759).
59. இகும்—முன்னிலையசை(959).
60. இசைப்பு—இசை (793).

61. இடம்—ஒருநெறிப்பட்டாங்கு ஓரியல் முடியும் கரும நிகழ்ச்சி (1457).
62. இதழ் — புல்லின் உறுப்பு (1586).
63. இது — அஃறிணைப் பெயர் (652).
64. இம்மாட்டான் - உயர்திணைப் பெயர் (648).
65. இயம்பல் — இசைப்பொருட் கிளவி (841).
66. இயலசை—நேர்நிரை (1263).
67. இயற்சீர்—இயலசை மயக்கம் (1270).
68. இயைபு—1. புணர்ச்சி (792), 2. ஈறுவாய் ஒன்றல் (1353), 3. ஞகார முதலா னகார ஈற்றுப் புள்ளியிறுதி (1496).
69. இரங்கல்—1. இசைப்பொருட் கிளவி (841), 2. பொருளது கழிவு (842).
70. இரலை — ஆண் புல்வாய் (1544).
71. இல்—இன்மை (372).
72. இல்ல — அஃறிணைப் பெயர் (653).
73. இல்லம்—மரம் (313).
74. இலம்பாடு—வறுமை (843).
75. இலை — மரத்தின் உறுப்பு (1587).
76. இழைபு—ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து ஓங்கிய மொழியான் ஆங்ஙனம் ஒழுகுதல் (1498).
77. இவ் — அஃறிணைப்பெயர் (652).
78. இவ்வாட்டி — உயர்திணைப் பெயர் (648).
79. இவ்வாளன் — உயர்திணைப் பெயர் (648)
80. இவர் — உயர்திணைப் பெயர் (647).
81. இவள்—உயர்திணைப் பெயர் (647).
82. இவன்—உயர்திணைப் பெயர் (647).
83. இவை — அஃறிணைப் பெயர் (652).
84. இன்—1. நோக்கல் நோக்கம் (577), 2. அச்சக்கிளவி (584), 3. ஐந்தாம் வேற்றுமை உருபு (561); வண்ணம், வடிவு, அளவு, சுவை, தண்மை, வெம்மை, அச்சம், நன்மை, தீமை, சிறுமை, பெருமை, வன்மை, மென்மை கடுமை, முதுமை, இளமை, சிறத்தல், இழித்தல், புதுமை, பழைமை, ஆக்கம் இன்மை, உடைமை, நாற்றந்தீர்தல், பன்மை, சின்மை, பற்று, விடுதல் ஆகிய பொருளில் வரும் (562), 4. சாரியை (119,195).
85. இன்றி வினையெஞ்சு கிளவி (237).
86. இன்னல் —இன்னுமை (787).
87. இனி — காலப்பொருள்.
88. ஈ — 1. ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து (4), 2. இரவின் கிளவி (927) [இழிந்தோன் கற்று (928)].
89. ஈர்க்கு — புல்லின் உறுப்பு (1586).
90. உ—1. ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து (3), 2. சுட்டு (31).
91. உஃது — அஃறிணைப் பெயர் (652).

92. உகப்பு—உயர்தல் (789).
93. உசா—சூழ்ச்சி (853).
94. உண்டு—உண்மை (430).
95. உதன்—ஆண்யாடு (1547).
96. உதி — மரம் (243,262).
97. உது — அஃறிணைப்பெயர் (652).
98. உம் - எச்சம், சிறப்பு, ஐயம், எதிர்மறை, முற்று, எண், தெரிநிலை, ஆக்கம் முதலிய பொருள்களில் வரும் சொல் (740).
99. உம்மாட்டான்—உயர்திணைப் பெயர் (648).
100. உயர்திணை — மக்கட்சுட்டு (484).
101. உயிர் — பன்னீரெழுத்து (8).
102. உயா — உயங்கல் [வருந்துதல்] (852).
103. உரிச்சீர் வெண்பா — இயற்சீர் இறுதிமுன் நேரவண் நிற்றல் (1276).
104. உரியசை — நேர்பு நிரைபு (1263).
105. உரு—உட்கு (785).
106. உரும்—அச்சம் (848).
107. உரை—சூத்திரத்துட்பொருள் அன்றியும், யாப்புற இன்றியமையாது இயைபவை யெல்லாம் ஒன்ற உரைத்தல். (1603).
108. உலகம் — நிலம் தீ நீர்வளி விசும்போடு ஐந்தும் கலந்த மயக்கம் (1589).
109. உவ்வாட்டி — உயர்திணைப் பெயர் (648).
110. உவ்வாளன் — உயர்திணைப் பெயர் (648).
111. உவப்பு — உவகை (789).
112. உவர்—உயர்திணைப் பெயர் (647).
113. உவள்—உயர்திணைப் பெயர் (647).
114. உவன்—உயர்திணைப் பெயர் (647).
115. உவை — அஃறிணைப் பெயர் (652).
116. உள்ள — அஃறிணைப் பெயர் (653).
117. உறப்பு—செறிவு (830).
118. உறு—மிகுதி (784).
119. ஊ—ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து (4).
120. எ—ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து (3).
121. எகின் — 1. மரம் (336), 2. விலங்கு (337).
122. எச்சம் — சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை புல்லியகிளவி (1462).
123. எண்—உணவு (308).
124. எதுகை — அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒத்து வருதல் (1350).
125. எய்யாமை — அறியாமை (825).
126. எல்—இலக்கம் [விளக்கம்] (754).
127. எல்லாரும் — உயர்திணைப் பெயர் (649).
128. எல்லீரும் — உயர்திணைப் பெயர் (649).
129. எவன்—வினு (704).
130. எற்று—இறந்த (போயிற்று) என்னும் பொருண்மைத்து (748).
131. எறுழ்—வலி (871).

134. என்பது—பிரிவில் அசைநிலை (765).

135. என்று — வினை, குறிப்பு, இசை, பண்பு, எண், பெயர் ஆகிய பொருள்களில்வரும் சொல் (744).

136. என—வினை, குறிப்பு, இசை, பண்பு, எண், பெயர் ஆகிய பொருள்களில் வரும் சொல் (743).

137. ஏ—1. ஈரளபு இசைக்கு நெட்டெழுத்து (4), 2. வினா (32), 3.பெற்று [பெருக்கம்] (788), 4. தேற்றம், வினா, பிரிநிலை, எண், ஈற்றசையாய் வரும் சொல் (742), 5. இசைநிறை அளபெடை (746).

138. ஏடு — புல்லின் உறுப்பு (1586).

139. ஏற்றம் — நினைவும் துணிவுமாகிய குறிப்பு (820).

140. ஏறு—ஆற்றலோடு புணர்ந்த ஆண்பாற்கெல்லாம் உரித்து (1549), பன்றி, புல்வாய், உழை, கதிரி (1538), எருமை, மரை, பெற்றம் (1539), சுறவு (1540).

141. ஏனம் — இருள்நிறப் பன்றி (1563).

142. ஐ — 1. ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து (4), 2.கன்றல் (570), 3. செலவு (570), 4. நோக்கல் நோக்கம் (577), 5. ஏதுப்பொருண்மை (577), 6. தடுமாறு தொழிற்பெயர் (576), 7. ஓம்படைக்கிளவி (581), 8. அச்சக்கிளவி (584), 9. வியப்பு (868), 10. இரண்டாம் வேற்றுமை உருபு, வினை, வினைக்குறிப்பு அவ்விரு முதலின் தோன்றும் (555), காப்பு, ஒப்பு, ஊர்தி, இழை, ஒப்பு, புகழ் பழி, பெறல், இழவு, காதல், வெகுளி. செறல், உவத்தல், கற்பு, அறுத்தல், குறைத்தல், தொகுத்தல், பிரித்தல், நிறுத்தல், அளவு, எண், ஆக்கல், சார்தல், செலவு, கன்றல், நோக்கல், அஞ்சல், சிதைப்பு ஆகிய பொருள்களில் வரும் (556)

143. ஒடு — 1. மரம் (262), 2. மூன்றும் வேற்றுமை உருபு — வினைமுதல் கருவி அனைமுதற்று (557), அதனின் இயறல், அதன்தகு கிளவி, அதன் வினைப்படுதல், அதனின் ஆதல், அதனின் கோடல், அதனொடு மயங்கல், அதனோடு இயைந்த ஒரு வினைக் கிளவி, அதனோடு இயைந்தவேறுவினைக்கிளவி, அதனோடு இயைந்த ஒப்பல் ஒப்புரை, இன்னான் ஏது ஆகிய இடங்களில் வரும் (558), 3. நோக்கல் நோக்கம் (577), 4. தடுமாறு தொழிற்பெயர் (579).

144. ஒருத்தல் — புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம் (1535), யானை, பன்றி (1536), எருமை (1537) ஆகியவற்றின் ஆண்மைப் பெயர்.

145. ஒரூஉ—இருசீர் இடையிடுதல் (1356).

146. ஒழுகல்—1. நேர்மை (800), 2. நெடுமை (800).

147. ஒற்கம்—வறுமை (843).

148. ஒன்—சாரியை (119).

149. ஓ—1. ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து (4), 2. வினா (32, 741), 3, பிரிநிலை, எதிர்

மறை, ஒழியிசை, தெரிநிலை, சிறப்பு ஆகிய பொருள்களில் வரும் (741), 4. இசைநிறை (746).

150. ஒத்து—நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது (1426).

151. ஓய்தல் — நுணுக்கமாகிய குறிப்பு (513).

152. ஓலை — புல்லின் உறுப்பு (1586).

153. ஔ — ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து (4).

154. க—வல்லெழுத்து (19).

155. கடமை—பெண்யாடு (1564).

156. கடி—1. வரைவு, 2. கூர்மை, 3. காப்பு, 4. புதுமை, 5. விரைவு, 6. விளக்கம், 7. மிகுதி, 8. சிறப்பு, 9. அச்சம், 10. முன்தேற்று (866), 11. ஐயம், 12. கரிப்பு (867).

157. கடுவன் — ஆண் குரங்கு (1563).

158. கண் —1. ஏழாம் வேற்றுமை உருபு - வினை நிகழ்ச்சி, வினை நிலம், வினைக்காலம் முதலிய விடத்து வரும் (565), கண், கால், புறம், அகம், உள், உழை, கிழ், மேல், பின், சார், அயல்புடை, தேவகை, முன், இடை, கடை, தலை, வலம், இடம் ஆகிய பொருள்களில் வரும் (566), . வாழ்ச்சிக் (582), 3. பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி (545).

159. கண்டி—ஆண் எருமை (1563).

160. கதழ்வு—விரைவு (798).

161. கம்பலை—அரவமாகிய இசை (832).

162. கமம்—நிறைவு (838).

163. கய — 1. பெருமை (803), 2. மென்மை (805).

164. கரம்—சாரியை (134).

165. கருவி—தொகுதி (387).

166. கலம்—அளவு (168).

167. கலி — அரவமாகிய இசை (83).

168. கலி வெண் பாட்டு — ஒரு பொருள் முதலிய வெள்ளடி இயலால் திரிபின்றி வருவது (1410).

169. கலை—1. ஆண் புல்வாய் (1544), 2. ஆண் உழை (1545), 3. ஆண் முசு (1546).

170. கவர்வு—விருப்பு (845).

171. கவவு—அகத்திடு (840).

172. கழிநெடிலடி—மூவாறெழுத்து [ஈரெழுத்து மிகுதலும் இயல்பு] (1297).

173. கழிவு — ஒன்றனது சிறத்தலாகிய குறிப்புணர்த்தும் சொல் (727).

174. கழுமு—மயக்கம் (834).

175. களிறு—1. ஆண் வேழம் (1533), 2. ஆண்கேழல் (1534).

176. கற்பு—கரணமொடு புணரக் கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக் கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள்வது (1088).

177. கறுப்பு — 1. வெகுளிப் பொருள் (855), 2. நிறம் (856).

178. கன்று — யானை, குதிரை, கழுதை, கடமை, ஆன் (1514), எருமை, மரை (1515), கவரி, கராம் (1516), ஒட்டகம் (1517), ஓரறிவுயிர் (1523) [நெல் புல் நீங்கலாக (1524)],

ஆகியவற்றின் இளமைப் பெயர்.

179. கா—1. நிறை (169), 2. அசை நிலை (764).

180. காண்டிகை—பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பின் கரப்பின்றி முடிவது (1601).

181. காய்—புல், மரம் இரண்டிற்கும் பொது உறுப்பு (1588).

182. காரம்—சாரியை (134).

183. காலம்—இறப்பே நிகழ்வே எதிரது என்னும் திறத்தியல் மருங்கில் தெரிந்தனர் உள்ளப் பொருள் நிகழ்வு உரைப்பது (1458).

184. கு—நான்காம் வேற்றுமை உருபு (559), அதற்கு வினையுடைமை, அதற்குடம்படுதல், அதற்குப் படுபொருள், அதுவாகு கிளவி, அதற்கு யாப்புடைமை, அதற் பொருட்டாதல், நட்பு, பகை, காதல், சிறப்பு முதலிய பொருள்களில் வரும் (560).

185. குட்டி — மூங்கா, வெருகு, எலி, மூவரி அணில் (1505), நாய், பன்றி, புலி, முயல், நரி (1509), குரங்கு (1512) ஆகியவற்றின் இளமைப் பெயர்.

186. குமிழ்—மரம் (386).

187. குரு—நிறம் (786).

188. குருளை — நாய், பன்றி, புலி, முயல் (1507), நரி (1508) ஆகியவற்றின் இளமைப் பெயர்.

189. குரை—1. இசைநிலை, 2.அசை நிலை (757).

190. குலை — புல்லின் உறுப்பு (1586).

191. குழ—இளமை (795).

192. குழவி—குஞ்சரம் (1518), ஆ, எருமை, (1519), கடமை, மரை, (1520), குரங்கு, முசு, ஊகம் (1521), மக்கள் (1522), ஓரறிவுயிர் (1523) [நெல், புல் நீங்கலாக (1514)] ஆகிய வற்றின் இளமைப் பெயர்.

193. குழை — மரத்தின் உறுப்பு (1587).

194. குறளடி — நாலெழுத் தாதியாக ஆறெழுத்து ஏறிய நிலத்தது (1293).

195. குறிப்புரை—வாரா மரபின வரக்கூறுதலும் என்னு மரபின எனக்கூறுதலும் அன்னவை எல்லாம் அவற்ற வற்றியல்பான் இன்ன என்னும் உரை (905).

196. குறிப்பு மொழி — எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிப் பொருட் புறத்தது (1435).

197. கூர்ப்பு — ஒன்றனது சிறத்தலாகிய குறிப்புணர்த்தும் சொல் (797).

198. கெடவரல் — விளையாட்டு (802).

199. கெழு—நிறம் (786).

200. கொடு—இரவின்கிளவி (926) [உயர்ந்தோன்கூற்று (930)].

201. கொல்—ஐயம் (753).

202. கொன் — 1. அச்சம், 2. பயமின்மை, 3. காலம், 4. பெருமை (739).

203. கோட்டான் — மரம்பயில் கூகை (1563).

204. ங—மெல்லெழுத்து (20)

205. ச—வல்லெழுத்து (19).

206. சாய் — நுணுக்கமாகிய குறிப்பு (813).

207. சாயல்—மென்மை (808).
208. சிந்தடி — ஏழெழுத்து [ஈரெழுத் தேற்றம் அவ்வழி யான்] (1294).
209. சில— அஃறிணைப் பெயர் (643).
210. சிலைத்தல் — இசைப்பொருட் கிளவி (841).
211. சிவப்பு — 1. வெகுளிப் பொருள் (855), 2. நிறம் (856).
212. சிறுமை—நோய் (824).
213. சின்—அசை (759).
214. சினை — மரத்தின் உறுப்பு (1587).
215. சீர் — ஈரசை கொண்டு மூவசை புணர்ந்தும் சீரி யைந்திற்றது (1269).
216. சீர்த்தி—மிகுபுகழ் (796).
217. சீர்நிலை — ஐந்தெழுத்து இறவாதது (1298).
218. சுண்ணம் — பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர் ஒட்டு வழி அறிந்து துணிந்தனர் இயற்றல் (889).
219. சும்மை—அரவமாகிய இசை (832).
220. சூத்திரம்—ஆடிநிழலின் அறி யத்தோன்றி நாடுதலின்றிப் பொருள் நனி விளங்க யாப் பினுள் தோன்ற யாத்தமைப் பது (1425), யாப்பின் உட் பொருளொடு சிலவகை எழுத்தின் செய்யுட்டாகி உரையகத் தடக்கி நுண்மை யொடு புணர்ந்த ஒண்மைத் தாகித் துளக்கல் ஆகாத் துணைமை யெய்தி அளக்கல் ஆகா அரும்பொருட்டாகிப் பல் வகையானும் பயன் தெரிபுடையது (1600).
221. செதிள் — புல், மரம் இரண் டிற்கும் பொது உறுப்பு (1588).
222. செம்பொருள் — வசை [அங்கதம்] (1382).
223. செல்லல்—இன்னுமை (787).
224. செழுமை — 1. வளன், 2. கொழுப்பு (835).
225. செவியுறை—1. பொங்குதல் இன்றிப் புரையோர் நாப் பண் அவிதல் கடன் எனச் செவியுறுத்தல் (1371), 2. புகழொடும் பொருளொடும் புணர்ந்த செய்யுள் (1385).
226. சே — 1. மரம் (278, 282), 2. விலங்கு (279), 3. ஆவினுள் ஆண்மையையே குறிக்கும் சொல் (1550, உரை).
227. சேர்—திரட்சி (846).
228. சேவல் — 1. ஆண்குதிரை (1563), 2. சிறகுடைப்புள் [மயில் நீங்கலாக (1548)].
229. ஞ—மெல்லெழுத்து (20).
230. ஞெமிர்தல்— பரத்தல் (844).
231. ஞெமை—மரம் (282).
232. ட—வல்லெழுத்து (19).
233. ண—மெல்லெழுத்து (20).
234. த—வல்லெழுத்து (19).
235. தகர்—ஆண்யாடு (1547).
236. தஞ்சம்—எண்மை [எளிமை] (751).
237. தத்தை—செவ்வாய்க் கிள்ளை (1563).
238. தட — 2. பெருமை (803), 2. கோட்டம் (804).
239. தவ — மிகுதி (784).
240. தளிர் — மரத்தின் உறுப்பு (1587).

241. தா—1. வலி, 2. வருத்தம் (827), 3.இரவின்கிளவி (927) [ஒப்போன் கூற்று (929)].
242. தில்—1. விழைவு, 2. காலம், 3. ஒழியிசை (738).
243. தீர்த்தல்—விடுதல் (801).
244. தீர்தல்—விடுதல் (801).
245. தெருமரல்—சுழற்சி (794).
246. தெவ்வு—பகை (829).
247. தெவு—கொள்ளுதல் (828).
248. துயவு — அறிவின் திரிபு (851).
249. துவன்று—நிறைவு (815).
250. துவைத்தல் — இசைப் பொருட்கிளவி (841).
251. துறை—அவ்வவ மாக்களும் விலங்கும் அன்றிப் பிற அவண்வரினும் திறவதின் நாடித் தத்தம் இயலான் மரபொடு முடிதல் (1465).
252. துணேவு—விரைவு (798).
253. தொன்மை — உரையொடு புணர்ந்த பழைமை மேற்று (1493).
254. தோடு—1. புல்லின் உறுப்பு (1586), 2. மரத்தின் உறுப்பு (1587).
255. தோல்—1. புல், மரம் இரண்டிற்கும் பொது உறுப்பு (1588), 2. இழுமென் மொழியான் விழுமியது நுவலலும் பரந்த மொழியான் அடி நிமிர்ந்து ஒழுகலும் (1494).
256. தோல் — பன்மை சுட்டிய சினேநிலேக் கிளவி (545).
257. ந—மெல்லெழுத்து (20).
258. நங்கை—உயர்திணேப்பெயர் (648).
259. நம்—சாரியை (190).
260. நம்பி—உயர்திணேப் பெயர் (648).
261. நம்பு—நசை (812).
262. நமை—மரம் (282).
263. நளி—1. பெருமை (803), 2. செறிவு (806).
264. நன்று—பெரிது (826).
265. நன்றே—குறிப்போசையாற் பொருளுணர்த்தும் சொல் (767).
266. நனவு—1. களன் (இடம், அவை), 2. அகலம் (859).
267. நனி—மிகுதி (784).
268. நணே — மரத்தின் உறுப்பு (1587).
269. நாகு—எருமை, மரை, பெற்றம் (1562), நீர்வாழ் சாதியுள் நந்து (1563) ஆகியவற்றின் பெண்மைப் பெயர்.
270. நாம் — உயர்திணேப் பெயர் (647), 2. அச்சம் (848).
271. நிரனிறை—விணேயினும் பெயரினும் நிணேயத் தோன்றிச் சொல் வேறு நிலேஇப் பொருள் வேறு நிலேயல் (888).
272. நிழத்தல் — நுணுக்கமாகிய குறிப்பு (813).
273. நுணங்கு—நுண்மை (857).
274. நுழைவு—நுண்மை (857).
275. நூல்—முதலும் முடிவும் மாறுகோளின்றித் தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி உண்ணிகன்றகன்ற உரையொடு பொருந்தி நுண்ணிதின் விளக்கல் (1422), ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை மெய்ப்படக் கிளந்த வகையதாகி ஈரைங் குற்றமும் இன்று நேரிறின்

முப்பத்திரு வகை உத்தியொடு புணர்தல் (1598).

276. நெடிலடி— மூவைந்தெழுத்து [ஈரெழுத்து மிகுதலும் இயல்பு] (1296).

277. நொசிவு—நுண்மை (857).

278. நோக்கு—மாத்திரை முதலா அடிநிலை காணும் நோக்குதற் காரணம் (1361).

279. ப—வல்லெழுத்து (19).

280. பசப்பு—நிறம் (791).

281. படர்—1. உள்ளல், 2. செலவு (823).

282. படலம்—ஒரு நெறி இன்றி விரவிய பொருளால் பொது மொழி தொடர்தல் (1427).

283. பண்ணத்தி — பாட்டிடைக் கலந்த பொருளவாகிப் பாட்டின் இயலல் (1436).

284. பண்ணை—விளையாட்டு (802).

285. பனை—1. பிழைத்தல் [தவறுதல்], 2. பெருப்பு [பெருத்தல்] (822).

286. பயப்பு—பயன் (790).

287. பயன்—இது நனி பயக்கும் இதனுன் என்னும் தொகைநிலைக் கிளவி (1459).

288. பரவு—வழுத்துதல் (865).

289. பல்ல — அஃறிணைப் பெயர் (653).

290. பல — அஃறிணைப் பெயர் (653).

291. பழம்—புல், மரம் இரண்டிற்கும் பொது உறுப்பு (1588).

292. பழிகரப்பு — மொழிகரந்து சொல்லல் (1383).

293. பழிச்சு — வழுத்துதல் (865).

294. பழுது—பயமின்மை (807).

295. பறழ்—மூங்கா, வெருகு, எலி, மூவரி அணில் (1506), நாய், பன்றி, புலி, முயல், நரி (1509), குரங்கு (1513) ஆகியவற்றின் இளமைப் பெயர்.

296. பனி—காலம் (241).

297. பனை—அளவு (169).

298. பாட்டி—பன்றி, நாய் (1565), நரி (1566) ஆகியவற்றின் பெண்மைப் பெயர்.

299. பாட்டு — அடியின் சிறப்பு (1292).

300. பாய்தல்—பரத்தல் (844).

301. பார்ப்பு — 1. பறப்பவற்றிளமை(1503), 2. தவழ்பவற்றிளமை (1504), 3. குரங்கின் இளமை(1513).

302. பாளை — புல்லின் உறுப்பு (1586).

303. பிடி—பெண் யானை (1551).

304. பிணவல்—பன்றி, புல்வாய், நாய் இவற்றின் பெண்மை (1559).

305. பிணவு — பன்றி, புல்வாய், நாய் இவற்றின் பெண்மை (1558).

306. பிணா — மக்கட் பெண்மை (1561).

307. பிணை — 1. பெட்பு (821), 2. புல்வாய், நவ்வி, உழை, கவரி இவற்றின் பெண்மை (1557).

308. பிள்ளை — 1. பறப்பவற்றிளமை (1503), 2. தவழ்பவற்றிளமை (1504), 3. பன்றி, புலி, முயல், நரி (1510), குரங்கு (1513), 4. ஓரறிவுயிர் [நெல், புல் நீங்கலாக (1524)] (1523).

309. பிற—அசைநிலை (764).

310. பிறக்கு—அசைநிலை (764).

311. புரை—உயர்வு (785).

312. புல்—புறக்காழன (1585).
313. புலம்பு—தனிமை (814).
314. புலன் — தெரிந்த மொழி யாற் செவ்விதின் கிளந்து தேர்தல் வேண்டாது குறித் தது தோன்றல் (1497).
315. புளி—1. மரம் (244), 2. சுவை (245).
316. புனிறு—ஈன்றணிமை (858).
317. பூ—மரத்தின் உறுப்பு (1587).
318. பூசை—வெவ்வாய் வெருகு (1563).
319. பெட்டை — பேடை, பெடை (1554), ஒட்டகம், குதிரை, கழுதை. மரை (1552), புள் (1553) ஆகியவற்றின் பெண்மை.
320. பெண்—மக்கட் பெண்பாற் பெயர் (1561).
321. பெண்டாட்டி — உயர்திணைப் பெயர் (648).
322. பேண்—பெட்பு (821).
323. பேம்—அச்சம் (848).
324. பையுள்—நோய் (824)
325. பொருள் வகை — இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரி வும்,ஒழுக்கமும் என்று இவை இழுக்கு நெறி இன்றி இது வாகித் திணைக்கு உரிப் பொருள் எனது பொதுவாய் நிற்றல் (1464).
326. பொழிப்புத் தொடை — ஒரு சீர் இடையிட்டெதுகையாதல் (1355).
327. பொற்பு—பொலிவு (818).
328. போ—அசைநிலை (764).
329. போக்கு—வைப்பு (1393).
330. போகல் — 1. நேர்மை, 2. நெடுமை (800).
331. போத்து — 1. ஓரறிவுயிர் [நெல், புல் நீங்கலாக (1524)] இளமைப் பெயர் (1523), 2. பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய் (1541), சுறு, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை (1542, உரை), மயில், எழால் (1543) ஆகியவற்றின் ஆண்மை.
332. ம—மெல்லெழுத்து (20).
333. மக்கள்—உயர்திணைப்பெயர் (648).
334. மகடூஉ — உயர்திணைப் பெயர் (648).
335. மகவு—குரங்கு (1513), மக் கள் (1522) இளமைப் பெயர்.
336. மகள்—உயர்திணைப் பெயர் (648).
337. மகன்—உயர்திணைப் பெயர் (648).
338. மடல் — புல்லின் உறுப்பு (1586).
339. மத—1. மடன் (860), 2. வலி (860), 3. மிகுதி (861), 4. வனப்பு (861).
340. மதி — முன்னிலையசை (759).
341. மந்தி — குரங்கு, முசு, ஊகம் ஆகியவற்றின் பெண்மை (1567).
342. மந்திரம்—நிறைமொழி மாந் தர் ஆணையின் கிளந்த மறைமொழி (1434).
343. மரபு—நாற்சொல் இயலான் யாப்பு வழிப்பட்டது (1337).
344. மரம் — அகக்காழன (1585).
345. மல்லல்—வளம் (788).
346. மழ — இளமை (795).
347. மற்று — 1. வினைமாற்று, 2. அசைநிலை (747).

348. மற்றையது — சுட்டுநிலை யொழிய இனங்குறிக்கும் சொல் (749).

349. மறி—யாடு, குதிரை, நவ்வி, உழை, புல்வாய் ஆகிய வற்றின் இளமை (1511).

350. மன்—1. கழிவு, 2. ஆக்கம், 3. ஒழியிசை (737).

351. மன்ற—தேற்றம் (750).

352. மா—1. மரம் (231), 2. வியங்கோள் அசை (758).

353. மாட்டு — அகன்று பொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும் இயன்று பொருள் முடியத்தந்தனர் உணர்த்தல் (1466).

354. மாத்திரை — கண்ணிமை, நொடி (7).

355. மாதர்—காதல் (811).

356. மாது—அசைநிலை (764).

357. மாந்தர் — உயர்திணைப் பெயர் (648).

358. மாலை—இயல்பு (796).

359. மியா — 1 ஏவல் குறித்த உரையசை(224), 2.முன்னிலையசை (759).

360. மீ—இடம் வரை கிளவி (250).

361. முதனூல் — வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது (1594).

362. முதுமொழி — நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும் மென்மையும் என்று இவை விளங்கத் தோன்றிக் குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம் ஏது நுதலியமொழி (1433).

363. முரஞ்சல்—முதிர்வு (816).

364. முரண் — 1. தொழிற்பெயர் (309), மொழியினும் பொருளினும் முரணுதல் (1352).

365. முலை—பன்மை சுட்டிய சினை நிலைக் கிளவி (545).

366. முழுது — எஞ்சாமை (809).

367. முறி — மரத்தின் உறுப்பு (1587).

368. முன்னம் — இவ்விடத்து இம் மொழி இவர்இவர்க்கு உரிய என்று அவ்விடத்து அவரவர்க்கு உரைப்பது (1463).

369. முனைவு—முனிவு (869).

370. மூடு—பெண்யாடு (1564).

371. மெய் — பதினெண் எழுத்து (9).

372. மெய்ப்பாடு—உய்த்துணர்வு இன்றித் தலைவரும் பொருளான் மெய்ப்பட முடிப்பது (1460).

373. மே—நசை (812).

374. மொழிமாற்று—சொன்னிலை மாற்றிப் பொருளெதிர் இயைய முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல் (892).

375. மோ—முன்னிலையசை (759).

376. மோத்தை — ஆண்யாடு (1547).

377. மோனை — அடிதொறுந்தலையெழுத்து ஒப்பது (1349).

378. ய—இடையெழுத்து (21).

379. யா—1. வினா (159, 175, 178, 224, 427, 428), 2. மரம் (229), 3. அஃறிணைப்பெயர் (652), 4. அசைநிலை (764).

380. யாண்—கவின் (864).

381. யாணர்—புதிதுபடல் (862).

382. யாது — 1. வினா (515), 2. அஃறிணைப்பெயர் (652).
383. யாப்பு — எழுத்து முதலா ஈண்டிய அடியிற் குறித்த பொருளை முடிய நாட்டல் (1335).
384. யாம் — உயர்திணைப் பெயர் (647).
385. யார்—வினா (695).
386. யாவர்—உயர்திணைப் பெயர் (647).
387. யாவள் — உயர்திணைப் பெயர் (647).
388. யாவன்—உயர்திணைப்பெயர் (647).
389. யாவை—அஃறிணைப் பெயர் (652).
390. யான்— உயர்திணைப் பெயர் (647).
391. ர—இடையெழுத்து (21).
392. ல—இடையெழுத்து (21).
393. வ—இடையெழுத்து (21).
394. வஞ்சிச்சீர் — வெண்சீர் அல்லா மூவசை (1277).
395. வம்பு—நிலையின்மை (810).
396. வய—வலி (849).
397. வயா—வேட்கைப் பெருக்கம் (854).
398. வளி—பூதக்கிளவி (242).
399. வற்று—சாரியை (119).
400. வறிது—சிறிது (819).
401. வார்தல் — 1. நேர்மை, 2. நெடுமை (800).
402. வாள்—ஒளி (850).
403. விசை—மரம் (283, 313).
404. விண்—காயப் பெயர் (305).
405. விதிர்ப்பு—நடுக்கம் (790).
406. வியல்—அகலம் (847).
407. விருந்து — புதுவது கிளந்த யாப்பின் மேற்று (1495).
408. விழுமம் — 1. சீர்மை, 2. சிறப்பு, 3. இடும்பை (836).
409. விறப்பு — 1. செறிவு (830), 2. அச்சம் (831).
410. வீழ் — புல், மரம் இரண்டிற்கும் பொது உறுப்பு (1588).
411. வெம்மை—வேண்டல் (817).
412. வெறிப்பு—செறிவு (830).
413. வை—கூர்மை (870).
414. ழ—இடையெழுத்து (21).
415. ள—இடையெழுத்து (21).
416. ற—வல்லெழுத்து (19).
417. ன—மெல்லெழுத்து (20).

இணைப்பு—3.

### தொல்காப்பியம்

அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல் (925)

சீர்த்தி மிகுபுகழ்...... (796)

அம்ம கேட்பிக்கும் (761)

ஆங்கஉரையசை (762)

மியா இகமோ மதி இகும் சின் என்னும் ஆவயினாறும் முன்னிலை யசைச்சொல் (759)

யாகா,
பிற பிறக் கரோபோ மாதுஎன வரூஉம் ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி (764)

எயும் குரையும் இசைநிறை யசைநிலை (757)

ஒப்பில்போலியும் அப்பொருட்டாகும் (763)

அவைதாம்,
இன்னே வற்றே அத்தே அம்மே ஒன்னே ஆனே அக்கே இக்கே அன்னென் கிளவி உளப்படப் பிறவும் அன்னவென்ப சாரியை மொழியே (119)

காரமும் கரமும் கான் ஒடு சிவணி நேரத்தோன்றும் எழுத்தின் சாரியை (134)

ஐ ஒடு கு இன் அது கண் என்னும் அவ்வா றென்ப வேற்றுமை யுருபே (113)

அ இ உஅம் மூன்றும் சுட்டு (31)

ஆ எ ஒ அம்மூன்றும் வினா (32)

### சேந்தன் திவாகரம்

இடக்கர் என்பது மறைத்து மொழி கிளவி (225)**

சீர்த்தியும் கீர்த்தியும் மிகுபுகழாகும் (226)

அம்ம கேட்பிக்கும் உரையசைச் சொல்லே (228)

ஆங்கு அவ்வுரையசைச் சொல்லெனலாகும் (228)

மியா இகமோ மதி இகும் சின் என்னும் ஆவயினாறும் முன்னிலை யசைச்சொல் (228)

யா கா பிற பிறக்கு அரோ போ மாது எனவரூஉம் ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி (228)

ஏயும் குரையும் இசைநிறை யசைநிலை; ஒப்பில் போலியும் அப்பொருட்டாகும் (228)

இன்னே வற்றே அற்றே அம்மே ஒன்னே ஆனே அக்கே இக்கே அன் என்கிளவி உளப்படப் பிறவும் அன்னவென்ப சாரிை மொழியே (229)

காரமும் கரமும் கான் ஒடு சிவணி நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை (229)

ஐ ஒடு கு இன் அது கண் என்னும் அவ்வாறென்ப வேற்றுமை யுருபே (229)

அ இ உ அம்மூன்றுஞ் சுட்டே (229)

ஆ எ ஒ இம்மூன்றும் வினா (229)

---

* இக்கட்டுரையில் அடைப்புக்குள் உள்ள எண்கள், (இணைப்பு—3. சேந்தன் திவாகரப் பகுதி நீங்கலாக) தொல்காப்பிய (தொல். மூலம், கழகம், 1967) நூற்பாக்களைக் குறிக்கும்.

** சேந்தன் திவாகரம் (கழகம், 1958) பக்கத்தைக் குறிக்கும் எண்.

# 3. கலைக்களஞ்சியத்தில் தமிழியல் பொதுக்கட்டுரைகள்

கு. மோகனராசு, பி. எசி., எம்.ஏ.,
சான்றிதழ்—மானிடவியல், ஆராய்ச்சித் துணைவர்,
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி, தமிழ்த்துறை.

கட்டுரைகளும் கண்ணோட்டமும் —தமிழுணர்வின் தனிப்பண்பு — கலப்பும் கலக்கமும் — கட்டுரைகளில் கவிதையின் ஊற்று — நடையும் நினைப்பும் — வெறுப்பின் வெளிப்பாடு — சங்க இலக்கியமும் தணியா வேட்கையும்—கோணமும் கோலமும்—கலைக்களஞ்சியமும் நாளைய கடனும்.

### கட்டுரைகளும் கண்ணோட்டமும்

பல்கலையின் வாயிலாக விளங்கும் கலைக்களஞ்சியத்தில் கட்டுரை களாகவும், சிறு குறிப்புகளாகவும் உள்ள தமிழ்த் தொடர்பான தலைப்புகள் ஏறத்தாழ 3500. அத் தலைப்புகளில் கட்டுரைகளாக உள்ளனவற்றுள்ளும் பொதுவானவைகளாக (சமயம் நீங்கலாக) உள்ளனவும், தற்காலத் தமிழ் இலக்கிய உலகின் புதிய வடிவங்க ளாக விளங்குவனவுமாக உள்ள மொத்தம் 25 கட்டுரைகளின் மதிப் பீடே இக் கட்டுரை. (பார்க்க : பின்னிணைப்பு - 1). இடையில் அவற்றின் உள்ளீடாக மிளிரும் சில பண்பியல்புகளும் சுட்டப்படும்.

மொழியியல் அறிஞர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் எழுதி யுள்ள 'தமிழ்மொழி வரலாறு' என்னும் கட்டுரை காலப் போக்கிற் கேற்ப தமிழின் எழுத்தொலி அமைப்பிலும் சொல்லமைப்பிலும் எத்தகைய மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன என்பதைத் தெளிவு படுத்துவது. இது, நுண்ணிதின் ஆய்ந்து கால முறைப்படி அமைக்கப் பட்ட மிகச் சிறந்த ஆய்வுக் கட்டுரைகளுள் ஒன்று. இதில் காணும்,

> "மொழிக்கு முதலில் சகரம் வந்தபோது அது கெட்டது. அது அசோகர் காலத்திற்குப் பின்னர் எழுந்த மாற்றமென்று சிலர் கொண்டாலும் ஈ என்ற பகுதி மொழி முதல் சகரத்தை இழந்து தென் திராவிட மொழிகளிலெல்லாம் வழங்குவ தோடு, அவற்றில் சொல்லுருபாகவும் அது அமைந்துவிட்ட நிலையை நோக்கும்போது இஃதொரு பழைய மாற்றமே எனல் வேண்டும்.

சான்றோர் - ஆன்றோர் ; சாய்தல் - ஆய்தல் ; சபை - அவை ; செட்டி - எட்டி ; சேனதி - ஏனதி

என வருதல் காண்க. சகரம் கெட்ட காலத்தும் சில சொற்கள் பேச்சு வழக்கிலோ, இலக்கிய வழக்கிலோ வழங்கி இருந்தவை சங்க காலத்தில் மறுபடியும் வந்து புகுந்தன எனல் வேண்டும் "[1]

என்னும் கருத்து ஆழ்ந்து சிந்திக்கவல்லது. ஒரு மொழியின்மீது பிற மொழியின் தாக்குதல் ஏற்படின் சில நேரங்களில் எழுத்தொலி அமைப்பிலுங்கூட மாற்றம் ஏற்படும் என்பதை,

"தொல்காப்பியர் டகரம் நாமடி ஒலியாகும் (Retroflex) என்று கூறவில்லை ; றகரமே நாமடி எழுத்தென்று கூறுகின்றார். வட மொழி டகரமோ நாமடி எழுத்தாம். வடமொழி, பல்லவர் காலத்தில் கற்றோர் பயின்ற மொழியாதலின் அதன் சார்பால் தமிழில் சில மாறுதல்கள் எழுந்தன ; டகரம் நாமடி எழுத்தா யிற்று "[2]

என்னும் கருத்தால் விளக்கக் காண்கின்றோம். அன்றியும், சமுதாயப் போக்கிற்கேற்ப ஒரு மொழியமைப்பில் மாறுதல்கள் ஏற்படும் என்பதை,

"ஒருமையில் பேசுவது உயர்வன்று என்று தோன்றியபின் தாய், தமக்கை, தங்கை, அண்ணன் முதலியோரை ஒருமையில் பேசச் சிலர் கூசினர். தெலுங்கில் பெண்ணை ஒன்றன்பா லாக்கி வழங்குகிற வழக்கம் ஒருபுறம் ; துறவிகள் அஃறிணை யாகத் தம்மைத்தாமே இழித்துப் பேசி வந்த வழக்கம் பெரு வழக்கானபோது இழிவு ஒன்றுமின்றிப் பிறரும் 'அடிகள் வந்தது' எனப் பாராட்டும் உயர் வழக்கானது மற்றொரு புறம். இவ்விரண்டின் போக்காலும் மரியாதை வழக்காகப் பெண்களையும் உயர்ந்தோரையும் ஒன்றன்பாலில் பேசுவதும் வழக்காயிற்று "[3]

"சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வு கற்பிப்பது பெருகிய காலத்தில் முன்னிலையில் நின்று பேசுவார், தன்மையில் நின்று பேசு வோரினும் தாழ்ந்தவர் உயர்ந்தவர் என்பவற்றிற்கெல்லாம் ஏற்பச் சில சொற்களை முடிக்குஞ் சொல்லில் விகுதித் தன்மை பெற்று வழங்கக் காண்கிறோம் "[4]

என்னும் கருத்துகள் தெளிவுபடுத்தக் காண்கிறோம்.

பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் எழுதியுள்ள மற்ற கட்டுரை களுள் 'இலக்கண வரலாறு' என்பது பல நுட்ப வெளிப்பாடுகளுடன்

விளங்குகிறது ; 'தமிழ்ச்சங்கம்' என்னும் கட்டுரையில் தாம் அறிந்த வற்றைத் தொகுத்து அளிப்பதோடு நிறுத்திக்கொண்டுள்ளார் ; அவற்றுடன் ஒரு விளக்கப் பட்டியலும் இணைத்துள்ளார். 'இருபதாம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வரலாறு' என்னும் கட்டுரையில் வாய் மொழி இலக்கியம், பத்திரிகைத் தமிழ், சிறுவர் இலக்கியம், பொது மக்கள் இலக்கியம், கவிதை, நாடக இலக்கியங்கள், சிறுகதை, நாவல் ஆகியவை எவ்வெவ்வாறு வளர்ந்துள்ளன என்பதை ஆராய்கின்றார்.

பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் எழுதியுள்ள 'தமிழ் இலக்கிய வரலாறு', 'தமிழர்' என்னும் இரு கட்டுரைகளும் தமிழ் இலக்கியத்தில் ஆழ்ந்த புலமையொடு தமிழ் உணர்வு மிளிர எழுதப்பட்ட கட்டுரைகள் ஆகும். முதல் கட்டுரையில், சங்க காலம், சங்கம் மருவிய காலம், சமய காலம், முகம்மதியர் — ஐரோப்பியர் காலம் எனப் பகுத்து அவ்வக் கால இலக்கியங்களையும், அவற்றின் தன்மைகளையும் விளக்குகின்றார்.

தமிழறிஞர் மொ. அ. துரையரங்கனார் அவர்களால் எழுதப்பட்ட 'அறநூல் வரலாறு' என்னும் கட்டுரை சமயச் சார்பை அடிப்படை யாகக் கொண்டு எழுதப்பட்ட கட்டுரை எனலாம். எடுத்துக்காட்டாக,

> "வீடு ஏதுவாக உலகியற் பொருள்கள் நிலையில்லாதன என்று கருதும் கருத்து அறத்தாற்றில் மக்களை ஈடுபடுத்தும் என்பது காஞ்சித்திணையில் தொல்காப்பியத்தில் உணர்த்தப்படு கிறது"[5]

> "மழை பெய்யவும், மிக்க மழை பெய்யின் அஃது ஒழியவும் முருகனுக்குப் பலிதூவிக் குறவர் தெய்வ வழிபாட்டறம் போற்றுவர் எனவும், சங்க நூற்கள் அறத்தாறுகளை ஆங்காங்கே உணர்த்துகின்றன"[6]

> "அறம் சிறப்பு எனப்படும் வீடுதரும் ; செல்வம் எனப்படும் தேவலோக வாழ்வு தரும்"[7]

என்னும் கருத்துகளைக் காட்டலாம். இவ்வாறு சமயத்தோடு தொடர் பான கருத்துகளைச் சுட்டுவது மட்டுமே அறநூல் வரலாறாகி விடாது எனலாம்.

தமிழ் உணர்வு இழையோட, எதுகையும் மோனையும் நடமாட, சிறிய அளவில் செறிவு நிலையில் சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களால் வடிக்கப்பட்டுள்ள கட்டுரை 'தமிழ் அரசியல் கருத் துக்கள்' என்பது. இதன்கண் இலக்கிய மேற்கோள்களும், இலக்கியக் கருத்துகளும் இணைப்புண்டு கருத்தை நெறியுற விளக்க முனைகின்ற நிலையைக் காண முடிகின்றது.

'தமிழர் விருதுகள்', 'தமிழகம் — பழைய பிரிவுகள்' என்னும் இரு கட்டுரைகளும் பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம் அவர்களால்

எழுதப்பட்டுள்ளன; இரு கட்டுரைகளும் சுருங்கிய அளவில் நிறைவான ஆய்வுகளாக விளங்குகின்றன. 'தமிழர் விருதுகள்' என்னும் கட்டுரையில், விருது என்பதற்குக் கொடி, பட்டம், சின்னம் எனப் பொருள் கொண்டு மன்னர்கள், குறுநில மன்னர்கள், தொழில் அடிப்படையில் சமுதாயத்தில் இருந்த மக்கள் ஆகியோர்க்குரிய விருதுகளை விளக்குகிறார்.

'தமிழகம்—பழைய பிரிவுகள்' என்னும் கட்டுரையில், சேர சோழ பாண்டிய நாடுகள், தொண்டை நாடு, கொங்கு நாடு ஆகியவைகளின் எல்லைகளையும் பரப்புகளையும் வரையறுத்துள்ளார். (பார்க்க: பின்னிணைப்பு - 2).

'நாடகத் தந்தை' பம்மல் சம்பந்த முதலியார் அவர்கள் எழுதியுள்ள 'தமிழ் நாடகக் கலை வரலாறு' என்னும் கட்டுரை ஒரு கதைப் போக்காய் அமைந்து, படிக்கும் ஆவலைப் பாமர மக்களுக்கும் தூண்டும் வகையில் உள்ளது; காலப் போக்கில் நாடகக் கலையில் ஏற்பட்ட மாற்றம் நகைச்சுவை மிளிரக் கூறப்பட்டுள்ளது. இதன்கண் ஆசிரியர், கம்பர் ஒட்டக்கூத்தர் புகழேந்தி முதலாய பெரும்புலவர்கள் நாடக இலக்கியம் படைக்காமைக்குக் காரணம் யாது என வினவிப் படிப்பாரைச் சிந்திக்க விடுகின்றார்.

பேராசிரியர் சி. எஸ். ஸ்ரீநிவாசாச்சாரியார் அவர்களின் 'பிற நாடுகளில் தமிழர்' என்னும் கட்டுரை, வரலாற்றுணர்வோடு எழுதப்பட்டதாகும். இதன்கண்,

> "நாளடைவில் அகத்தியரை மக்கள் தெய்வமாகக் கொண்டாடவும் ஆரம்பித்தனர். முதன்முதலில் அகத்தியரின் உருவமானது சந்தனக் கட்டையிலும், பிறகு கல்லிலும் செதுக்கப்பட்டு வழிபடப்பட்டு வந்தது. சுமத்ரா, ஜாவா, போர்னியோ தீவுகளில் நடைமுறையிலிருந்த உறுதிமொழிகளில் கூட அகத்தியர் பெயர் வழங்கி வந்தது. அந் நாட்டார் அகத்தியருக்கு வலாயிங் (Valaing) என்ற பெயரை வழங்கி வந்தனர்"[8]

> "(இந்தோனேசியாவில்) கோயில்களின் பூசைக்காலங்களில் ஓதுவதற்கான மந்திரங்கள் சமஸ்கிருதத்திலும் தமிழிலும் இப்போது வழங்கி வருகின்றன"[9]

எனவரும் கருத்துகள் உன்னற்பாலன.

தமிழறிஞர் க. வெள்ளைவாரணனார் ஆராய்ந்து தீட்டிய 'இசைத் தமிழ்' என்னும் கட்டுரை ஆய்வு நுட்பம் செறிந்ததொன்று. காலப் போக்கிற்கேற்ப இசைக்கலையில் ஏற்பட்ட தொய்வு, மாற்றம், ஏற்றம் ஆகியவற்றைப் பற்றி முற்பகுதியிலும், இசைத்தமிழ் ஆராய்ச்சியை

இரண்டாம் பகுதியிலும் கூறுகின்றார். இக் கட்டுரை, சிலப்பதிகாரம், சிலப்பதிகார உரைகள், கருணாமிருதசாகரம், யாழ்நூல், பூர்வீக சங்கீத உண்மை என்னும் நூல்களை ஆழ்ந்து கற்றதன் எதிரொலி எனலாம். இதில் காணும்,

> "நிலத்திற்கும் காலத்திற்கும் ஏற்பப் பண்டையோர் இசை வகுத்திருந்தனர். காலையில் மருதப் பண்ணும், நண்பகலில் பாலைப்பண்ணும், மாலையில் செவ்வழிப்பண்ணும், நள்ளிரவில் குறிஞ்சிப்பண்ணும் வாசித்தற்குரியன என்பது இசை நூன் மரபு"[10]

என்னும் கருத்து சிந்தைகொளத்தக்கது. மேலும், இக் கட்டுரை யாசிரியர் தற்போது இசையறிஞர் கொண்ட தவறான கருத்துகள் சிலவற்றை மறுத்து, தமிழ் இசையோடு நேரடிப்பொருள் கொண்ட வடமொழிப் பெயர்களையும் அவற்றின் பெயர்க் காரணங்களையும் வரையறுக்கின்றார் (பார்க்க : பின்னிணைப்பு—3).

'உரைநடை இலக்கிய வரலாறு' என்னும் கட்டுரையில் தணிகை மணி ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் உரை நடையின் போக்கைக் காலப்பாகுபாட்டின்படி மூன்றாகப் பகுத்து விளக்குகின்றார். இடையே சேனாவரையர், நச்சினார்க்கினியர், பரிமே லழகர் ஆகியோரின் நடைகளை ஒப்பிடுகின்றார்.

> "கவிதைக்குரிய உறுப்புகள் எல்லாம் மலரின் இதழ்களும் மற்ற அங்கங்களும் போலாம். இத்தனைக்கும் ஆதாரமாக மலரின் தோற்றத்துக்கே மூல காரணமாக உள்ள தத்துவம் ஒன்று உள்ளே இருந்து தொழிற்படுகிறது. அதுவே கவிஞனது இதயத் தத்துவம் ஆகும். இந்த உயிர்த் தத்துவம் தொழிற்படாமல் ஆக்கப்படுகிற செய்யுட்கள் எல்லாம், வடிவம் சரியாக இருந்தாலும் வெறும் காகிதப் பூக்கள் தாம்"[11]

என்னும் கருத்தொன்றை உள்ளடக்கிய மீ. ப. சோமசுந்தரம் அவர் களின் 'கவிதையும் தமிழும்' என்னும் கட்டுரை பெரும்பான்மையும் அணியிலக்கணத்தைக் கூறுவதையே அடிப்படையாகக் கொண் டுள்ளது.

பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள், 'சிறுகதை,' 'தமிழ்க்கட்டுரை' என்னும் அளவால் சிறிய, ஆனால் கற்பார்க்கு மேன் மேலும் ஆய்வுணர்வைத் தூண்டிவிடும் இரு கட்டுரைகளை எழுதியுள் ளார். இதே போன்று, 'நாவல்', 'தமிழ் நாடக இலக்கியம்', 'தமிழகம்', 'தமிழ் லெக்சிக்கன்' என்னும் கட்டுரைகள் ஆசிரியர் குழுவினரால் எழுதப்பட்டுள்ளன. இவற்றுள், இங்கிலாந்து நாட்டிலே எண்ண உருக்கொண்டு, தமிழ்சேர் மதுரையில் செயலாகத் தவழ்ந்து, சென்னையம்பதியில் வாழ்வு பெற்ற தமிழ் லெக்சிக்கன் பற்றிய

கட்டுரையில் அதன் தோற்றம் வளர்ச்சி பற்றிய குறிப்புகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. 4200 நாட்கள் அரிதின் முயன்று முதல் ஆறு தொகுதிகளையும், பின்னர் 1939-ல் அதன் இணைப்பையும் வெளியிட்ட வரலாறு கணித முறையாகக் கூறப்பட்டுள்ளது.

'அகராதி,' 'அகராதிக்கலை' என்னும் இரண்டு கட்டுரைகளும் நுண்ணிய சில வேறுபாடுகளைத் தவிர ஒன்றோடொன்று ஒத்துள்ளன. பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களால் எழுதப்பட்ட 'அகராதி' என்னும் கட்டுரை கால உணர்வோடு எழுதப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரையாகும். புலவர் சுந்தர சண்முகனுர் அவர்களால் எழுதப்பட்ட 'அகராதிக்கலை' என்னும் கட்டுரை, 'அகராதி' என்னும் கட்டுரையை அடியொற்றிச் சென்றாலும் தமிழ் உணர்வு மிளிர எழுதப்பட்டதாகும். இதில் காணும்,

> "உலகத்திலேயே சொற்களின் முதலெழுத்துக்களை அகர வரிசையில் அடுக்கி அமைக்கப்பட்ட முதல் அகராதி நூல் அகராதி நிகண்டுதான். அடுத்து, இரண்டாவதாக கி.பி. 1612-ஆம் ஆண்டில் இத்தாலி மொழியில் அகர வரிசையில் ஓர் அகராதி தோன்றியது"[12]

என்னும் கருத்து,

> "In this manner, for instant, in England by 1450 not only Latin-English lexicons were in use but also English-Latin dictionaries were being made"[13]

என்னும் எஸ். எம். காத்ரே அவர்களின் கருத்தோடு ஒப்பிட்டு ஆய்ந்து உண்மை காண்பது அறிஞர்தம் கடமையாகும்.

இதுகாறும் கண்ட அறிமுகத்தை அடுத்து, இக் கட்டுரைகளில் காணும் இயல்பண்புகளைச் சிர்தூக்கின் மேலும் பல்வேறு உண்மைகள் புலனாகக் காணலாம்.

*தமிழுணர்வின் தனிப்பண்பு*

வெறும் அறிவு ஒன்றையே அடைப்படையாகக் கொள்ளாமல், அறிவு முனைப்பான உணர்ச்சிக்கும் இடம் கொடுத்துக் கலைக்களஞ்சியத் தமிழியல் கட்டுரைகள் வடிக்கப்பட்டிருப்பதால், இக் கட்டுரைகளில் ஆங்காங்கே தமிழ் உணர்வுகள் வெளிப்படையாகவும் சில நேரங்களில் மறைமுகமாகவும் பீறிட்டு வெளிவரக் காண்கிறோம். 'அகராதிக்கலை', 'தமிழ் அரசியற் கருத்துகள்,' 'தமிழர்' போன்ற கட்டுரைகளில் ஆங்காங்கே காணும் கருத்துகளும், சான்றோர்கள் சிறப்பிக்கப்படும் இடங்களும், நூல்களின் சிறப்பினை விளக்கும் இடங்களும் தமிழுணர்வின் வெளிப்பாடுகளாக விளங்குகின்றன எனலாம்.

"பழந்தமிழ் நாட்டு மக்களே தொன்மையான மக்களினம்"[14]

எனப் பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களும்,

> "உலக இலக்கியங்களுடன் இடம்பெறக் கூடிய சிறந்த சிறு கதைகள் இன்று தமிழ் மொழியில் உண்டு"[15]

எனப் பேராசிரியர் அ. ச. ஞா. அவர்களும்,

> "தமிழ், இன்றைய மேனாட்டார் கூறும் இலக்கியத் துறைகளி லெல்லாம் சிறந்து விளங்குவதோடு பிற இடத்தில் இல்லாத வகையில் புதியதொரு தேசியப் பாடல்களை அணியாகக் கொண்டு, முன்னில்லாததோர் எளிமையையும் விளக்கத்தினை யும், பேச்சு நடையோடு ஒத்த இனிய அழகினையும், இசை அமைதியாம் சந்தத்தினையும் பெற்று, முன் அருகி வழங்கிய நகைச்சுவையும் வளர்ந்து வர, எவற்றிலும் உணர்ச்சி ததும்பும் உயிர்த்துடிப்பும் பெற்று, எல்லாக் கருத்தினையும் வெளிப்படுத்தும் வழக்கத்தில் புகுந்து. பல துறைகளிலும் அவ்வவற்றிற்கேற்ப நெகிழ்ந்து கொடுத்து இயைந்துவரும் புதியதோர் ஆற்றலையும் பெற்று, பயனற்றன கீழே ஆழ்ந்து போக, நிலையானவை மேலோங்கிவரச் சிறுவர் முதல் பலர்க்கும் இன்பம் தர முன்னேறிச் செல்கிறது"[16]

எனப் பேராசிரியர் டாக்டர் தெ.பொ. மீ. அவர்களும், கூறும் கருத்துகள் நெஞ்சில் நின்று என்றென்றும் இனிக்கும் நீர்மையன; சுமார் 20 ஆண்டுகட்முன் அவர்களின் எழுதுகோல்கள் தீட்டிய எண்ணங்கள் இவை; இவற்றில் பொதிந்துள்ள தமிழுணர்வை உன்னுங்கால் உள்ளம் பெருமிதமடைகிறது. இவையேயன்றி,

> "சொல்லின் சுருக்கமும், கருத்தின் தெளிவும், வடமொழிச் சொற்கள் மிகமிக அருகிக் காணப்படுவதும், கற்பனையின் ஆழமும் சங்க நூல்களின் சிறப்புகள்"[17]

என மீ. ப. சோமசுந்தரம் அவர்களும்,

> "பழந்தமிழ் இலக்கியம் மக்களின் வாழ்வோடு இயற்கையை இயைத்துக் கூறும் இலக்கியம்"[18]

எனத் தமிழறிஞர் மு. வ. அவர்களும், சங்க இலக்கியங்களைப் பற்றிக் கூறும் கருத்துகளும், பிற இலக்கியங்களைக் குறித்துப் பெருமை பாராட்டும் இடங்களும் பெரும்பான்மையும் தமிழுணர்வின் வெளிப் பாடுகளே. தமிழ்ச் சான்றோர்களைக் குறித்து வெளியிடப்பட்டுள்ள கருத்துகளை நோக்கின் அவற்றிலும் தமிழுணர்வைக் காண முடிகிறது. அவற்றூடே ஆழ்ந்த சொல்லமைப்பும் கருத்தாழமும் மிளிர்வதையும் காணலாம்.

"இவர் திலகர் யுகத்தின் இனிய உயிருள்ள குரலாக நின்று தமிழ்நாட்டில் பாடத் தொடங்கினர்"[19]

என மகாகவி பாரதியாரையும்,

"மேனாட்டிற்கும் கீழ்நாட்டிற்கும் பாலம் அமைத்தார்; புதுமையையும் பழைமையையும் இன்பப் பிணையலாகப் பின்னிவிட்டார்"[20]

எனத் தமிழ்த்தென்றல் திரு.வி.க. அவர்களையும்,

"ஆற்றொழுக்காக வரும் தெள்ளிய நீரோடையின் கீழிருப்பன வெல்லாம் விளங்கும் எளிமையில், மகிழ்ந்து, படிப்போர் ஓடுகிற ஓட்டத்தில் பாடிக்கொண்டே போமாறு, தமிழே முழுவதும் விளங்கக் கவிமணி பாடியுள்ளார்"[21]

எனக் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களையும் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் பாராட்டும் இடங்கள் தமிழுணர்வுள்ள எந்த நெஞ்சத்தும் நிலைத்திருப்பவை.

### கலப்பும் கலக்கமும்

தமிழுணர்வின் எல்லையைக் கண்டுகளிக்கும் அதே நேரத்தில் பிறமொழியின் கலப்பைச் சில தமிழறிஞர்கள் அளவுகடந்து பயன் படுத்தியுள்ளதை எண்ணும்போது உண்மையிலேயே உள்ளம் வேதனை அடைகின்றது.

"ஒரு மொழியில் பிறமொழிச் சொற்களைத் தவிர்க்கவே முடியாத நெருக்கடியிலன்றிப் பிறபொழுதுகளில் கலத்தல் எவ்வளவு கொடியது என்ற உண்மைக்கு எத்தனையோ சான்றுகளை எடுத்துக்காட்டலாம். நம் தமிழ்நாட்டு ஊர்ப் பெயர்களும்—ஏன்—தெய்வப் பெயர்களுமே பல வரம்பற்ற வடமொழிச் செல்வாக்கால் செத்தே போன செய்தி தன்மானமுள்ள எந்தத் தமிழனின் இதயத்தைத்தான் குத்திக் குடையாது? அந்தோ! பழமலை விருத்தாசலம் ஆயிற்றே! வழித்துணைநாதர் மார்க்க சகாயர் ஆயினரே"[22]

என்ற தனித்தமிழ் இயக்கத்தின் தந்தையான பெருந்தகை மறைமலை அடிகளாரின் நெஞ்சக் கலக்கம் இன்னும் சிலருடைய நெஞ்சங்களில் எதிரொலிக்கவில்லையே என்று எண்ணும்போது இன்னும் எத்தனை மறைமலைகள்தான் பிறக்கவேண்டுமோ என மலைக்கத் தோன்றுகிறது.

எடுத்துக்காட்டாக, 'தமிழ் நாடகக்கலை வரலாறு' என்னும் கட்டுரையில் மட்டும் காணும் பிறமொழிச் சொற்களைக் காட்டுவதன் மூலம் மற்றவற்றை விளக்காது விடுக்கின்றேன்.

'தமிழ் நாடகக் கலை வரலாறு' என்னும் கட்டுரையில் காணும் பிறமொழிச் சொற்கள் சில :

1. அபிநயம்
2. அபிப்பிராயம்
3. அமெச்சூர்
4. ஆனந்தம்
5. இரசபாவம்
6. உற்சவம்
7. கால தேச வர்த்தமானம்
8. சந்தர்ப்பம்
9. சந்தேகம்
10. சம்சி
11. சினிமா
12. சூத்திரம்
13. சோடனை
14. துதிப்பது
15. ரசிகர்
16. வசனம்
17. வாத்தியக்காரன்
18. விஷயம்
19. வெல்வெட் நிஜார்
20. வேஷம்
21. ஜாலர்
23. ஜீவனம்
23. ஜோடி
24. ஸ்திரீ
25. ஹாசியம்.

**கட்டுரைகளில் கவிதையின் ஊற்று**

இத்தகைய வேதனைக்கு ஓரளவு மாற்று மருந்தாக விளங்குவன ஒரு சில கட்டுரைகளில் மிளிரும் சொல்லாட்சிச் சிறப்பும், கருத்தோட்ட நயமும் எனலாம். ஒரு சில எடுத்துக்காட்டுகள்:

> "உணர்ச்சிப் பெருக்கு வெள்ளமிடுகிறது"[23]

> "உண்மை இலக்கியத்தின் உயிர்த்துடிப்பு"[24]

> "இராமலிங்க அடிகளாரைப் பற்றிய விவாதமும் அன்று தமிழ் நாட்டையே பிளந்து நின்றது"[25]

> "இவற்றை (பத்திரிகைகளை) இலக்கியத் தொழிலகம் அல்லது அடுக்களை என்று கூறலாம்"[26]

இவற்றில் காணும் சில சொல்லாட்சிகள், ஆளப்பட்டுள்ள இடத்தின் தன்மையால் உயிர்பெற்று விளங்கி, கவிதையின் எழுச்சியூட்டத்தை நிலைநாட்ட முனைவதைக் காணலாம். அன்றியும்,

> "புலவரும் பாணரும் பொருநரும் கூத்தரும் கலையுலகப் பறவைகள்; வல்லமையுடன் வாழ்வோம் என்று எண்ணுமல், பெற்ற பொருளைப் பேணுமல், கலைவானில் பறந்து திரிந்தவர்கள்"[27]

> "பழைய நூல்களின் அரணகவும், புதிய நூல்களின் பிறப்பிடமாகவும் மடங்கள் விளங்கின"[28]

எனவரும் பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களின் வரிகள் என்றென்றும் நினைவினின்றும் அழிக்க முடியாதவை எனலாம்.

நடையும் நினைப்பும்

இனி, நடையின் பல்வேறு போக்குகளின் உறைவிடமாகவும் ஊற்றிடமாகவும் கலைக்களஞ்சியம் விளங்குகிறது என்பதைக் காணலாம்.

பொதுவாக, நடை என்பது படைப்பாளனின் ஆளுமைத் தன்மையை—சிந்தனையின் தெளிவை வெளிப்படுத்துவது. கற்பாரை ஈர்த்துக் காலத்தையும் மறக்க வைக்கவல்ல வல்லமை சான்றது; வாழும் இலக்கியங்கள் வாழ்வாங்கு வாழ வழி செய்வது.

இலக்கிய உணர்வும் மொழி உணர்வும் மேலோங்கி நிற்கும் நல்லறிஞர்கள், அவற்றின் சார்புடைய கட்டுரைகள் வடிக்கும்போது அவர்தம் நடையில் அவ்வவ்விலக்கியச் சொல்லாட்சிகள், கருத்துகள் மண்டியிட்டு நிற்கும். இதனை,

> "'எல்லோருக்கும் அரசனே தெய்வம்' என்றார் குமரகுருபர அடிகள். 'நாடாளும் அரசனிடம் தெய்வ ஒளி உண்டு; உலகத்தைக் காப்பது அவ்வொளியே', என்பது தமிழ்நாட்டார் கொள்கை. நம்மாழ்வாரும் 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே' என்றுரைத்தனர். ஆகவே, 'அரசனே அச்சம் தீர்ப்பவன்; அறங்காப்பவன்; முறை செய்பவன்; குறை தீர்ப்பவன்; அவனே இறைவனாகும்' என்பவை பண்டைத் தமிழர் அரசியற் கொள்கைகள்"[29]

எனவரும் பேரறிஞர் டாக்டர் ரா. பி. சே. அவர்களின் நடையாலும்,

> "பந்தல் அமைத்துப் புதுமணல் பரப்பி, விளக்கு ஏற்றி, மலர் மாலைகள் தொங்கவிட்டு, மக்கட் பேறுடைய மகளிர் நால்வர் கூடி, 'கற்பும் நன்மக்கட் பேறும் உடையவளாகுக' என மணமக்களை வாழ்த்தி நீராட்டுதலும், பிறகு சுற்றத்தார் கூடி, 'இன்னானுடைய இல்லக்கிழத்தி ஆவாயாக' என வாழ்த்திக் கொடுத்தலும் திருமணச் சடங்குகளாக இருந்தன"[30]

எனவரும் பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களின் நடையாலும் நன்கு உணரலாம். தக்கவிடத்து தக்க சொற்றொடர்களைப்பொருத்தி, எளிமையும் இனிமையும் தோன்ற உரைக்கும் தனித்ததோர் தமிழ் நடையை இருவரிடமும் காண்கின்றோம்.

அடுத்து, எதுகையும் மோனையும் நின்று நடம்பயிலும் கவிதை யோட்டமிக்க நடையையும் இக் கட்டுரைகளின் சில இடங்களில் காண முடிகின்றது.

"அரசன் தன் கொள்கையைக் கொள்ளுவானோ அன்றித் தள்ளுவானோ என்று ஐயுற்று நெஞ்சங் குலையமாட்டார்கள். அறத்தை அடிப்படையாகக் கொண்ட அரசு நல்லமைச்சரை நாடும்; மறத்தை அடிப்படையாகக்கொண்ட அரசு போலி அமைச்சரைப் பொறுக்கிக்கொள்ளும்"[31]

எனவரும் 'சொல்லின் செல்வர்' அவர்களின் நடையிலும்,

"தமிழ்நாடு முப்புறமும் கடல் சூழ்ந்ததாய், மலையும் காடும், அருவியும் ஆறும், வயலும் வெளியும், புதரும் சோலையும் நிறைந்து அழகு செய்வதாய் அமைந்த நாடு. இயற்கையன்னை தமிழ்நாட்டு மக்களை அச்சுறுத்துபவளாக இல்லை; அலையுறுத்துபவளாகவும் இல்லை. இங்கே மக்கள் இயற்கையுடன் ஆடி, இயற்கையின் உதவிகள் பெற்று, இயற்கையோடு இயைந்து வாழும் வாய்ப்புப் பெற்றிருந்தனர். இத்தகை இயற்கைச் சூழலில் வாழ்வு நடாத்திய பழந்தமிழரின் கற்பனைக் கதைகளும் இயற்கையோடு இயைந்தனவாகவே விளங்கின"[32]

எனவரும் பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களின் நடையிலும் கவிதையின் ஆற்றொழுக்கான நடையோட்டம் மிளிரக் காண்கின்றோம். இவ்விருவர்தம் நடைவளத்தையும் நன்கு ஆய்ந்து,

"பேராசிரியர் அவர்கள் கட்டுரை நடை எளிமையும் இனிமையும் நிறைந்தது; கற்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் உரனுடையது"[33]

"செய்யுள் நலஞ்சான்ற பேராசிரியர் அவர்கள் செந்தமிழ் உரைநடையில் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் களிப்பாக்கும் களிப்பாய் இருப்பது எதுகை, மோனை இன்பமே"[34]

எனச் சொல்லின் செல்வரின் நடையைப் புகழ்ந்து, 'ஆராய்ச்சிக் கட்டுரைகள்' என்னும் ஆய்வுக் கொத்தில் தமிழறிஞர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் கூறும் கூற்றும்,

"சின்னஞ்சிறு வாக்கியங்கள்; உள்ளத்திலிருக்கும் சிந்தனைத் தெளிவை அப்படியே பிரதிபலிக்கும் தொடர் அமைப்புகள்; சிக்கலான விஷயத்தையும் போகிற போக்கில் எளிமையாக புரியவைத்திடும் பண்பு; இவையே மு. வ. நடையின் தனிச் சிறப்புகள்"[35]

என டாக்டர் மு. வ. அவர்களின் நடையைப் புகழ்ந்து பேராசிரியர் எழில் முதல்வன் அவர்கள் கூறும் கூற்றும் எத்துணை உண்மை பொதிந்

தன என்பதை மேலே காட்டிய எடுத்துக்காட்டுகளை நோக்குவார் ஓரளவு உணரலாம்.

அதனையடுத்து,

> "பாடப் புத்தகங்களாக வருபவை ஒருபுறம்; மாணவர் நடிக்க எழுதப்பெறும் நாடகங்கள் ஒருபுறம்; சிறுவர்க்கென எழும் பத்திரிகைகள் ஒருபுறம்; தாய்மார் பாடி வரும் பழைய வாய் மொழிக் குழவிப்பாடல்கள் ஒருபுறம்; பிள்ளைத் தமிழ் ஒரு புறம்; புதியக் குழவிப் பாடல்கள் ஒருபுறம்; இப்படி வளர் கிறது சிறுவர் இலக்கியம்"[36]

என்னும் மூதறிஞர் தெ. பொ. மீ. அவர்களின் நடையில் ஒரே சொல் ஒவ்வொரு சிறுசிறு தனித்தொடரின் பின்னும் அமையத் தொடுக்கப் படும் சொல் தொடர்மாலையைக் காண்கிறோம். படிக்குங்கால் விழுமிய ஓசை பயப்பதாகவும் இந் நடை அமைந்துள்ளது. சிலர்,

> "பதினேழாம் நூற்றுண்டின் இடையில்தான் தனி உரை நடை நூல் எழுதின ஆசிரியரைக் காண்கிறோம்; இவரும் தமிழ் நாட்டினர் அல்லர்; இவர் பெயர் ராபர்ட்-டி-நொபிலி"[37]

எனத் துப்பறியும் கதையோட்டம் கொண்ட நடையையும்,

> "தமிழ் லெக்சிக்கன் ஆறு தொகுதிகளாக வெளியிடப்பட்டன. முதல் தொகுதி வெளியிடத் தொடங்கிய காலம் 8—10—1924. ஆறும் தொகுதி முடிந்து வெளியிடப்பட்ட காலம் 20—3—1936. ஆறு தொகுதிகளிலுமுள்ள சொற்களின் எண்ணிக்கை 1,04,405'"[38]

எனக் கணித முறையில் செல்லும் நடையையும் பின்பற்றியுள்ளனர். அன்றியும், பம்மல் சம்மந்த முதலியார் அவர்கள் தேவையேற்படும் போதெல்லாம் நாடகப் பேச்சு நடையை அப்படியே இடையீடாகக் காட்டிச் செல்லும் ஒரு வகை நடையைப் பின்பற்றியுள்ளார். எடுத்துக் காட்டாக,

> "அகோ அப்படி என்றால், ராசாதிராசன் விக்கிரமார்க்கன் கொலு வீற்றிருக்கிற விதம் காண்க என்று கட்டியங் கூறுவான். விக்கிரமார்க்கன் விருதுகளையெல்லாம் ஒவ் வொன்றுகச் சொல்லிக்கொண்டு வரும்போது பின்பாட்டுக் காரர்கள் 'அஹா' அல்லது 'ஒஹோ' என்று கூறிக்கொண்டு வருவார்கள்"[39]

என்பதைக் காட்டலாம். இந் நடை, தற்காலத்தில் எவ்விடத்தில் பேச்சு வழக்கைப் பயன் படுத்துவது என்று வகையறியாது தடுமாறித்

தமிழைக் கொலை செய்வார்க்கு, ஓர் எடுத்துக்காட்டுப் பாடமாக அமைந்துள்ளது எனலாம்.

இதுகாறும் சுட்டிக்காட்டப்பட்ட நடைகளே அன்றி வேறு வகை யான நடைப்போக்குகளும் பல ஆங்காங்கே காணப்படுகின்றன. மேலும், மேற்காட்டிய நடைகளின் அமைப்பே அந்தந்தக் கட்டுரைகளில் முழுமையும் காணமுடிகின்றது என்றும் கூறமுடியாது. இவை யனைத்தும் கட்டுரைகளில் ஆங்காங்கே அமைந்திருக்க, இக் கட்டுரை யின் போக்கைக் கருதிப் பொறுக்கப்பட்ட பொறுக்கு மணிகளே.

### மறைவும் வெளிப்பாடும்

> ''சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
> கோடாமை சான்றோர்க் கணி''[40]

என வள்ளுவப் பெருந்தகை முறையுரைத்திருப்பினும், இலக்கிய ஆய் வில் ஈடுபடுவாரைப் பொறுத்தவரை உள்ளுணர்வு என்னும்காற்று தம் கொள்கையுணர்வையும் மீறிச் சீர்தூக்கும் சமன்நிலையைச் சிலநேரங் களில் சற்று அசைப்பதுண்டு. அதையே நாம் ஆய்வாளரின் விருப்பு வெறுப்பின் தலையீடு—இடையீடு என்கிறோம். பல நேரங்களில் அவ் விருப்பு வெறுப்புகள் உண்மையானதாகத் தோன்றினாலும், ஓரளவு ஆய்வாளர்களின் உள்ளவிழைவை நேரடியாகவேனும் மறைமுகமாக வேனும் திறனாய்வாளன் தெளிந்தறிய முடிகின்றது எனலாம். இதனைப் பின்வரும் சான்றுகளைக்கொண்டு நிறுவலாம்.

தமிழ் மூதறிஞர் பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீ. அவர்கள் தம் 'இலக்கண வரலாறு' என்னும் கட்டுரையில்,

> ''பொருளதிகாரத்துக்கு இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் உரை வகுத்தார்கள் என அறிகிறோம். தொல் காப்பிய மரபு மறைந்து போனதை இவ்வாசிரியர்கள் அறிந்து விளக்க மிகமிக முயன்றுள்ளார்கள்; முழு வெற்றி கண்டார்கள் என்று கூறுவதற்கில்லை''[41]

எனக் கூறும் கருத்து ஆழ்ந்த சிந்தனைக்குரியதொன்றே. ஆனால் அதே கருத்தைத் 'தமிழ்மொழி வரலாறு' என்னும் கட்டுரையில்,

> ''உரையாசிரியர்கள் உரையால் கோடலும் இலேசினாலும் கொண்ட விதிகள் சங்ககால வழக்கினைத் தொல்காப்பியத் திற்குள் அடக்க முயன்ற முயற்சியேயாம்''[42]

எனவும் குறிப்பிடுகின்றார். அதோடு அவர் விடவில்லை மீண்டும், நச்சினார்க்கினியரைப் பற்றி உரைக்கும் போது,

"சங்க நூல் வழக்கிற்கெல்லாம் விதி உண்டெனக் காட்ட முயல்பவர்"[43]

எனச் சாடுகின்றார். இப்போக்கு, அவர் உண்மையையே—ஆய்விற் குரியவற்றையே கூறுகின்றாரெனினும், மீண்டும் மீண்டும் கூறுவதன் மூலம், உரையாசிரியர்கள்பால் அவர்கொண்ட 'ஏதோ' ஒரு வெறுப் புணர்வையே வெளிப்படுத்துகிறது எனக் கருத இடமேற்படுத்து கிறது. அதற்குக் காரணம், 'இருபதாம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வரலாறு' என்னும் கட்டுரையில்,

"நாயன்மார்கள், ஆழ்வார்கள் எழுதிய பாடல்கள் பொது மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தாலும் பழைய இலக்கண உரை யாசிரியர்கள் பெரும்பாலோர் இவற்றைப் பற்றியதோர் இருட்டடைப்பினை விளைவித்திருக்கக் காண்கிறோம்"[44]

என அவரே கூறுவதாக இருக்கலாமோ என்ற ஐயப்பாட்டினையும் விளை விக்கின்றது. அன்றியும் பகுத்தறிவாளர்கள், பாரதிதாசன் ஆகியோர் பால் இவர்கொண்ட வெறுப்புணர்வும் பல இடங்களில் காண முடி கின்றது. அதனால் அவர்கள் பெயர்களைக்கூட குறிப்பிடத் தயக்கம் காட்டியுள்ளார் என்பதும் புலனாகின்றது.

**சங்க இலக்கியமும் தணியா வேட்கையும்**

பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்கள் சங்க இலக்கியங்கள்பால் கொண்ட ஆராக் காதலுணர்வு அவர்தம் கட்டுரைகளின் பல இடங்களில் காண முடிகின்றது. 'தமிழ் இலக்கிய வரலாறு' என்னும் கட்டுரையில்,

"அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு என்னும் தொகை நூல்களின் பாட்டுக்களிலுள்ள காதல் கற்பனைகள் வரையறுத்த இலக்கிய மரபுடையன. இவற்றோடு இணைந்து அமைந்த இயற்கை வருணனைகள் செம்மை சான்றவை; ஒருவர் பாடியதைக் கண்மூடிப் பின்பற்றிப் பாடிய வருணனை கள் இவற்றில் காண்பதரிது"[45]

என்னும் வரிகள் இதற்குச் சான்றாகின்றன. அனைத்திற்கும் மேலாக ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது என்னும் நூல்களின் தன்மைகளைச் சுட்டும்போது,

"அவ்வப்போது உணர்ச்சியுந்தப் பாடிய சங்கப்பாட்டுப் போல் அல்லாமல், ஐந்திணை பற்றியும் பாடவேண்டும் என்னும் நோக்கத்துடன் ஒழுங்குபடுத்திப் பாடிய பாட்டுக்கள் இவை. ஆதலின், இவற்றிலுள்ள அமைப்புமுறை ஒழுங்காக உள்ளது. ஆயினும், சில பாட்டுக்கள் இயல்பான உணர்ச்சியின் எழுச்சி யாக அமையாமல், செயற்கையான சொல்லோவியங்களாக

> உள்ளன; உயர்வு நவிற்சியும் ஆங்காங்கே காணப்படு கிறது''[46]

எனக் கூறுவதும், அறநெறிச்சாரத்தைப் புகழ்ந்துரைக்கும்போது,

> ''திருமுனைப்பாடியார் சமணச் சமயப் புலவர், அறநெறிச் சாரம் என்னும் நீதி நூலை இயற்றியதும் இக் காலத்தே ஆகும். நடையாலும் கருத்தாலும் இந் நூல் சங்க இலக்கியத்தோடு ஒப்பக் கருதத் தக்கதாக உள்ளது''[47]

எனக் கூறுவதும் நோக்கின், சங்க இலக்கியங்களோடு எவற்றையும் ஒப்பிட்டுக் காணும் அவரது உள்ளத் துடிப்பு புலனாகின்றது.

**கோணமும் கோலமும்**

இலக்கியக் குடிலுக்கும் அறிவியல் மாளிகைக்கும் வழிகாட்டும் 'கைகாட்டி' மரங்களாக விளங்கும் கட்டுரைகளை எண்ணற்றனவாகக் கொண்டிலங்கும் கலைக்களஞ்சியத்தில், தமிழியல் பொதுக்கட்டுரைகள் தனித்தன்மை வாய்ந்தவை; இலக்கியங்களை நுண்ணிதின் நோக்கித் திண்ணிதின் ஆய்ந்து, உரையின் அமைப்பழகு மிளிர, எளிமையும் தெளிவும் இனிமையும் தோன்ற எழுதப்பட்டு, கற்றாரைப் பிணிக்கும் தகைய வாய் உள்ளவை. இக்கட்டுரைகள் ஆய்வினைமேன்மேலும் தூண்டச்செய்யும் வினைத்தூண்டிகள்; தமிழுணர்வைத் தட்டி எழுப்பும் உணர்ச்சிப் பிழம்புகள்; வரலாற்றின் பலகோணக் கருவூலங்கள்: இலக்கியங்களை மேன்மேலும் கற்கத் தூண்டுபவை; எனினும், சில இன்னும் நிறைவு பெற்ற கட்டுரைகளாக விளங்கவில்லை என்பதும் உண்மையே: கட்டுரைகளில் உவமைகள் நடமாடும்; கருத்தாழம், பொருளாழம் செறிந்திலங்கும்; என்றாலும், சில கட்டுரைகளில் பிறமொழிக் கலப்பு நெஞ்சைச் சுடுகிறது. பொதுவாக, அனைவர்க்கும் விளங்கும்படியாக, கல்லூரியில் உயர்தரப் பட்டம்பெற்றவர்களுடைய அறிவுத் தரத்திற்குக் குறையாமல், அவர்களே அறிந்திராப் பல்வேறு நுணுக்கங்களை—புதிய செய்திகளை—ஆய்வுக் கருத்துகளை இக் கட்டுரைகள் கொண்டிலங்குகின்றன. இவ் வகையில் தொண்டாற்றும் கலைக்களஞ்சியத்தின் பணி பெரிதும் போற்றற்குரியதே. இருப்பினும், இவ் விருபத்தைந்து கட்டுரைகளைப் பொறுத்தவரை கலைக்களஞ்சியம் தீர்க்க வேண்டிய சில குறைபாடுகளைச் சுட்ட வேண்டியது தமிழ்க்கடனே என எண்ணுகிறேன்.

**கலைக்களஞ்சியமும் நாளைய கடனும்**

கலைக்களஞ்சியத்தின் பல கட்டுரைகளில் காணும் மேற்கோள்கள் எந்தெந்த நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை என்பது தெளிவாக இல்லை. சிலவற்றில் நூல் பற்றிய குறிப்பே இல்லை. 'தமிழ் நாடகக் கலை வரலாறு' என்னும் கட்டுரையில் பின்வருமாறு காணப்படுகிறது.

"ஒரு நூலில், 'நாடகத்தில் அபிநயிக்கும்போது முகபாவம் முக்கியம்; அதிலும் கண்களின் அபிநயம் முக்கியம்; அதிலும் முக்கியமானது கடைக்கண்ணின் அபிநயமாகும்' என்று வெகு அழகாகக் கூறப்பட்டுள்ளது."[48]

எந்த நூலில் இவ் வரிகள் வந்துள்ளன என்பதைச் சுட்டாமல் 'ஒரு நூல்' என்று மட்டுமே குறிப்பிட்டிருப்பதால், ஒருகால் இஃது ஆசிரியரின் சொந்த கருத்தாமோ என்றுகூட ஐயுற இடமேற்படுத்துகின்றது. இத் தகைய குறைபாடுகள் நீக்கப்படல், கலைக்களஞ்சியத்தின் அழகுக்கு அழகு செய்வதாய் அமையும் எனலாம்.

தற்காலக் கவிதைத் துறையில் ஏற்பட்டுள்ள பல்வேறு வடிவ வேறுபாடுகளின் காரணமாகக் கருத்து வேறுபாடுகள் வளர்ந்து வரு கின்றன. அன்றியும், மரபு வழிக் கவிதைகளில் 'ஒரு பொருள் பல நோக்குக் கவிதைகள்' இன்று வேர்விட்டு வளர்ந்து வருகின்றன. எங்கு நோக்கினும் கவிதையின் முழக்கமும் முணுமுணுப்பும் பெருக் கெடுக்கும் இவ்விருபதாம் நூற்றாண்டில் மரபு வழியின் புதிய போக் கையும், புதிய வடிவின் நோக்கையும் நடுநிலை பிறழாது ஆய்ந்து கருத்தை நல்கவல்ல கட்டுரை கலைக்களஞ்சியத்தில் வெளிவரின் சீர்மை பயக்கலாம்.

கலைக்களஞ்சியம், 'நாடக இலக்கிய வரலாறு' என்பதற்கு இணை யாகத் 'தமிழ் நாடகக்கலை வரலாறு'ம், 'அகராதி' என்பதற்கு இணை யாக 'அகராதிக் கலை'யும் பெற்றிலங்குவது போல், 'தமிழ்க் கட்டுரை' என்பதற்கு இணையாகக் 'கட்டுரைக் கலை' என்னும் கட்டுரையும் பெற்றிருப்பின் நலம் மிகும். 'கட்டுரைக்கலை' குறித்து சிறந்ததோர் ஆய்வுக் கட்டுரை வடித்துள்ள பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களே கலைக்களஞ்சியத்திலும் இது குறித்துக் கட்டுரை எழுதின், சிறந்த ஆய்வுக் கட்டுரையை வெளியிடும் பேறு கலைக் களஞ்சியத்திற்கு வாய்க்கலாம்.

மேலை நாட்டு இலக்கியக் கட்டுரைகள் வரைப்பட — வரிப்பட விளக்கமுறைகளைப் பின்பற்ற முனைகின்ற இந் நாளில், அத்தகைய முயற்சிகளைக் கலைக்களஞ்சியமும் ஓரளவேனும் மேற்கொள்ளலாம்.

தமிழில் சிறுகதையின் வளர்ச்சியானது உலக இலக்கியங்களோடு போட்டியிடுகின்ற அளவிற்கு வளர்ந்துள்ளதாகக் கருதப்படும் இற்றை நாளில், இது குறித்து 288 சொற்களே கொண்டு வடிக்கப் பட்டுள்ள ஒரு சிறிய கட்டுரை நிறைவு தருவதாக இல்லை. ஆகவே, இது குறித்து விளக்கமான கட்டுரை ஒன்று வெளிவரின், கற்பார் பயன்பெறக்கூடும்.

அன்றியும், தமிழில் நாவல் வளர்ச்சியைக் குறித்துத் தனித்த தோர் கட்டுரை இல்லை. 175 சொற்களே கொண்டு நாவல் என்னும் தலைப்பின்கீழ் சிறுகுறிப்புப் போலவே காணப்படுகிறது. எனவே, தமிழ்

நாவல் என்பது குறித்து விரிவான கட்டுரையொன்று கலைக்களஞ்சியத்தில் வெளிவரின் தற்காலப் போக்கை அறிய வழியேற்படலாம்.

தமிழில் நாடகம் என்பது மிகத் தொன்மை வாய்ந்தது. 1972 வரை ஏறத்தாழ 1551 நாடகங்கள் தமிழில் வெளிவந்துள்ளன. (பார்க்க: பின்னிணைப்பு—4). ஆனல், நாடக இலக்கிய வரலாறு குறித்து ஆசிரியர் குழுவால் எழுதப்பட்ட குறிப்பொன்றே சற்று நீண்ட அளவில் காணப்படுகிறதேயன்றி விரிவாக ஆராயப்படவில்லை. தமிழ்க்கடனென எண்ணிச் சுட்டிய இவை, இனியேனும் தீர்க்கப் படலாம் என எண்ணுகிறேன்.

## குறிப்புகள்

1. கலைக்களஞ்சியம், தமிழ்மொழி வரலாறு, தொ. 5, பக். 468.
2. ,, ,, ,, ,, பக். 469.
3. ,, ,, ,, ,, பக். 478.
4. ,, ,, ,, ,, பக். 478.
5. ,, தமிழ் அறநூல் வரலாறு, தொ. 1, பக். 259.
6. ,, ,, ,, ,,
7. ,, ,, ,, ,,
8. ,, பிற நாடுகளில் தமிழர், தொ. 5, பக். 518.
9. ,, ,, ,, ,, பக். 519.
10. ,, இசைத்தமிழ், தொ. 1, பக். 529.
11. ,, கவிதையும் தமிழும், தொ. 3, பக். 363.
12. ,, அகராதிக்கலை, தொ. 10, பக். 42.
13. S. M. Katre, Lexiography, Page 5.
14. கலைக்களஞ்சியம், தமிழர், தொ. 5, பக். 510.
15. ,, சிறுகதை, தொ. 4, பக். 751.
16. ,, 20-ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு, தொ. 5, பக். 497
17. ,, கவிதையும் தமிழும், தொ. 3, பக். 363.
18. ,, இலக்கிய வரலாறு, தொ. 5, பக். 479.
19. ,, 20 ஆம் நூ. த. இ. வரலாறு, தொ. 5, பக். 492.
20. ,, ,, ,, பக். 494.
21. ,, ,, ,, பக். 493.
22. மேற்கோள்—ஆராய்ச்சிக் கட்டுரைகள், டாக்டர் ந. சஞ்சீவி, பக். 171.

23. கலைக்களஞ்சியம், 20 ஆம் நூ. த. இ. வ., தொ. 5, பக். 494.
24. ,, ,, ,, பக். 493.
25. ,, ,, ,, பக். 490.
26. ,, ,, ,, பக். 491.
27. ,, தமிழ் இலக்கிய வரலாறு ,, பக். 481.
28. ,, ,, ,, ,, பக். 486.
29. ,, அரசியற் கருத்துகள், தொ. 1, பக். 175.
30. ,, தமிழர், தொ. 5, பக். 511.
31. ,, அரசியற் கருத்துகள், தொ. 1, பக். 176.
32. ,, இலக்கிய வரலாறு, தொ. 5, பக். 478.
33. டாக்டர் ந. சஞ்சீவி, ஆராய்ச்சிக் கட்டுரைகள், பக். 184.
34. ,, ,, ,, பக். 211.
35. எழில் முதல்வன், நாவல் இலக்கியம், பக். 166.
36. கலைக்களஞ்சியம், 20ஆம் நூ. த. இ. வ., தொ. 5, பக். 491.
37. ,, உரைநடை இலக்கியம், ,, பக். 500.
38. ,, தமிழ்—லெக்சிக்கன், ,, பக். 508.
39. ,, தமிழ் நாடகக்கலை வரலாறு, தொ. 6, பக். 369.
40. திருக்குறள், 118
41. கலைக்களஞ்சியம், இலக்கண வரலாறு, தொ. 5, பக். 504.
42. ,, தமிழ் மொழி வரலாறு, ,, பக். 476.
43. ,, இலக்கண வரலாறு, ,, பக். 504.
44. ,, 20ஆம் நூ. த. இ. வ., ,, பக். 492.
45. ,, தமிழ் இலக்கிய வரலாறு, ,, பக். 480.
46. ,, ,, ,, பக். 482.
47. ,, ,, ,, பக். 486.
48. ,, தமிழ் நாடகக்கலை வரலாறு, தொ. 6, பக். 367.

பின்னிணைப்பு—1

## தமிழியல் பொதுக்கட்டுரைகள் — பட்டியல்

| வரிசை எண் | தலைப்பு | கட்டுரையாளர் | தொகுதி — பக்க எண்கள் |
|---|---|---|---|
| 1. | அகராதி | எஸ். வையாபுரிப் பிள்ளை | 1— 15 |
| 2. | அகராதிக் கலை | புலவர் சுந்தர சண்முகனர் | 10— 2 |
| 3. | அரசியற் கருத்துகள் | ரா. பி. சேதுப்பிள்ளை | 1—175 |
| 4. | அறநூல் வரலாறு | மொ. அ. துரையரங்கனர் | 1—259 |
| 5. | இசைத்தமிழ் | க. வெள்ளைவாரணனர் | 1—525 |
| 6. | இருபதாம் நூற்றுண்டுத் தமிழிலக்கிய வரலாறு | தெ. பொ. மீனட்சிசுந்தரனர் | 5—489 |
| 7. | இலக்கண வரலாறு | தெ. பொ. மீனட்சிசுந்தரனர் | 5—500 |
| 8. | உரைநடை இலக்கிய வரலாறு | வ. சு. செங்கல்வராயப் பிள்ளை | 4—499 |
| 9. | கவிதையும் தமிழும் | மீ. ப. சோமசுந்தரம் | 3—362 |
| 10. | சிறுகதை | அ. ச. ஞானசம்பந்தம் | 4—751 |
| 11. | செய்யுள் இலக்கிய வரலாறு | அ. சிதம்பரநாதச் செட்டியார் | 5—497 |
| 12. | தமிழ் — இலக்கிய வரலாறு | மு. வரதராசன் | 5—478 |
| 13. | தமிழ்க்கட்டுரை | அ. ச. ஞானசம்பந்தம் | 2— 31 |

| வரிசை எண் | தலைப்பு | கட்டுரையாளர் | தொகுதி — பக்க எண்கள் |
|---|---|---|---|
| 14. | தமிழ்ச்சங்கம் | தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் | 5—506 |
| 15. | தமிழ் சாசனவியல் | தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் | 4—553 |
| 16. | தமிழ் நாடக இலக்கியம் | ஆசிரியர் குழு | 6—423 |
| 17. | தமிழ் நாடகக்கலை வரலாறு | பம்பல் சம்பந்த முதலியார் | 6—366 |
| 18. | தமிழ் : மொழி வரலாறு | தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் | 5—466 |
| 19. | தமிழ் லெக்சிக்கன் | ஆசிரியர் குழு | 5—508 |
| 20. | தமிழகம் | ஆசிரியர் குழு | 5—509 |
| 21. | தமிழகம்—பழைய பிரிவுகள் | அ. மு. பரமசிவானந்தம் | 5—509 |
| 22. | தமிழர் | மு. வரதராசன் | 5—510 |
| 23. | தமிழர் விருதுகள் | அ. மு. பரமசிவானந்தம் | 5—520 |
| 24. | நாவல் | ஆசிரியர் குழு | 6—423 |
| 25. | பிறநாடுகளில் தமிழர் | சி. எஸ். ஸ்ரீநிவாசாசாரியார் | 5—516 |

பின்னிணைப்பு—2

| நாடுகள் | சேர நாடு | சோழ நாடு | பாண்டிய நாடு | தொண்டை நாடு | கொங்குநாடு |
|---|---|---|---|---|---|
| கிழக்கு எல்லை | தென்காசி | கடல் | கடல் | கடல் | குழித்தலை (மதிற்கரை) |
| மேற்கு எல்லை | கடல் | கோட்டைக்கரை | பெருவழி | பவள மலை | வெள்ளிமலை |
| வடக்கு எல்லை | பழநி மலை | வட வெள்ளாறு | தென் வெள்ளாறு | வேங்கடம் | பெரும்பாலை (தனி மலை) |
| தெற்கு எல்லை | கடல் | தென் வெள்ளாறு | குமரி | தென் பெண்ணை | பழநி |
| பரப்பு | 80 காதம் | 24 காதம் | 56 காதம் | 20 காதம் | ? |

(இவ் வட்டவணை பேராசிரியர் அ. மு. ப. அவர்களின் ‘தமிழகம்—பழைய பிரிவுகள்’ என்னும் கட்டுரையிலிருந்து தொகுக்கப்பெற்றது).

பின்னிணைப்பு—3

## இசையும் ஏதும்*

| தமிழில் இசைப் பெயர் | வடமொழியில் இசைப் பெயர் | காரணமான ஒலி |
|---|---|---|
| விளரி | ரிஷபம் | பசுவின் ஒலி |
| கைக்கிளை | தைவதம் | குதிரையின் ஒலி |
| உழை | நிஷாதம் | யானையின் ஒலி |
| தாரம் | காந்தாரம் | ஆட்டின் ஒலி (ஆண் மக்கள் குரலுமாம்) |
| குரல் | மத்திமம் | மகளிரின் ஒலி |
| துத்தம் | பஞ்சமம் | ? |
| இளி | ஷட்ஜம் | அனைத்திற்கும் அடிப்படையான ஒலி |

* இவ் வட்டவணை புலவர் க. வெள்ளைவாரணனார் அவர்களின் 'இசைத் தமிழ்' என்னும் கட்டுரையிலிருந்து தொகுக்கப்பட்டது.

பின்னிணைப்பு—4

## *தமிழ் நாடகப் பட்டியல் சுருக்கம் (1972 வரை)

| | | |
|---|---|---|
| தமிழ் நாடகங்கள் | ... | 987 |
| ஈழத்துத் தமிழ் நாடகங்கள் | ... | 319 |
| பள்ளு நாடகங்கள் | ... | 48 |
| குறவஞ்சி நாடகங்கள் | ... | 54 |
| நொண்டி நாடகங்கள் | ... | 10 |
| **மொழி பெயர்ப்பு** | | |
| வடமொழி | ... | 36 |
| ஆங்கிலம் (செகப்பிரியர் நாடகங்கள் 46 சேர்த்து) | | 59 |
| கிரேக்கம் | ... | 4 |
| பிரெஞ்சு | ... | 6 |
| செர்மன் | ... | 1 |
| உருசியன் | ... | 5 |
| நார்வீசியன் | ... | 3 |
| பெங்காலி | ... | 11 |
| இந்தி | ... | 3 |
| குசராத்தி | ... | 1 |
| மலையாளம் | ... | 1 |
| கன்னடம் | ... | 1 |
| தெலுங்கு | ... | 2 |
| | மொத்தம் : | 1551 |

* இப் பட்டியல், பேராசிரியர் டாக்டர் இரா. குமாரவேலு அவர்களின் டாக்டர் பட்ட ஆராய்ச்சிக்கான 'Dramatic Literature in Tamil' என்னும் ஆய்வு நூலிலிருந்து தொகுக்கப்பட்டது.

# 4. நடையின் வகைகள்

இ. சுந்தரமூர்த்தி,
தமிழ் விரிவுரையாளர், திருக்குறள் ஆய்வுப்பகுதி,
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்.

*1. இலக்கியக்கலையும் உணர்த்தும் திறனும்*

1.1 இலக்கியக்கலைக்கு உயிர்நிலை-உயர்நிலை உணர்த்தும் திறனே. உணர்த்தும் திறன் ஓர் இலக்கியத்துக்கு நன்கு அமையவில்லையெனில் அதனை இலக்கியம் என்றே இயம்ப முடியாது என்பர்.[1] உணர்த்தும் கலைஞரின் உள்ளத்தில் தெளிவு இருந்தால்தான் உணர்த்தும் பொருளும் உணர்வாருக்கு உள்ளத்தில் நன்கு பதியும்.

1.2 எண்ணிய கருத்துகளைப் பிறருக்கு எடுத்துரைக்கும் அரிய கலையான உணர்த்தும் கலையில் ஒவ்வொருவரும் வேறுபடுகின்றனர். சிலர் எளிமையாக உரைப்பர்; சிலர் எளிமையோடு இனிமையாகவும் உரைப்பர்; கேட்போர் உளங்கொளக் கூறுவார் சிலர்; நுட்பமாகவும் செறிவாகவும் எடுத்துரைப்பார் சிலர். இவை ஒவ்வொருவருடைய உணர்திறனையும் உணர்த்தும் திறனையும் பொறுத்தன.

1.3 அழகிய செஞ்சொற்களால் இனிமையாகவும் எளிமையாகவும் நுட்பமாகவும் கருத்தினை உணர்த்துவதே நல்ல நடையாகும்.[2] எண்ண ஓவியத்தினைச் சொற்களால் அழகுபடுத்தும் வல்லமை நடைக்கு உண்டு. எனவே மொழிநடை என்பது உணர்த்தும் திறனை அடிப்படை யாகக் கொண்டது என்பது தெளிவு. நடை ஒருவருடைய உணர் திறனையும்—உணர்த்தும் திறனையும்—உள்ளத் திறனையும் நன்கு புலப் படுத்தும்.

*2. அறிவின் இருதிறன்கள்*

2.1 சொல்லின் திறத்தை அறிந்து சொல்லை வழங்க வேண்டும் என்ற கொள்கையினர் வள்ளுவர்.[3] கற்ற பொருளைப் பிறர் நன் குணர விரித்துரைக்க மாட்டாதவரை 'நாறுமலரனையர்' என்பார்.[4]

---

1. Abercrombie, L., Principles of Literary Criticism, p. 24.
2. Webster's New World Dictionary of the American Language, p. 1449.
3. குறள், 645.
4. குறள், 650.

'யாநலத்தும் நாநலமே நலனுடைமை' என்று நவின்றவர் வள்ளுவர்.[5] பிறர் கூறும் பொருளை நுட்பமாக உணர்பவரே 'நுண்பொருளறிவு' பெற்றவர் என்பது வள்ளுவரின் தெள்ளிய கருத்தாகும்.[6]

2. 2 இதுபோன்றே தொல்காப்பியரும், 'தான் கூற எடுத்துக் கொண்ட பொருளைப் பிறர் உணரும் வாயிலறிந்து உணர்த்த வல்ல வனய் ஒருவன் இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் அவன் கருதிய பொருள் கற்பார்க்கு இனிது திரிபின்றி விளங்கும்' என்பதனை,

'பொருட்குத் திரிபில்லை யுணர்த்த வல்லின்''[7]

என்ற நூற்பாவான் கூறுவார். மேலும் சொற்பொருளை உணர்த்தும் நெறி கேட்போரது உணர்வினைப் பற்றுக்கோடாக உடையது என்பதனை,

'உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே'[8]

என்னும் நூற்பாவால் அடுத்து விளக்குகின்ருர்.

2. 3 எனவே கருதுவது அரிய பொருளாயினும் பிறர்க்கு எளிதாக எடுத்துரைக்கும் ஆற்றலும், கூறுவன அரியவாயினும் எளியவாகக் கேட்டுணரும் ஆற்றலும் அறிவின் இருதிறன்கள் — இருகண்கள் எனலாம்.[9] இதனையே வள்ளுவர்,

'எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு''[10]

என்னும் குறளால் புலப்படுத்துவர்.

2. 4 உணர்தலும் உணர்த்தலும் வாழ்வுக்கு எத்துணை அளவு இன்றி யமையாதனவாய் விளங்குகின்றன என்பதைப் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள், அண்மையில் வந்துள்ள "இலக்கிய இயல் - அஆ" என்னும், தம் திறனய்வு நூலில் விளக்குவதும் இங்கு எண்ணுதற் குரியது.

(1) "தெரிதலும் தெளிதலும் பகுத்தறிவு வாழ்வின் இரு கண்க ளாகும்".

* * *

---

5. குறள், 641.
6. குறள், 424.
7. தொல். உரி. 94.
8. தொல். உரி. 95.
9. வெள்ளைவாரணனர், க., தொல்காப்பியம் (தமிழிலக்கிய வரலாறு), பக். 89.
10. குறள், 924.

(2) "இனி தெரி[2]/தெரி[3]ந்ததின் பயன் யாது? தெரி[4]வித்தலே (To communicate) ஆகும். எவ்வாறு ஆறறிவு படைத்த மனிதனின் அடிப்படைப் பண்பு தெரிந்துகொள்ளல் (To know) என்று கண்டோமோ, அவ்வாறே தெரி[4]வித்தலே (To communicate) ஆறறிவு படைத்த மனிதன் — சமூகப் பொருளாகவும் — சமூக விலங்கு (Social animal) என்ற சொல்வானேன்? — இருப்பதால் அவனுக்குரிய பெருவிழைவாய் இருப்பதாகும். தெரி[1]வதெல்லாம் தெரி[4]விப்பதற்காகவே என்பதே உயர்ந்த உள்ளத்தின் — மனிதனின் கருத்து. அதனாலேயே அன்றோ தமிழ் மறையாம் பொது மறையும்,

> தாமின்பு உறுவது உலகின்பு உறக்கண்டு
> காமுறுவர் கற்றறிந் தார்

என்று கல்விப் பயனுக்குப் பாராட்டுரை பகர்கிறது?"[11]

என்பன அவர்தம் ஆய்வுரைகளாகும்.

எனவே உணர்த்தும் திறனும் உணர்திறனுமே அறிவின் தலையாய இயல்புகள் எனலாம். இவற்றுள் உணர்த்தும் திறனே ஆசிரியரின் நடைநலமாகத் திகழ்கிறது.

### 3. நடையும் உள்ளமும்

3.1 ஒருவருடைய நடையே அவருடைய உள்ளம் என்றும் நடையினை வைத்தே ஆசிரியரின் இயல்பை உணர முடியும் என்றும் கூறுவர்.[12] நடைக்கும் படைப்பாளரின் உள்ளத்திற்கும் பொதுவாக நெருங்கிய தொடர்பு உண்டு. உளவியலின் ஒருகூறாகவே அவர்தம் நடையியல்பு திகழ்கிறது எனலாம். ஒருவருக்கு அமையும் கையெழுத்தைக் கொண்டு அவர்தம் உளப்பாங்கை அறிய முடியுமென்றால் உள்ளத்தின் மலர்ச்சியால் உணர்ச்சியின் வடிகாலாய்ப் பிறக்கும் நடையமைப்புக்கும் அத்தகு திறன் உண்டு என்பது தெளிவு. எனவே நடையமைப்பே படைப்புக் கலைஞரின் ஆளுமைத் தன்மையாக (Personality) விளங்குகிறது. நடை ஆசிரியரின் உள்ளப் பண்போடு ஒன்றியது எனவும், ஆசிரியரையும் நடையையும் தனித்தனியே பிரித்துக் காண இயலாது எனவும் கூறுவர்.[13]

---

11. சஞ்சீவி, டாக்டர், ந., இலக்கிய இயல் அ, ஆ, (தெரி[4] என்னும் ஆய்வுக் கட்டுரை). பக். 84-90. தெரி[1]—அறிதல்; தெரி[2]—ஆராய்தல்; தெரி[3] - தெளிதல்; தெரி[4] - அறிவித்தல்.
12. Murray, M., Problem of Style, P. 8.
13. Hudson, W. H., An Introduction to the study of Literature, p. 30.

"புலவரின் உள்ளத்தில் உண்மையும் உறுதியும் சிறந்து விளங்கினுல், அவருடைய நடை திட்பமும் நுட்பமும் அமைந்த தாகும். அவருடைய உள்ளத்தில் தெளிவு இருந்தால் நடையில் எளிமை விளங்கும். அவருடைய உள்ளத்தில் ஆர்வம் மிகுதியானுல் நடையில் ஆற்றல் மிகுதியாகும். அவருடைய உள்ளத்தில் துன்ப உணர்வு பெருகினுல் நடையில் சோர்வும் குழைவும் பெருகும். அவருடைய உள்ளத்தில் இன்ப உணர்வு பெருகினுல் நடையில் சுவையும் கவர்ச்சியும் பெருகும். அவருடைய உள்ளத்தில் குழப்பமும் கலக்கமும் இருந்தால் நடையில் சிக்கலும் தடுமாற்றமும் காணப்படும்"[14]

என்று டாக்டர் மு. வ. அவர்கள் கூறுவதும் இங்கு எண்ணத்தக்கது.

3. 2 மனநிலையின் நெகிழ்ச்சியினை அவரவர் எடுத்தாளும் சொற்களே நன்கு வெளிப்படுத்துகின்றன. மகிழ்ச்சி, துன்பம், வெறுப்பு, கோபம், ஊடல் முதலாய உணர்ச்சிகளை அவரவர் பயன்படுத்தும் சொற்களும், உணர்த்தும் திறங்களும் பிறருக்கு எளிதில் புலப்படுத்தி விடுகின்றன.

### 4. நடை வேறுபடுதற்குரிய காரணம்

4. 1 உணர்த்தும் திறனுகிய நடை ஒருவரைப் போலவே மற்ெருருவருக்கு அமைவதில்லை. மாந்த மனம் ஒவ்வொருவருக்கும் வேறுபடுவதுபோல அவரவர் நடையும் வேறுபடுகிறது. பழக்கவழக்கங்களும், உடைகளும் வேறுபடுவதுபோலவே உணர்த்தும் வகைகளும் வேறுபடுகின்றது. ஒவ்வொருவருடைய எண்ணங்களும் சூழல்களும் வெவ்வேருக அமைவதுதான் இத்றகுக் காரணம் எனலாம்.

4. 2 கவிஞர் ஒருவரின் உள்ளப் பண்பை மட்டும் அல்லாமல், அந்தப் பண்பை உருவாக்கியவற்றையும், அவர் வாழ்ந்த சூழல், கற்ற நூல்கள், பழகிய பழக்கம் முதலியவற்றையும் நடை புலப்படுத்துகின்றன. அவருடைய வாழ்வில் அவர் படிப்படியே பெற்றுவந்த வளர்ச்சிகளையும் நடையில் காணலாம் என்பர்[15] மறுமலர்ச்சித் தமிழ் உரைநடை வரலாற்றில் தனி இடம் பெற்றுத் திகழும் திரு வி.க. அவர்கள் இதுபற்றிக் கூறும் கருத்தும் இங்கு எண்ணுவதற்குரியதாம்.

"ஒரே மனிதர் வாழ்க்கையிலே பலதிற நடைகள் அமைகின்றன. எழுதிப் பழகப் பழக அவருக்கென்று ஒரு நடை இயற்கையாகும். இன்னெருவருக்கு வேறுவித நடை இயற்கை

14. வரதராசன், டாக்டர், மு., இலக்கியத்திறன், பக். 238. (மேற்கோள்).
15. Hudson, W. H., An Introduction to the study of Literature, p. 30.

யாகும். இவர் அவரைக் குறை கூறுவதும், அவர் இவரைக் குறை கூறுவதுந் தவறு. ஒரேவித நடை எல்லாரிடத்திலும் அமைவது அரிது. உலகம் பலவிதம். ஒரேவித விதைகள் ஒரேவித நிலத்தில் விதைக்கப்படுகின்றன. அவை முளைத்து மரங்களாகுங்கால் எல்லாம் ஒரேவித வடிவங்களையா பெறுகின்றன? இல்லையே, மரங்கள் எத்தனையோ வடிவங்களைப் பெறுகின்றன. இஃது இயற்கை அன்னையின் திருவிளையாடல். மொழிநடையும் அவரவர் இயற்கைக்கேற்ற வண்ணம் அமையும் ......"[16]

என்று கூறுவர். திரு. வி க.-வினுடைய வாழ்க்கையில் மூவித நடைகள் இலங்குவதாக அவரே தம் வாழ்க்கைக் குறிப்பில் கூறியிருப்பதும் இங்குக் கருதத்தக்கது.

"என்னுடைய வாழ்க்கையில் மூவித நடைகள் மருவின. ஒன்று இளமையில் உற்றது. இன்னொன்று சங்க இலக்கியச் சார்பு பெற்றபோது பொருந்தியது. மற்றொன்று பத்திரிகை உலகை அடைந்த நாளில் அமைந்தது. இறுதியதே எனக்கு உரியதாய் — உடையதாய் — நிலைத்தது"[17]

என்று எழுதுவர். எனவே, எல்லாக் கலைஞர்களும் நடையமைப்பில் வேறுபடுகின்றனர் என்பது தேற்றம்.

### 5. திறனாய்வாளர் கூறும் அறுவகை நடையும் தமிழிலக்கியமும்

5. 1 நடையின் இயல்பை ஆய்ந்த திறனாய்வாளர்கள் நடை அறுவகையினதாக வேறுபடக்கூடும் என்று கருதுகின்றனர். (1) ஆசிரியர் (Author), (2) காலம் (Age), (3) நோக்கம் (Purpose), (4) கருத்து (Theme), (5) இடம் (Geography), (6) மக்கள் (Audience) முதலியவற்றால் நடையமைப்பு வேறுபடும்.[18]

#### *ஆசிரியர்*

5. 1. 1 நடை, ஆசிரியரின் இயல்போடு பெரிதும் தொடர்புடையது என்பதனை முன்னரேயே கண்டோம். ஹோமர், சேக்சுபியர், மில்டன் முதலானோர் பயன் படுத்தும் நடையினை அவர்தம் பெயராலேயே அழைக்கின்றனர். (Homeric, Shakespearean, Miltonic Styles). அங்ஙனமே தமிழிலக்கியத்தை ஆய்ந்த பண்டைத் தமிழர்களும் ஒவ்வொரு புலவருக்குரிய பாநடையோடு அவர்களை இயைத்துப் பாராட்டினர். நாவுக்கரசரைத் 'தாண்டக வேந்தர்' என்று அழைத்தனர்.

---

16. திரு. வி. க.-வின் வாழ்க்கைக் குறிப்புகள், பக். 144.
17. திரு. வி. க.-வின் வாழ்க்கைக் குறிப்புகள், பக். 145.
18. Dhosh, Prof. D. N., Principles of Literary Criticism, PP. 142-144.

வெண்பா நடையில் நிகரற்று விளங்கினர் புகழேந்தி; விருத்த நடையில் புகழ்பெற்றவர் கம்பர். இதனை,

> வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர்
>     செயங்கொண்டான் விருத்த மென்னும்
> ஒண்பாவிற் குயர்கம்பன் கோவையுலா
>     அந்தாதிக் கொட்டக் கூத்தன்
> கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
>     வசைபாடக் காள மேகம்
> பண்பாக வுயர்சந்தம் படிக்காச
>     லாதொருவர் பகரொ ணாதே[19]

என்னும் பாடல் இனிது உணர்த்தும்.

திருத்தக்கதேவரது நடையினைக் காவிய நடை எனவும், சந்த நடை மிக்கது வில்லிபுத்தூரார் நடை எனவும் சிறப்பாகக் கூறுவதுமுண்டு. பா நடைவகையாலும் நூல்கள் பெயர் பெற்று விளங்கின: நளவெண்பா, கலித்தொகை, நரிவிருத்தம், பரிபாடல், திருக்குறள், நாலடியார் போல்வன அத்தகையன.

தமிழிலக்கியத்தைப் பொறுத்தவரையில் பொருள்வகைப் பாகுபாடுகளையே பெரிதும் கொண்டனர் (காண்க: பின்னிணைப்பு: 1) என்பதும் எண்ணத்தகும்.

5. 1. 2 நடைத்திறன் வாய்ந்த ஆசிரியர் தம் காலத்திலேயே தமக்கெனத் தனி முத்திரையைப் படைத்து விடுவதன்றி, அவருக்குப் பின் வந்தவரும் அவ்வகை நடையினைப் பின்பற்றுமாறு செய்து விடுகின்றார். இஃது அவர் நடைக்குக் கிடைத்த வெற்றி—தனி ஆற்றல் ஆகும். பாரதியாருக்குப் பின் தோன்றிய பாரதிதாசன் முதலான கவிஞர்கள் பலரும் இன்று பெரும்பாலும் பாரதி வகுத்துத்தந்த நடையினையே—சிந்து கண்ணி போல்வனவற்றையே—பின்பற்றுவதைக் காண இயலும்.

5. 1. 3 உரைநடையமைப்பிலும் ஆசிரியர்கள் பலர் தங்களுக்கென ஒரு தனி இடத்தையும் பிடித்துக்கொண்டனர். மறைமலையடிகள் நடை, திரு. வி. க. நடை, சேதுப்பிள்ளை நடை, அண்ணா நடை என்று ஆசிரியர் பெயராலேயே நடைகள் சுட்டப்படுவதும் எண்ணுவதற்குரியன.

**காலம்**

5. 2. 1 நடை காலத்தோடு நெருங்கிய தொடர்புடையதாய் விளங்குகிறது. ஒவ்வொரு காலப் பகுதியிலும் ஒவ்வொரு வகையான

---

19. பெருந்தொகை, 1804.

நடையினை ஆசிரியர்கள் கையாளுகின்றனர். சங்க காலத்தில் ஆசிரியப்பாவும், இடைக்காலத்தில் விருத்தப்பாவும் வெண்பாவுமே மிகுதியாய்க் கையாளப்பட்டன. இருபதாம் நூற்றாண்டிலோ 'புதுக் கவிதை நடை' ஒன்றே உருவாக்கப்பட்டுள்ளது உன்னத்தக்கது.

5. 2. 2 காலத்திற்கு ஏற்ப இலக்கிய நடை மாறியமைக்குத் தமிழ் மொழியில் பா வளர்ந்த முறையே தக்க சான்றாகும். ஆசிரியப் பாவும் வெண்பாவுமே முதன்மை இடத்தைப் பெற்றிருந்த நிலை மாறிக் கலிப்பாவும் வஞ்சிப்பாவும் புகுந்தன. பின்னர் விருத்தம் பெரு வளர்ச்சி பெற்றது. வெண்பா முதலியவற்றைவிட ஆசிரியப்பாவில் எளிமை மிகுந்திருந்தது. ஆசிரியப்பாவிலோ கட்டுப்பாடுகள் குறைவு. காலப்போக்கில் ஆசிரியப்பாவினை அடுத்து விருத்தத்தைப் போற்றி னர். ஒரேவகையான நடையும் ஓசையும் உடைய ஆசிரியப்பாவில் வெவ்வேறு வகையான உணர்ச்சிகளை அமைப்பதில் எவ்வளவோ தடை உண்டு என்பதை இடைக்காலப் புலவர்கள் உணர்ந்தார்கள். விருத்தம் என்பது வெவ்வேறு வகை நடையும் வகைவகையான ஓசை யும் அமைந்து மாறி வரக் கூடியதாக இருத்தலைக் கண்டு, அதைப் போற்றத் தொடங்கினர்கள். இவ்வாறே மற்ற மாறுதல்களும் ஏற் பட்டன என்பர்.[20]

உரைநடையிலும் இடைக்காலத்தில் வடமொழியின் தாக்கத் தால் தோன்றிய மணிப்பிரவாள நடையையும், இன்று பேச்சு வழக்கில் ஆங்கில மொழியோடு சேர்ந்து தமிழ் பேசும் புதிய நடையை யும் காலத்திற்கேற்ற நடைக்குச் சான்றாகக் கூறலாம். சங்க இலக் கியத்தில் எளிய உவமை நடைகள் இனிய முறையில் விளங்கின. இடைக்காலத்தே வெறும் 'சொல்லலங்காரக் கவிதைகள்' மலிந்தன. இவையெல்லாம் பிறமொழியின் தாக்கத்தால் தமிழ்பெற்ற மாறுதல் களாகும். எனவே காலச்சூழலும் நடை மாற்றத்திற்கு அடிப்படையாய் அமைகின்றது.

"நடை வெவ்வேறு ஆசிரியர்க்கு வெவ்வேறாக இருத்தல் போலவே, காலத்திற்கு ஏற்பவும் வேறுபட்டு அமைந்துள்ளமை காணலாம். அதனால்தான் பாட்டுக்கலையும் காலந்தோறும் வடிவ வேறுபாட்டுடன் விளங்கி வருகிறது எனலாம்" என்பர்.[21]

5. 2. 3 உரைநடையிலும் இத்தகைய மாற்றங்களை விழைந்த தமிழறிஞர் தூய தமிழ்நடையினை இக் காலத்தே காத்து வருகின்றனர். மறைமலையடிகளார், பாவாணர், பெருஞ்சித்திரனர் போன்ற அறிஞர் பெருமக்கள் தூய மொழி நடையினைப் போற்றி எழுதியதும்—எழுது வதும் குறிப்பிடத்தக்கன.

---

20. வரதராசன், டாக்டர், மு., இலக்கிய மரபு, பக். 129-130.
21. வரதராசன், டாக்டர், மு., இலக்கியத்திறன், பக். 245.

5. 2. 4 நடை, மாற்றம் பெறுவதற்கு அவ்வக்காலச் சூழலில் ஏற்படும் அரசியல் மாற்றங்களும் காரணமாகின்றன. பல்லவ அரசர் ஆண்ட காலத்து வடமொழிக்கு முதன்மை அளித்த காரணத்தால் அவர்கள் வெட்டுவித்த கல்வெட்டுகளிலெல்லாம் கூட மிகுதியாகக் கிரந்த எழுத்துகள் தமிழ்மொழியோடு பயன்படுத்தப்பட்டன. தனித் தமிழ் நடை துலங்க இக்காலத்திலும் அரசியல் சூழல் ஏற்ற வகையில் இருப்பது உன்னுதற்குரியது.

**நோக்கம்**

5. 3. 1 நடை, எழுதுவோருக்குத் தக்கவாறு வேறுபடுவது போல சொல்லும் நோக்கத்திற்குத் தக்கவாறும் வேறுபடுகிறது. உணர்ச்சிகளை உணர்த்த விழைந்த கலைஞன் அவ்வவ்வுணர்ச்சிக்குத் தக்கவாறு தன்னுடைய சொற்களைப் படைக்கிறான். வீர உணர்வை ஊட்ட வந்த கலைஞனின் நடையில்—அவன் சொற்போக்கில்—அந்தத் துடிப்பு அவனை அறியாமலேயே விழுவதைப் பார்க்கலாம். அவ்வாறே துன்ப மிகுதியால் மெல்லோசைச் சொற்கள் நடையில் பயின்று வருவதும் இயல்பே.

5. 3. 2 செயங்கொண்டாரின் போர்க்கள வருணனைப் பாடல்களும், வீரங்கலந்த அவலச் சுவைப் பாடல்களும் கலிங்கத்துப் பரணியில் இத்தகு நடைக்குச் சான்றாகத் திகழ்கின்றன.

5. 3. 3 நீதிப் பண்புகளைக் கூறவந்த புலவர்கள் பெரும்பாலும் வெண்பா யாப்பினையே எடுத்தாண்டது இங்கு எண்ணுதற்குரியது. திருக்குறளும் ஈரடிச் செய்யுள்—குறள் வெண்பாவாலேயே நீதி புகட்டுகிறது. புத்தர் அருளிய ‘தம்மபதமும்’ குறளைப் போன்றே ஈரடிச் செய்யுளாக இலங்குகிறது. ‘நீதி வெண்பா’ என்றே பெயர் பெற்று விளங்குகின்ற பான்மையும் அறிதற்பாலது. அகவிக் கூறுதலை அடிப்படையாகக் கொண்டே அகவற்பா எழுந்தது என்ற கருத்தும் இத்துடன் ஒப்பு நோக்கற்குரியது.

5. 3. 4 எனவே ஒருவர் கருதிய நோக்கத்திற்குத் தக்கவாறும் ஒருவகையான ‘நடையமைப்பு’ மொழியில் ஏற்பட்டு விடுகிறது என்பது தெளிவாம்.

‘இழுமென் மொழியால் விழுமியது நுவலல்’

என்னும் நூற்பாவினை ஆசிரியர் தொல்காப்பியனார் ‘தோல்’ என்று கூறப்படும் செய்யுள் வனப்பிற்கு உறுப்பாகக் கூறினார். பேராசிரியர் ‘இழும்’ என்ற சொல்லுக்கு ‘மெல் என்ற சொல்லான்’ என்று பொருள் கூறுவர்.[22] ‘இழும்’ என்ற சொல் ஓர் ஒலிக்குறிப்புச் சொல்லாகவே விளங்குகிறது எனலாம். ஒலிக்குறிப்புச் சொற்கள் ஆசிரியர் கருதிய

---

22. தொல். செய்யுளியல், நூற்பா. 238, பேரா. உரை.

நோக்கத்திற்குத் தக்கவாறே தம் படைப்பில் இலங்கும் என்பதனை இக் குறிப்பும் உணர்த்துகிறது.

**கருத்து**

5. 4. 1 கருத்தின் தாக்கத்தாலும் நடை வேறுபடுகிறது. இதனைப் பொருள் பற்றிய பாகுபாடு என்றும் உரைக்கலாம். புதினம், வரலாறு, அறிவியல், மெய்ப்பொருள் முதலானவற்றை எழுதும் ஆசிரியர்கள் ஒவ்வொருவரும் தத்தம் நடையில் வேறுபடுகின்றனர். இவர்கள் கருத்தினை உணர்த்தும் முறைகளிலும் வேறுபாடுகளும் நயங்களும் உள.

5. 4. 2 பாட்டிலும் பொருளுக்கும் வடிவத்திற்கும் இயைபு உண்டு. உணர்த்தப்படும் பொருளும் அதனை உணர்த்தும் வடிவமும் பிரிக்க முடியாதன. அகப்பொருள் துறையினைப் பாடவந்த தொல்காப்பியனார், கலியாலும் பரிபாட்டாலும் பாட வேண்டும் என்றார்.

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரிய தாகும் என்மனார் புலவர்.[23]

என்னும் நூற்பா இதனை விளக்கும். ஆனால் இம் முறை சங்க காலத்திலேயே போற்றப் படவில்லை என்பது தெரிகிறது.

கலித்தொகை கலிப்பாவால் ஆகிய தொகை நூலாகும். பரிபாடலும் பரிபாட்டால் ஆகிய தொகை நூல். ஏனையவெல்லாம் ஆசிரியப் பாவாலேயே செய்யுட்களைப்பெற்று விளங்குகின்றன. எனவே. கருத்து அல்லது பொருளுக்குத்தக்க வடிவம் தரப்பட வேண்டும் என்ற கருத்து இருந்திருக்கிறது என்பது மட்டும் புலனாகிறது.

வாழ்த்தும் பொருள்பற்றிய பாட்டு ஆசிரியமாகவும், வெண்பாவாகவும் அமையவேண்டும். கலிப்பாவாலும், வஞ்சிப்பாவாலும் அமைதல் கூடாது என்றார் தொல்காப்பியனார்.[24] வாயுறை வாழ்த்து, புறநிலை, செவியறிவுறூஉ முதலியனவும் இங்ஙனமே அமைய வேண்டும் என்பார்.

5. 4. 3 கருத்து வகையால் சில புலவர்கள் சிறப்புப்பெற்று விளங்குகின்றனர். பாலை பாடிய பெருங்கடுங்கோ, மருதனிளநாகனார் போன்ற புலவர்களின் பெயர்கள் இதனை விளக்குவனவாம். உலா,

---

23. தொல். அகத். 56.
24. தொல். செய். 109, 158, 159.

பரணி, கலம்பகம், தூது போன்ற இலக்கிய வகைகளும் இன்ன இன்ன நடைவகைகளைப் பெற்று விளங்கவேண்டும் என வரையறுத்துள்ளனர். பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல், பிரபந்தத் திரட்டு முதலான நூல்கள் இப் பொருள்பற்றிய நூல்களுக்கு இலக்கணம் வகுத்துத் தந்துள்ளன. கருத்து வகையால் இன்ன இன்ன நடைதாம் அமையவேண்டும் என்பதற்கு இவைகளைச் சான்றுகளாகக் கொள்ளலாம்.

## இடம்

5. 5. 1 நாட்டுக்கு நாடு மொழி வேறுபடுகிறது. ஒரே மொழி பேசுகின்ற நாட்டு மக்களிடத்தும், பேச்சு வழக்கில் மொழிநடை வேறுபடுவதைக் காணமுடியும். நாடோடிப் பாடல்கள் அந்தந்த இடத்திற்கேற்ப அமைந்துள்ளதும் இத்தகு நடை வேறுபாட்டுக்குச் சான்றாக அமைகின்றன.

5. 5. 2 ஊரைப் பற்றிப் பாடுவதற்கு வெண்பா யாப்பு உரியது என்ற கருத்தும் உண்டு.[25] அதனை ஒட்டியே, 'ஊர் வெண்பா' என்னும் நூல் வகை தோன்றியதும் இங்கு எண்ணுதற்குரியது. நெல்லைச் சிலேடை வெண்பா என்ற நூலும் இத்தகு நடையினதே. ஊர் வெண்பாவும் ஊர் நேரிசை, ஊரின்னிசை எனப் பாகுபாடு செய்யப்பட்டது.[26]

5. 5. 3 வீரசோழியத்தில் வரும்,

> சட்டக மேதிணை கைகோள் நடைசுட் டிடங்கிளவி
> ஒட்டிய கேள்வி மொழிவகை கோளுட்பெறு பொருளென்று
> இட்டிகச் சொற்பொருள் எச்ச மிறைச்சி—பயன் குறிப்புக்
> கட்டக மெய்ப்பாடு காரணங் காலங் கருத்தியல்பே[27]

என்னும் பாடல் அகப்பொருளுக்குரிய இருபத்தேழு உரையினைச் சுட்டுகிறது. இவற்றுள், "நடையாவது ஒழுக்கம்—இப் பாட்டு எந்நடை பற்றி வந்தது என்றால், இந்நிலத்தின் ஒழுக்கம் பற்றி வந்தது

---

25. வெண்பாப் பட்டியல், பக். 41.
"வெண்பா வாற்சிறப் பித்தூ ரொருபான்
பாவிரித் துரைப்பதூர் வெண்பா வாகும்"
—முத்து வீரியம், யாப்பதிகாரம், 134.

26. பாட்டுடைத் தலைவன் ஊர்ப்பெயரெடுத்து நேரிசை வெண்பாவாற் சிறப்பித்துத் தொண்ணூறு, எழுபது, ஐம்பது என்னுந் தொகையாற் பாடுவது ஊர் நேரிசை வெண்பா என்றும், இவ்வாறு இன்னிசை வெண்பாவாற் பாடுவது ஊரின்னிசை வெண்பா என்றும் பெயர் பெறும்.

27. வீரசோழியம், 88.

என்றறிவது " என்று விளக்கம் எழுதுவர். குறிஞ்சி நடையியல், நெய்தல் நடையியல், பாலை நடையியல், மருத நடையியல், முல்லை நடையியல் என்று மேற்கோள் செய்யுள்களுடன் விளக்கப்பட்டுள்ளதும் இங்கு ஒப்பு நோக்கற்குரியது.

மக்கள்

5. 6. 1 நடையமைப்பு தம்முன்னே உள்ளோர்க்குத் தக்கவாறு மாறுபடுகிறது. கற்றோர்க்குத் தக்கவாறு ஓர் நடையும், எளிய மக்களுக்குத் தக்கவாறு மற்றோர் நடையும் கைவரப் பெற்றிருத்தல் வேண்டும். கேட்போர் உளங்கொளக் கூறுதற்கு இத்தகு நடை இன்றியமையாதது.

5. 6. 2 சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளின் ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை, வேட்டுவவரி முதலாயின, மக்கள் நடைக்குத் தக்கவாறு இயற்றப்பட்டுள்ளன எனலாம். அதேபோன்று காதலர் இருவர் பாடிய கானல் வரிப்பாட்டும் அத்தகைய இயல்பினதே.

5. 6. 3 பக்தி இலக்கியங்களில் காணப்படும் பதிகங்களும் மக்கள் குழுமி இறைவனைத் துதிபாடும் வண்ணம் மெய்ப்பொருள் உணர்ச்சி பெற்றதாய் விளங்கும் தனித்த நடைபெற்றுத் திகழ்வன. கிராம மக்கள் பாடும் ஏற்றப் பாட்டுகளும் மக்கள் நடைக்கு ஏற்ப மாறுபடுகின்றன.

6. நடையின் வகைகள்—பொது

(1) செய்யுள் நடை

6. 1 மொழி நடையினைப் பொதுவாகச் செய்யுள் நடை, உரை நடை என இருவகையாகப் பாகுபடுத்தலாம். உள்ளதை உள்ளவாறு எளிதாகக் கூறுவதும் எழுதுவதும் உரைநடையின்பாற்பட்டது.[28] கவிஞனுடைய கற்பனை வளமும், சொல் வளமும் சிறக்கப் பாடுவது செய்யுள் நடையாகும்.[29] உரைநடை இன்பந் தருவதாயினும் செய்யுள் மனத்தை ஈர்க்கும் அளவிற்கு, உரைநடை ஈர்ப்பதில்லை. எல்லா மொழிகளிலும் இவ் விருவகை நிலைகளையும் நாம் காணமுடியும்.

செய்யுள் நடை

6. 2. தொல்காப்பியரும் செய்யுள் நடையினையும், உரைநடையினையும் வகைப்படுத்தி ஆராய்ந்திருக்கின்றார். 'செய்யுளியல்' என்ற பகுதி முழுவதிலும் உணர்த்தும் திறன்—நடையமைப்பு—எவ்வெவ் வகையிலெல்லாம் விளங்குகிறது என்பதைத் தொல்காப்பியர் தெளிவுபடுத்துகிறார் என்றே கூறலாம்.

---

28. The Concise Oxford Dictionary of Current English, p. 982.
29. Ibid., 937.

பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரி யப்பா வெண்பா என்றாங்
காயிரு பாவினுள் அடங்கும் என்ப[30]

என்ற நூற்பாவான் தொல்காப்பியர் பாவகையான் இருவகையாக நடையினைப் பகுத்துக் கூறுகின்றார்.

ஆசிரிய நடைத்தே வஞ்சி ஏனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப[31]

என்று வஞ்சிப்பாவிற்கும் கலிப்பாவிற்கும் உள்ள இயல்பினைப் புலப் படுத்துவர். இவையெல்லாம் செய்யுள் இயலுகின்ற திறத்தையொட்டி —நடையியல்பினை ஒட்டிப் பகுக்கப்பட்டதாம். தொல்காப்பிய உரை காரரான இளம்பூரணரும் இந் நூற்பாவின் உரையில்,

'நடையென்றது அப் பாக்கள் இயலுந்திறம்'[32]

என்றே கூறுவதும் பெரிதும் உளங்கொளத் தக்கது. எனவே நடைபெறும் அமைப்பால் பாவகையினை நான்கு வகையாகப் பாகு படுத்தியுள்ளார். அவை ஆசிரியப்பா, வெண்பா, வஞ்சிப்பா, கலிப்பா என நான்காகும். இந் நால்வகைப் பாக்களுள்ளும் ஆசிரியமும், வெண் பாவும் 'முதற்பா' என்னும் சிறப்புக்குரியதாகப் பிரித்தனர்.

6. 3 பேராசிரியரின் கூற்றால் ஓசையின் வகையாலேயே இது இன்ன பா என உணர்ந்துகொள்ள முடியும் என்பதும் பெறப்படுகிறது.

'பாவென்பது, சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாடம் ஓதுங்கால், அவன் சொல்லு கின்ற செய்யுளை விகற்பித்து இஃது இன்ன செய்யுளென்று உணர்தற்கு ஏதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை'[33]

என்பது அவருடைய உரையாகும்.

6. 4 செய்யுளிலக்கணத்தை உணர்த்த முற்பட்ட தொல்காப்பியர் தம் முதல் நூற்பாவிலேயே செய்யுளின் உறுப்புகளை 34 உறுப்புகளா கப் பாகுபடுத்தி ஆராய்கின்றார்:

மாத்திரை யெழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடியாப் பெனாஅ

30. தொல். செய். 103.
31. ,, ,, 104.
32. ,, ,, 104, இளம். உரை.
33. ,, ,, 1, பேரா. உரை.

மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவியல் எனாஅ
திணையே கைகோள் பொருள்வகை எனாஅ
கேட்போர் களனே காலவகை எனாஅ
பயனே மெய்ப்பா டெச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையின்
ஆறு தலையிட்ட அந்நா லைந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே[34]

இவற்றுள் மாத்திரை முதலாக வண்ணம் ஈறாகிய இருபத்தாறும் யாப்பிலக்கணப் பகுதி என்றும் இவை தனிநிலைச் செய்யுட்கு இன்றியமையாதனவாய் வரும் உறுப்புக்கள் என்றும், அம்மை முதல் இயைபு ஈறாக வரும் எண்வகை வனப்பும்—தனிநிலைச் செய்யுள் பல தொடர்ந்தமைந்த தொடர்நிலைக்கே பெரும்பான்மையும் உறுப்பாயும் தனிநிலைக்கண் ஒரோவொன்றும் வருவன எனவும் பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைப்பகுதிகளால் நன்குணரலாம்.

6. 5 இவையெல்லாம் செய்யுள் அமைப்பில் பல்வேறு வகைகளைக் காண்பதற்கும், பகுத்தாய்வதற்கும் பயன்படுமாறு விளங்குகின்றன. எனவே இவற்றையும் நடைவேறுபாடுகளாகவே கொள்ளலாம். செய்யுள் இயல்கின்ற திறத்தில் ஓசை வேறுபாடுகளினாலேயே பாவினைப் பிரித்தார்கள்.

6. 6 பா என்றாலே ஓசை என்று பொருள்.[35] பாவின் உருவ அழகைப் பொருளுணர்ந்து பாடிக்காணும் ஓசையின்பத்தில்தான் பல்வேறு நடையமைப்புக் கொண்ட பாவகைகளைக் காண முடிகிறது. காலப்போக்கில் ஆசிரியம், வெண்பா, வஞ்சிப்பா, கலிப்பா என்பனவும் தாழிசை, துறை, விருத்தம், முதலிய இனங்களால் பல்வகைப்—பாக்களாகப் பிரித்துக் கூறுவதும் உளங்கொளத் தக்கன. (காண்க: பின்னிணைப்புகள் 2, 3). இங்ஙனம் நுட்பமான ஓசைவேறுபாட்டால்—நடைவேறுபாட்டால் இவையெல்லாம் விரிந்தன என்று கூறுவதும் பொருத்தமேயாகும்.

---

34. தொல். செய். 1.
35. பாட்டு - ஒலி; 'பாட்டு, இடி, ஆநிரன் டொலியினைப் பகரும்' சேந்தன் திவாகரம், பக். 240.

உரைநடை

6. 7 விளங்க முடியாத எந்தப் பொருளையும் எளிமையாகவும் தெளிவாகவும் உணர்த்துவதற்கு உரைநடை பெரிதும் பயன்படுகிறது. உரைநடையும் காலப்போக்கில் நடையமைப்பில் மாறுபட்டே வருகிறது. இறையனார் களவியல் உரைநடை, சிலப்பதிகார உரைநடை முதலான பழைய உரைகளிலிருந்து இன்றுவரைக்கும் மலர்ந்துள்ள உரைகளின் நடைப்போக்கை எண்ணிப் பார்த்தால் ஒவ்வொரு கால வரையறையிலும் ஒவ்வொரு விதமான நடையமைப்புத் தோன்றியிருந்ததை—இருப்பதை—உணர முடியும்.

6.8 உரைநடை வகையினைத் தொல்காப்பியர் நான்கு வகையாகக் கூறுகின்றார் :

> பாட்டிடை வைத்த குறிப்பினானும்
> பாவின் றெழுந்த கிளவி யானும்
> பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி யானும்
> பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்என்று
> உரைவகை நடையே நான்கென மொழிப[36]

என்பது தொல்காப்பிய நூற்பா.

6. 9 மேலைநாட்டு ஆசிரியர் ஒருவர் உரைநடையினைக் கதைப் போக்கு (Narrative), கொள்கை விளக்குமுறை (Argumentative), நாடகப் பாங்கு (Dramatic), செய்தி தரும் முறை (Informative), ஐயமகற்றும் ஆய்வுமுறை என ஐந்து வகையாகக் கூறுவர்.[37]

6. 10 மொழிநடையின் பொது இயல்பைத் திறனாய்வாளர் பின் வருமாறும் பகுத்தும் தொகுத்தும் ஆய்ந்துள்ளனர்.[38]

(1) சொல்லுக்கும் அது குறிக்கும் பொருளுக்கும் இடையிலுள்ள தொடர்பின் அடிப்படையில் மொழிநடை,

கருத்து நிலையானது — புலனுணர்வு நிலையுடையது
செறிந்தமைந்தது — நெகிழ்ந்தமைந்தது

---

36. தொல். செய். 166.
37. Marjorie Boulton, The Anatomy of Prose, (அ. மு. ப. தமிழ் உரைநடை, பக். 56.)
38. ரெனிவெலாக் & ஆஸ்டின் வாரன், இலக்கியக் கொள்கை, (மொழிபெயர்ப்பு, திருமதி குளோறியா சுந்தரமதி, பக். 264.)

| | |
|---|---|
| குறைப்பது | — மிகைப்படுத்துவது |
| திட்டமானது | — தெளிவற்றது |
| அமைதியானது | — கிளர்ச்சியற்றது |
| தாழ்ந்தது | — உயர்ந்தது |
| எளிமையானது | — அலங்காரமானது |

எனப் பிரிக்கப் பட்டுள்ளது

(2) சொற்களுக்கு இடையிலுள்ள உறவை வைத்து,

| | |
|---|---|
| இறுகியமைந்தது | — தளர்ந்தமைந்தது |
| குழைவுடையது | — இசைநிலையுடையது |
| மெதுவானது | — கரடுமுருடானது |
| வண்ணமற்றது | — வண்ணமுடையது |

எனவும் மொழிநடை பிரிக்கப்படுகின்றது.

(3) சொற்கள் மொழியின் முழுநிலை அமைப்போடு கொண்டுள்ள தொடர்பை வைத்து,

பேச்சு நிலையிலமைந்தது — எழுதப்பெற்றது

பழகிப் பழகிச் சலித்த நிலையுடையது — தனிப்பட்ட நிலையுடையது

என்று வகுக்கப்பட்டுள்ளது.

(4) சொற்களுக்கு ஆக்கியோனேடுள்ள தொடர்பை வைத்து,

தற்சார்பற்றவை — தற்சார்புடையவை

என அமைகிறது. இப் பகுப்பு முறைகளை எல்லா மொழியியல் கூற்றுகளுக்கும் பொருத்தி அமைக்கலாம்.

### தொகுப்புரை

தமிழிலக்கியத்தில் நடையமைப்பு, மிகுதியும் பொருள்வகைப் பாகுபாட்டாலேயே சுட்டப்பட்டுள்ளன. யாப்பருங்கல விருத்தியில் 'நாற்பா நடை தெரிந்த நன்னூற் பெரும்புலவர்'[39] என்று பா வகையினை 'நடை' என்றே கூறுவதும் கருதத்தக்கது. நடை வகையினைச் செய்யுள், உரை என்று பொதுநிலைப் பாகுபாடு செய்துகொண்டாலும், சிறப்பாகக் கருத்து வகையாலும், உணர்ச்சி வகையாலும், கால

39. யாப். விருத்தி, ஒழிபியல், பக். 379.

வகையாலும், சொல்லாட்சிச் சிறப்பு வகையாலும் கீழ்க்கண்டவாறு பிரித்துப் பார்க்கலாம் :






## பின்னிணைப்பு — 1*

### 1. பாவகையினால் பாகுபாடு பெற்றவை

1. அகவல் (ஆசிரியம்)
2. ஆசிரிய விருத்தம்
3. எழுகூற்றிருக்கை
4. கண்ணி
5. கலித்துறை
6. கலிப்பா
7. கலிவெண்பா
8. கழிநெடில்
9. கொச்சகம்
10. வெண்பா (நேரிசை, சிலேடை, பஃறொடை)

### 2. சந்தவகையால் பாகுபாடு உற்றவை

1. ஆனந்தக் களிப்பு
2. கீர்த்தனை (தோத்திரம், சரித்திரம்)
3. சந்தப்பாட்டு
4. சிந்து (காவடிச் சிந்து, வழிநடைச்சிந்து)
5. திருப்புகழ்
6. தெம்மாங்கு
7. பதம்
8. வகுப்பு
9. வண்ணம்
10. வரிப்பாட்டு
11. விற்பாட்டு

### 3. பாடல் எண் தொகையால் வேறுபடுத்தப்பட்டவை

1. அட்டகம் (எட்டு)
2. ஆயிரம்
3. கட்கம்
4. பஞ்சகம்
5. பஞ்சரத்தினம் (ஐம்மணி மாலை)
6. அலங்கார பஞ்சகம்
7. எண்செய்யுள்
8. தசகம்
9. சோடசம் (சந்திரகலா மாலை)
10. தொள்ளாயிரம்

---

* தமிழாய்வு — தொகுதி — 1, பகுதி — 1ல், திரு. மு. சண்முகம் பிள்ளை அவர்கள் எழுதியது — பக். 19 & 20.

4. பாடல் அமைப்பு வகையான் அமைந்தவை

1. யமகவந்தாதி
2. திரிபந்தாதி
3. நிரோட்டகயமக வந்தாதி
4. பதிற்றுப்பத்தந்தாதி
5. பிரபந்தம்
6. திரட்டு (கொத்து, மஞ்சரி, சேகரம்)
7. சுருக்கம் (சாரம், சங்கிரகம்)

5. வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடையவை

1. அனுபூதி
2. எச்சரிக்கை
3. பராக்கு
4. லாலி
5. கட்டியம்
6. ஏசல்
7. கவசம்
8. காதல்
9. சிங்காதனக்கவிதை
10. வாகனக்கவிதை (தண்டிகைக் கவிதை வாகனமாலை)
11. சிட்டுக்கவி
12. சோபனம்
13. தாலாட்டு
14. திக்குவிசயம்
15. நலுங்கு
16. புலம்பல் (இரங்கல், அழுங்கல், அலைசல்)
17. மங்களம்
18. முளைப்பாட்டு
19. விண்ணப்பம் (முறையீடு வேண்டுகோள்)

6. மகளிர் விளையாட்டின் அடிப்படையில் பிறந்தவை

1. அம்மானை
2. கழல்
3. பந்து
4. பாவை
5. உந்தியார்
6. கும்மி (ஒயிற்கும்மி, வழிநடைக்கும்மி)
7. சாழல்
8. பூவல்லி

7. தொழில் முறையில் எழுந்தவை

1. ஏணியேற்றம்
2. ஏலப்பாட்டு
3. ஓடப்பாட்டு (கப்பல் பாட்டு)
4. வள்ளைப்பாட்டு(உலக்கைப் பாட்டு)

8. பொருள்களின் தன்மையால் பிரிவுபட்டவை

1. அலங்காரம் (வர்ணிப்பு)
2. கீதை
3. தலபுராணம் (மகாத்மியம், மான்மியம்)
4. லீலை
5. திருப்பணிமாலை
6. அம்மானைப்பாட்டு (கதைப் பாட்டு)
7. நாடகம் (குழு நாடகம், நொண்டி நாடகம்)
8. நாமாவளி
9. பல்லாண்டு
10. பாட்டு (சிங்கிப்பாட்டு, சேவல்பாட்டு, தும்பிப்பாட்டு)
11. விலாசம்
12. விஜயம்
13. விளக்கம் (தீபிகை)
14. வினாவிடை

## பின்னிணைப்பு — 2
## தொல்காப்பியப் பாவியல்

| பா | பாவகை | பாவியல் பொருள் | உரிய அடி |
|---|---|---|---|
| ஆசிரியம் | | 1. அறம், பொருள், இன்பம்<br>2. வாழ்த்தியல் வகை நான்கு (புறநிலை, வாயுறை, அவையடக்கியல், செவி யுறை)<br>3. கைக்கிளை | 3—1000 |
| வஞ்சி | | 1. அறம், பொருள், இன்பம்<br>2. வாழ்த்தியல் வகை நான்கு | 3—1000 |
| வெண்பா | நெடுவெண் பாட்டு<br>குறுவெண் பாட்டு | 1. அறம், பொருள், இன்பம்<br>2. வாழ்த்தியல் வகை நான்கு<br>3. கைக்கிளை<br>4. பரிபாட்டு<br>5. அங்கதம் | 2 — 12 |
| கலி | ஒத்தாழி சைக்கலி<br>1. ஒன்று<br>2. ஏனைஒன்று<br>கலிவெண் பாட்டு<br>கொச்சகக் கலி<br>உறழ்கலி | 1. அறம், பொருள், இன்பம்<br>2. வாழ்த்தியல் வகை<br>3. அகப்பொருள் | அடிவரையில |
| மருட்பா | | கைக்கிளை<br>வெண்பாவால் தொடங்கி ஆசிரியத்தால் முடியும் | |
| பரிபாட்டு<br>(உறுப்புகள்)<br>கொச்சகம்<br>அராகம்<br>சுரிதகம்<br>எருத்து | | அகப் பொருள் | 25 — 400 |

பின்னிணைப்பு—3

## யாப்பருங்கலம் — பா - பாவினம்

| பா | வகை | விரி |
|---|---|---|
| வெண்பா | குறள் | குறள் வெண்பா |
| | | விகற்பக் குறள் வெண்பா |
| | சிந்தியல் | நேரிசைச் சிந்தியல் |
| | | இன்னிசைச் சிந்தியல் |
| | இன்னிசை | ஒரு விகற்ப நேரிசைச் சிந்தியல் |
| | | இரு விகற்ப நேரிசைச் சிந்தியல் |
| | நேரிசை | ஒரு விகற்ப இன்னிசைச் சிந்தியல் |
| | | இரு விகற்ப இன்னிசைச் சிந்தியல் |
| | ப∴றொடை | ஒரு விகற்ப நேரிசை வெண்பா |
| | | இரு விகற்ப நேரிசை வெண்பா |
| | | ஒரு விகற்ப இன்னிசை வெண்பா |
| | | பல விகற்ப இன்னிசை வெண்பா |
| | | பல விகற்ப நேரிசை வெண்பா |
| | | ஒத்த விகற்பப் ப∴றொடை வெண்பா |
| | | ஒவ்வா விகற்பப் ப∴றொடை வெண்பா |
| ஆசிரியப்பா | நேரிசை | இன்னியல் நேரிசை ஆசிரியப்பா |
| | | விரவியல் நேரிசை ஆசிரியப்பா |
| | இணைக்குறள் | இன்னியல் இணைக்குறள் ஆசிரியப்பா |
| | | விரவியல் இணைக்குறள் ஆசிரியப்பா |
| | நிலைமண்டிலம் | இன்னியல் நிலைமண்டில ஆசிரியப்பா |
| | | விரவியல் நிலைமண்டில ஆசிரியப்பா |
| | அடிமறிமண்டிலம் | இன்னியல் அடிமறிமண்டில ஆசிரியப்பா |
| | | விரவியல் அடிமறிமண்டில ஆசிரியப்பா |

| பா | வகை | விரி |
|---|---|---|
| கலிப்பா | நேரிசை ஒத்தாழிசை | வெள்ளைச் சுரிதக நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா |
| | | அகவற் சுரிதக நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா |
| | அம்போதரங்க ஒத்தாழிசை | அளவியல் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா |
| | | அளவழி அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா |
| | வண்ணக ஒத்தாழிசை | அளவியல் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா<br>அளவழி வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா |
| | வெண்கலிப்பா | கலிவெண்பா<br>வெண்கலிப்பா |
| | தரவுக் கொச்சகம் | இயற்றரவு கொச்சகக் கலிப்பா<br>சுரிதகத்தரவு கொச்சகக் கலிப்பா |
| | தரவிணைக் கொச்சகம் | இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா<br>சுரிதகத் தரவிணைக் கொச்சகக் கலிப்பா |
| | சி∴ருழிசைக் கொச்சகம் | இயற் சி∴ருழிசைக் கொச்சகக் கலிப்பா<br>குறைச் சி∴ருழிசைக் கொச்சகக் கலிப்பா |
| | ப∴ருழிசைக் கொச்சகம் | இயற் ப∴ருழிசைக் கொச்சகக் கலிப்பா<br>குறைப் ப∴ருழிசைக் கொச்சகக் கலிப்பா |
| | மயங்கிசைக் கொச்சகம் | இயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா<br>அயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா |
| வஞ்சிப்பா | குறளடி | இன்னியற் குறளடி வஞ்சிப்பா<br>விரவியற் குறளடி வஞ்சிப்பா |
| | சிந்தடி | இன்னியற் சிந்தடி வஞ்சிப்பா<br>விரவியற் சிந்தடி வஞ்சிப்பா |
| மருட்பா | புறநிலை | புறநிலை வாழ்த்துச் சமனிலை<br>புறநிலை வாழ்த்து வியனிலை |
| | வாயுறை வாழ்த்து | வாயுறை வாழ்த்துச் சமனிலை<br>வாயுறை வாழ்த்து வியனிலை |
| | செவி யறிவுறூஉ | செவியறிவுறூஉச் சமனிலை<br>செவியறிவுறூஉ வியனிலை |
| | கைக்கிளை | கைக்கிளைச் சமனிலை<br>கைக்கிளை வியனிலை |

## துணை நூல்கள்

1. கலியாணசுந்தரனார், திரு. வி., திரு. வி.க.-வின் வாழ்க்கைக் குறிப்புகள், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969.

2. சஞ்சீவி, டாக்டர் ந., இலக்கிய இயல் — அ. ஆ., தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்க வெளியீடு, சென்னை, 1974.

3. சேந்தன் திவாகரம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1958.

4. தமிழாய்வு (தொகுதி இரண்டு), சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை வெளியீடு, 1973.

5. திருக்குறள், டாக்டர். மு.வ. தெளிவுரை, கழக வெளியீடு, சென்னை, 1969.

6. தொல்காப்பியம் (பொருள்), இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1953.

7. தொல்காப்பியம் (பொருளதிகாரம் இரண்டாம் பாகம்), பேராசிரியர் ம. ந. சோமசுந்தரம் பிள்ளை குறிப்புரை, சாது அச்சுக் கூடம், சென்னை, 1935.

8. பரமசிவானந்தம், அ. மு., தமிழ் உரைநடை, தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை, 1967.

9. முத்துவீரியம், Printed at the Albinion Press, Madras, 1889.

10. யாப்பருங்கலம், மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை (ப. ஆ.), அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை, 1960.

11. வரதராசன், டாக்டர் மு., இலக்கியத்திறன், பாரி நிலையம், சென்னை, 1965.

12. வரதராசன், டாக்டர் மு., இலக்கிய மரபு, பாரி நிலையம், சென்னை, 1968.

13. வீரசோழியம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969.

14. (வச்சணந்திமாலை என்னும்) வெண்பாப் பாட்டியலும் வரையறுத்த பாட்டியலும், இராமலிங்கத் தம்பிரான் விளக்கவுரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1936.

15. வெள்ளைவாரணன், க., தொல்காப்பியம் (தமிழிலக்கிய வரலாறு), அண்ணுமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம், 1970.

16. ரெனிவெலாக் & ஆஸ்டின் வாரன். இலக்கியக் கொள்கை, (மொ. பெ. குளோறியா சுந்தரமதி), பாரி நிலையம், சென்னை, 1966.

ஆங்கில நூல்கள்

17. Aber Grombie L. Principles of Literary Criticism, Yora & Co., Bombay, 1971.

18. Dosh, Prof. D. N., Principles of Literary Criticism, Kitab Ghar, Gwalior, 1970.

19. Hudson, W. H., An Introduction to the Study of Literature, Kalyani Publishers, Ludhiana, 1971.

20. Marjorie Boulton, The Anatomy of Prose.

21. The Concise Oxford Dictionary of Current English, Ed., by H. W. Fowler And F. G. Fowler, Delhi, 1972.

22. Webster's New World Dictionary of the American Language, The World Publishing Company, Eleveland & New York, 1964.

## கருத்தரங்கில் தமிழ்த்துறைத் தலைவர்

## பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள்

## ஆற்றிய குறிப்புரை

நடையியலைப்பற்றிய ஆராய்ச்சி இன்று இலக்கிய உலகில் குறைவாகத்தான் உள்ளது. முன்னர் ஒருவகையில் நம் பண்டைய உரையாசிரியர்கள் நடையியலைப்பற்றி ஓரளவு ஆய்ந்துள்ளனர் எனலாம். அவர்கள் தங்களுடைய உரைகளில் சொல்லைப்பற்றியும், பொருளைப் பற்றியும் ஆராய்ந்துள்ளனர். நடை என்பது சொல்—தொடர்நிலையின் இயல்பேயாகும்.

1950ஆம் ஆண்டிற்குமேல் இந்தப் பொருள்பற்றிய ஆராய்ச்சி முதன்மைநிலை பெற்றது. இன்றைய மொழியியல் ஆராய்ச்சியில் நடையியல் பற்றியும் ஆய்கின்றனர். நடை குறித்து பட்டியல் செய்து நூல் - கட்டுரைக் குறிப்புகளுடன் ஒரு நூலடைவு ஆங்கிலத்தில் வெளி வந்துள்ளது. அது ஆய்வாளருக்கு மிகவும் இன்றியமையாததாய் விளங்குகிறது.

இனி மொழி என்பது ஒலி. ஒலியினுடைய அடிப்படை. நடையினுடைய மூலக்கூறும் ஒலியேயாகும்.

மொழியும் இலக்கியமும் ஒன்று சேருமிடமே நடை. நடையே உணர்த்துவாரையும் உணர்வாரையும் இணைக்கின்றது.

சொல் < தொடர் < பாட்டு < காப்பியங்கள் என்ற வளர்ச்சி நிலையினை இங்கு எண்ணிப் பார்த்தல் நலம். ஒலி, உணர்ச்சிக்குத் தகுந்தவாறு வேறுபடுகிறது. சான்றாக இந்திய விடுதலை வேண்டித் தம் உள்ள உணர்ச்சியினை வெளிப்படுத்திய புலவர்களின் உணர்ச்சியினையும் அதற்கேற்ப அவர்கள் வெளிப்படுத்திய கவிதைகளின் நடையாற்றலையும் — சொல்லாற்றலையும் காண்க. எனவே, ஒலியும் உணர்ச்சியும் ஒன்றோடொன்று பெரிதும் இயைபுடையன.

நடை வகைகளைப் பொதுவாக இருநிலைப்படுத்தி உரைக்கலாம். ஒன்று காலவகை; மற்றொன்று ஆசிரியர் வகை. நுணுகிச் செல்லச் செல்ல பல்வேறு வகைகளாகப் பகுக்க இயலும். அவற்றை இக் கட்டுரை வகை தொகைப்படுத்தித் தந்திருக்கிறது.

சொல்லின் வரலாறே நடையின் வரலாறும் ஆகும். 'நடு' என்பதன் அடிப்படையாகப் பிறந்தது 'நடை' என்னும் சொல். 'நடு' என்பதற்குப் 'பொருத்து' என்றும் பொருளுண்டு. எனவே, உணர்ச்சியோடு பொருந்துதலும், உள்ளத்தோடு பொருந்துதலும், சொற்களோடு பொருந்துதலும் நடைக்குரிய தனி இயல்புகளாம்.

நடை ஆசிரியர்க்கு ஆசிரியர் வேறுபடும் விதம் குறித்தும், எந்தெந்த வகையில் எல்லாம் வேறுபடுகிறது என்பது குறித்தும் மேன்மேலும் ஆய்தல்வேண்டும்.

---

* மேலும் காண்க: 'நடையின் நடை,' 'நடுவின் நகர்வு' என்னும் இரு கட்டுரைகள். கட்டுரையாளர்: டாக்டர் ந. சஞ்சீவி, தமிழ்த்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்.

# கலைக்களஞ்சியத்தில் தமிழியல் கட்டுரைகள்

## ஒரு வகை தொகை

## 1. சங்க காலம்

கு. மோகனராசு, பி.எசி., எம். ஏ., சான்றிதழ்-மானிடவியல்,
விரிவுரையாளர், திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி,
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.

### குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| க. | = | கட்டுரை |
| க. + பா. | = | கட்டுரை+பார்க்க |
| கு. | = | குறிப்பு |
| கு. + பா. | = | குறிப்பு+பார்க்க |
| சி. கு. | = | சிறுகுறிப்பு |
| சி.கு.+பா. | = | சிறுகுறிப்பு+பார்க்க |

[ 25 வரிகட்கு மேல் கட்டுரை
4—25 வரிகள் குறிப்பு
1—3 வரிகள் சிறுகுறிப்பு ]

## 1. சங்கப் புலவர்கள்

| தொடர் எண் | பகுதி எண் | பொருள் | ஆசிரியர் | தொகுதி எண் | பக்கம் (அல்) பக்கங்கள் | தன்மை |
|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | அகம்பல்மால் ஆதனார் | ஆசிரியர் குழு | 1 | 14 | சி. கு. |
| 2 | 2 | அஞ்சில் அஞ்சியார் | " | " | 36-37 | கு. |
| 3 | 3 | அஞ்சிலாந்தை மகனார் | " | " | 37 | " |
| 4 | 4 | அஞ்சிலாந்தையார் | " | " | " | " |
| 5 | 5 | அடைநெடுங்கல்வியார் | " | " | 50 | சி. கு. |
| 6 | 6 | அண்டர்மகன் குறுவழுதி | " | " | 52 | கு. |
| 7 | 7 | அணிலாடு முன்றிலார் | " | " | 56 | " |
| 8 | 8 | அதியன் விண்ணத்தனார் | " | " | 84-85 | சி. கு. |
| 9 | 9 | அந்தி இளங்கீரனார் | " | " | 92 | " |
| 10 | 10 | அந்துவன் கிரனைக்காவேட்டனார் | " | " | 93 | " |
| 11 | 11 | அம்மள்ளனார் | " | " | 100 | " |
| 12 | 12 | அம்மூவனார் | " | " | 102 | கு. |
| 13 | 13 | அம்மெய்யன் நாகனார் | " | " | " | சி. கு. |
| 14 | 14 | அரிசில் கிழார் | " | " | 194 | கு. |
| 15 | 15 | அல்லங்கீரனார் | " | " | 206 | சி. கு. |
| 16 | 16 | அழிசி நச்சாத்தனார் | " | " | 241-242 | கு. |
| 17 | 17 | அள்ளூர் நன்முல்லையார் | " | " | 245 | " |
| 18 | 18 | அறிவுடை நம்பி | " | " | 267 | " |
| 19 | 19 | அறுவை வணிகன் இளவேட்டனார் | " | " | 271 | " |
| 20 | 20 | ஆசிரியர் நல்லந்துவனார் | " | " | 340 | " |
| 21 | 21 | ஆசிரியன் பெருங்கண்ணனார் | " | " | " | சி. கு. |
| 22 | 22 | ஆடுதுறை மாசாத்தனார் | " | " | 352 | கு. |
| 23 | 23 | ஆதிமந்தி | " | " | 373 | " |
| 24 | 24 | ஆமூர்க் கவுதமன் சாதேவனார் | " | " | 393 | " |
| 25 | 25 | ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக்கண்ணத்தனார் | " | " | 402 | சி. கு |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 26 | 26 | ஆரியவரசர் யாழ்பிரமதத்தனார் | ஆசிரியர் குழு | 1 | 421 | சி. கு. |
| 27 | 27 | ஆலங்குடி வங்கனார் | ,, | ,, | 441 | கு. |
| 28 | 28 | ஆலத்தூர் கிழார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 29 | 29 | ஆலம்பேரி சாத்தனார் | ,, | ,, | ,, | கு. |
| 30 | 30 | ஆலியார் | ,, | ,, | 444 | ,, |
| 31 | 31 | ஆவூர்க் காவிதிகள் சாதேவனார் | ,, | ,, | 453 | ,, |
| 32 | 32 | ஆவூர் கிழார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 33 | 33 | ஆவூர் கிழார் மகனார் கண்ணனார் | ,, | ,, | ,, | ,, |
| 34 | 34 | ஆவூர் கௌதமன் சாதேவன் | ,, | ,, | ,, | பா. |
| 35 | 35 | ஆவூர் மூலங்கிழார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 36 | 36 | ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச்சாத்தனார் | ,, | ,, | ,, | ,, |
| 37 | 37 | இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் | ,, | ,, | 537 | கு. |
| 38 | 38 | இடைக்காடனார் | ,, | ,, | ,, | க. |
| 39 | 39 | இடைக்குன்றூர் கிழார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 40 | 40 | இடையன் சேந்தங் கொற்றனார் | ,, | ,, | ,, | ,, |
| 41 | 41 | இடையன் நெடுங்கீரனார் | ,, | ,, | ,, | ,, |
| 42 | 42 | இம்மென்கீரனார் | ,, | 2 | 4 | கு. |
| 43 | 43 | இரணிய முட்டத்துப் பெருங்கௌசிகனார் | ,, | ,, | 42 | ,, |
| 44 | 44 | இருங்கோன் ஒல்லை ஆயன் செங்கண்ணனார் | ,, | ,, | 79 | ,, |
| 45 | 45 | இருந்தையூர்க் கொற்றன் புலவன் | ,, | ,, | 80 | சி.கு.+பா. |
| 46 | 46 | இரும்பிடர்த்தலையார் | ,, | ,, | 82 | கு. |
| 47 | 47 | இளங்கீரந்தையார் | ,, | ,, | 138-139 | ,, |
| 48 | 48 | இளங்கீரனார் | ,, | ,, | 139 | ,, |
| 49 | 49 | இளந்தேவனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 50 | 50 | இளநாகனார் | ,, | ,, | 140 | ,, |
| 51 | 51 | இளம்புல்லூர்க் காவிதி | ,, | ,, | 140-141 | கு. |
| 52 | 52 | இளம்பூதனார் | ,, | ,, | 141 | ,, |
| 53 | 53 | இளம்பெருவழுதியார் | ,, | ,, | ,, | ,, |
| 54 | 54 | இளம்போதியார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 55 | 55 | இளவெயினனார் | ,, | ,, | 142 | ,, |
| 56 | 56 | இறங்குடிக் குன்றநாடன் | ,, | ,, | 148 | ,, |

| தொடர் எண் | பகுதி எண் | பொருள் | ஆசிரியர் | தொகுதி எண் | பக்கம் (அல்) பக்கங்கள் | தன்மை |
|---|---|---|---|---|---|---|
| 57 | 57 | இறையனார் | ஆசிரியர் குழு | 2 | 152 | கு. |
| 58 | 58 | இளிசந்த நாகனார் | ,, | ,, | 176 | சி. கு. |
| 59 | 59 | ஈழத்துப் பூதன் தேவனார் (ஈழம்) | ,, | ,, | 200 | ,, |
| 60 | 60 | ஈழத்துப் பூதன் தேவனார் (மதுரை) | ,, | ,, | ,, | ,, |
| 61 | 61 | உக்கிரப் பெருவழுதி | ,, | ,, | 206 | கு. |
| 62 | 62 | உகாய்க்குடி கிழார் | ,, | ,, | 207 | சி. கு. |
| 63 | 63 | உம்பற்காட்டு இளங்கண்ணனார் | ,, | ,, | 272 | ,, |
| 64 | 64 | உமட்டூர்க்கிழார் மகனார் பரங்கொற்றனார் | ,, | ,, | ,, | ,, |
| 65 | 65 | உருத்திரனார் | ,, | ,, | 305 | ,, |
| 66 | 66 | உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி | ,, | ,, | 312 | கு. |
| 67 | 67 | உரோடகத்துக் கந்தரத்தனார் | ,, | ,, | 318 | ,, |
| 68 | 68 | உலோச்சனார் | ,, | ,, | 362 | ,, |
| 69 | 69 | உவர்க்கண்ணூர்ப் புல்லங்கீரனார் | ,, | ,, | ,, | ,, |
| 70 | 70 | உமுதினேம்புலவர் | ,, | ,, | 364 | சி. கு. |
| 71 | 71 | உறையனார் | ,, | ,, | 428 | ,, |
| 72 | 72 | உறையூர் இளம்பொன் வாணிகனார் | ,, | ,, | 429 | ,, |
| 73 | 73 | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் | ,, | ,, | ,, | கு. |
| 74 | 74 | உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 75 | 75 | உறையூர்ச் சல்லியன் குமாரனார் | ,, | ,, | ,, | ,, |
| 76 | 76 | உறையூர்ச் சிறுகந்தனார் | ,, | ,, | ,, | ,, |
| 77 | 77 | உறையூர்ப் பல்காயனார் | ,, | ,, | ,, | கு. |
| 78 | 78 | உறையூர் மருத்துவன் தாமோதரனார் | ,, | ,, | ,, | ,, |
| 79 | 79 | உறையூர் முதுகண்ணன் சாத்தனார் | ,, | ,, | ,, | ,, |
| 80 | 80 | உறையூர் முதுகூத்தனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 81 | 81 | உறையூர் முதுகொற்றனார் | ,, | ,, | ,, | ,, |
| 82 | 82 | ஊட்டியார் | ,, | ,, | 444 | கு. |
| 83 | 83 | ஊன்பித்தையார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 84 | 84 | ஊன்பொதி பசுங்குடையார் | ,, | ,, | 459 | கு. |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 85 | 85 | எயிற்றியனார் | ஆசிரியர் குழு | 2 | 539 | சி. கு. |
| 86 | 86 | எயினந்தையார் | ,, | ,, | ,, | கு. |
| 87 | 87 | எருக்காட்டூர்த்தாயங்கண்ணனார் | ,, | ,, | 549 | ,, |
| 88 | 88 | எருமை வெளியனார் | ,, | ,, | 551 | சி. கு. |
| 89 | 89 | எருமை வெளியனார் மகனார் கடலனார் | ,, | ,, | ,, | ,, |
| 90 | 90 | எழூஉப்பன்றி நாகன் குமரனார் | ,, | ,, | 578 | ,, |
| 91 | 91 | ஐயாதிச் சிறுவெண்தேரையார் | ,, | ,, | 632 | கு. |
| 92 | 92 | ஐயூர் முடவனார் | ,, | ,, | ,, | ,, |
| 93 | 93 | ஐயூர் மூலங்கிழார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 94 | 94 | ஒக்கூர் மாசாத்தனார் | ,, | ,, | 654 | கு. |
| 95 | 95 | ஒக்கூர் மாசாத்தியார் | ,, | ,, | ,, | ,, |
| 96 | 96 | ஒருசிறைப் பெரியனார் | ,, | ,, | 676 | ,, |
| 97 | 97 | ஒரூஉத்தனார் | ,, | ,, | 678 | சி. கு. |
| 98 | 98 | ஒரோடோக்கத்துக் கந்தரத்தனார் | ,, | ,, | ,, | கு. |
| 99 | 99 | ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் | ,, | ,, | ,, | ,, |
| 100 | 100 | ஓதஞானி | ,, | ,, | 720 | ,, |
| 101 | 101 | ஓதலாந்தையார் | ,, | ,, | ,, | ,, |
| 102 | 102 | ஓரம்போகியார் | ,, | ,, | 725 | ,, |
| 103 | 103 | ஓரிற்பிச்சையார் | ,, | ,, | 726 | சி. கு. |
| 104 | 104 | ஓரேருழவர் | ,, | ,, | ,, | கு. |
| 105 | 105 | ஔவையார் | வரதராசன், மு. | ,, | 754 | க. |
| 106 | 106 | கங்குல் வெள்ளத்தார் | ஆசிரியர் குழு | 3 | 6 | கு. |
| 107 | 107 | கச்சிப்பேட்டு இளந்தச்சனார் | ,, | ,, | 11 | ,, |
| 108 | 108 | கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 109 | 109 | கச்சிப்பேட்டு நன்னாகையார் | ,, | ,, | ,, | கு. |
| 110 | 110 | கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 111 | 111 | கடம்பனூர்ச் சாண்டிலியனார் | ,, | ,, | 47 | சி. கு. |
| 112 | 112 | கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி | ,, | ,, | 66 | கு. |
| 113 | 113 | கடியலூர் உருத்திரங்கண்ணனார் | ,, | ,, | 86 | க. |
| 114 | 114 | கடுகு பெருந்தேவனார் | ,, | ,, | 88 | சி. கு. |
| 115 | 115 | கடுந்தொடைக் காவினார் | ,, | ,, | ,, | ,, |

| தொடர் எண் | பகுதி எண் | பொருள் | ஆசிரியர் | தொகுதி எண் | பக்கம் (அல்) பக்கங்கள் | தன்மை |
|---|---|---|---|---|---|---|
| 116 | 116 | கடுந்தோட் கரவீரனார் | ஆசிரியர் குழு | 3 | ,, | சி. கு. |
| 117 | 117 | கடுவன் இளமள்ளனார் | ,, | ,, | 89 | ,, |
| 118 | 118 | கடுவன் இளவெயினனார் | ,, | ,, | ,, | ,, |
| 119 | 119 | கடுவன் மள்ளனார் | ,, | ,, | ,, | ,, |
| 120 | 120 | கண்ணகனார் | ,, | ,, | 111 | ,, |
| 121 | 121 | கண்ணகாரன் கொற்றனார் | ,, | ,, | ,, | ,, |
| 122 | 122 | கண்ணங்கொற்றனார் | ,, | ,, | ,, | ,, |
| 123 | 123 | கண்ணம்பாளனார் | ,, | ,, | 112 | ,, |
| 124 | 124 | கண்ணம்புல்லனார் | ,, | ,, | ,, | ,, |
| 125 | 125 | கண்ணனார் | ,, | ,, | ,, | கு. |
| 126 | 126 | கணக்காயன் தத்தனார் | ,, | ,, | 121 | ,, |
| 127 | 127 | கணக்காயனார் | ,, | ,, | ,, | ,, |
| 128 | 128 | கணியன் பூங்குன்றனார் | ,, | ,, | 153 | ,, |
| 129 | 129 | கந்தக்கண்ணனார் | ,, | ,, | 187 | ,, |
| 130 | 130 | கந்தரத்தனார் | ,, | ,, | 194 | சி. கு. |
| 131 | 131 | கபிலர் | ,, | ,, | 212-213 | க. |
| 132 | 132 | கயத்தூர் கிழார் | ,, | ,, | 233 | சி. கு. |
| 133 | 133 | கயமனார் | ,, | ,, | ,, | கு. |
| 134 | 134 | கருங்குழலாதனார் | ,, | ,, | 254 | சி. கு. |
| 135 | 135 | கரும்பிள்ளைப் பூதனார் | ,, | ,, | 265 | கு. |
| 136 | 136 | கருவூர் ஓதஞானி | ,, | ,, | 282 | சி.கு.+பா. |
| 137 | 137 | கருவூர்க் கதப்பிள்ளை | ,, | ,, | ,, | கு. |
| 138 | 138 | கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார் | ,, | ,, | ,, | ,, |
| 139 | 139 | கருவூர் கலிங்கத்தனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 140 | 140 | கருவூர்க்கிழார் | ,, | ,, | ,, | ,, |
| 141 | 141 | கருவூர்க் கோசனார் | ,, | ,, | ,, | ,, |
| 142 | 142 | கருவூர்ச் சேரமான் சாத்தனார் | ,, | ,, | ,, | ,, |
| 143 | 143 | கருவூர் நன்மார்பனார் | ,, | ,, | ,, | ,, |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 144 | 144 | கருவூர்ப் பவுத்திரனார் | ஆசிரியர் குழு | 3 | 282 | சி. கு. |
| 145 | 145 | கருவூர்ப் பூதஞ்சாத்தனார் | ,, | ,, | ,, | கு. |
| 146 | 146 | கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் | ,, | ,, | ,, | ,, |
| 147 | 147 | கல்பொருசிறுநுரையார் | ,, | ,, | 292 | சி. கு. |
| 148 | 148 | கல்லாடர் | ,, | ,, | ,, | கு. |
| 149 | 149 | கவைமகனார் | ,, | ,, | 367 | ,, |
| 150 | 150 | கழாத்தலையார் | ,, | ,, | 369 | ,, |
| 151 | 151 | கழார்க்கீரன் எயிற்றியார் | ,, | ,, | ,, | ,, |
| 152 | 152 | கழைதின் யானையார் | ,, | ,, | 374 | சி. கு. |
| 153 | 153 | கள்ளிக்குடிப் பூதம்புல்லனார் | ,, | ,, | 375 | கு. |
| 154 | 154 | கள்ளில் ஆத்திரையனார் | ,, | ,, | ,, | ,, |
| 155 | 155 | காக்கை பாடினியார் நச்செள்ளையார் | ,, | ,, | 418 | ,, |
| 156 | 156 | காசிபன் கீரனார் | ,, | ,, | 433 | ,, |
| 157 | 157 | காப்பியஞ் சேந்தனார் | ,, | ,, | 505 | ,, |
| 158 | 158 | காப்பியாற்றுக் காப்பியனார் | ,, | ,, | 507 | ,, |
| 159 | 159 | காமக்கணிப் பசலையார் | ,, | ,, | 512 | சி. கு. |
| 160 | 160 | காமஞ்சேர் குளத்தார் | ,, | ,, | ,, | ,, |
| 161 | 161 | காலெறி கடிகையார் | ,, | ,, | 611 | கு. |
| 162 | 162 | காவட்டனார் | ,, | ,, | ,, | ,, |
| 163 | 163 | காவல் முல்லைப் பூதனார் | ,, | ,, | 612 | ,, |
| 164 | 164 | காவற்பெண்டு | ,, | ,, | ,, | ,, |
| 165 | 165 | காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார் | ,, | ,, | 615 | சி.கு. |
| 166 | 166 | காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் | ,, | ,, | ,, | கு. |
| 167 | 167 | காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 168 | 168 | காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தக்கண்ணனார் | ,, | ,, | ,, | ,, |
| 169 | 169 | கிடங்கில் காவிதி கீரங்கண்ணனார் | ,, | ,, | 659 | ,, |
| 170 | 170 | கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார் | ,, | ,, | ,, | கு. |
| 171 | 171 | கிடங்கில் குலபதி நக்கண்ணனார் | ,, | ,, | ,, | ,, |
| 172 | 172 | கிள்ளிமங்கலங்கிழார் | ,, | ,, | 710 | ,, |
| 173 | 173 | கிள்ளிமங்கலங்கிழார் மகனார் சேரகோவனார் | ,, | ,, | ,, | ,, |
| 174 | 174 | கீரங்கீரனார் | ,, | ,, | 720 | சி. கு. |

| தொடர் எண் | பகுதி எண் | பொருள் | ஆசிரியர் | தொகுதி எண் | பக்கம் (அல்) பக்கங்கள் | தன்மை |
|---|---|---|---|---|---|---|
| 175 | 175 | குட்டுவன் கண்ணனார் | ஆசிரியர் குழு | 3 | 742 | கு. |
| 176 | 176 | குட்டுவன் கீரனார் | ,, | ,, | ,, | ,, |
| 177 | 177 | குடபுலவியனார் | ,, | ,, | 743 | ,, |
| 178 | 178 | குடவாயில் கீரத்தனார் | ,, | ,, | 748 | ,, |
| 179 | 179 | குடவாயில் கீரனக்கனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 180 | 180 | குடவாயில் நல்லாதனார் | ,, | ,, | ,, | ,, |
| 181 | 181 | குண்டுகண் பாலியாதனார் | ,, | 4 | 15 | கு. |
| 182 | 182 | குதிரைத் தறியனார் | ,, | ,, | 23 | சி. கு. |
| 183 | 183 | குப்பைக் கோழியார் | ,, | ,, | 34 | கு. |
| 184 | 184 | குமட்டூர்க் கண்ணனார் | ,, | ,, | 38 | ,, |
| 185 | 185 | குமுழி ஞாழலார் நப்பசலையார் | ,, | ,, | 46 | சி. கு. |
| 186 | 186 | குழல் தத்தனார் | ,, | ,, | 106 | ,, |
| 187 | 187 | குளம்பனார் | ,, | ,, | 110 | ,, |
| 188 | 188 | குளம்பாதாயனார் | ,, | ,, | ,, | ,, |
| 189 | 189 | குறமகள் இளவெயினி | ,, | ,, | 132 | கு. |
| 190 | 190 | குறமகள் குறிஎயினி | ,, | ,, | ,, | ,, |
| 191 | 191 | குறியிறையார் | ,, | ,, | 133 | ,, |
| 192 | 192 | குறுங்கீரனார் | ,, | ,, | 135 | சி. கு. |
| 193 | 193 | குறுங்குடி மருதனார் | ,, | ,, | ,, | ,, |
| 194 | 194 | குறுங்கோழியூர் கிழார் | ,, | ,, | ,, | கு. |
| 195 | 195 | குறுவழுதியார் | ,, | ,, | 136 | சி. கு. |
| 196 | 196 | குன்றம் பூதனார் | ,, | ,, | 141 | கு. |
| 197 | 197 | குன்றியனார் | ,, | ,, | 142 | சி. கு. |
| 198 | 198 | குன்றூர்கிழார் மகனார் | ,, | ,, | ,, | ,, |
| 199 | 199 | குன்றூர்கிழார் மகனார் கண்ணத்தனார் | ,, | ,, | ,, | ,, |
| 200 | 200 | கூகைக்கோழியார் | ,, | ,, | 150 | கு. |
| 201 | 201 | கூடலூர் கிழார் | ,, | ,, | 167 | ,, |
| 202 | 202 | கூடலூர்ப் பல்கண்ணனார் | ,, | ,, | ,, | சி. கு. |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 203 | 203 | கூவல் மைந்தனர் | ஆசிரியர் குழு | 4 | 186 | கு. |
| 204 | 204 | கூழிக்கொற்றனர் | ,, | ,, | 188 | சி. கு. |
| 205 | 205 | கூற்றங்குமரனர் | ,, | ,, | 189 | ,, |
| 206 | 206 | கேசவனர் | ,, | ,, | 197 | கு. |
| 207 | 207 | கொட்டம்பலவனர் | ,, | ,, | 230 | கு. |
| 208 | 208 | கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தன் | ,, | ,, | 238 | ,, |
| 209 | 209 | கொடியூர் கிழார் மகனர் நெய்தல் தத்தனர் | ,, | ,, | 238-239 | ,, |
| 210 | 210 | கொல்லன் அழிசி | ,, | ,, | 259 | ,, |
| 211 | 211 | கொல்லிக் கண்ணனர் | ,, | ,, | ,, | சி. கு. |
| 212 | 212 | கொள்ளம்பக்கனர் | ,, | ,, | 267 | ,, |
| 213 | 213 | கொற்றங்கொற்றனர் | ,, | ,, | 268 | கு. |
| 214 | 214 | கொற்றனர் | ,, | ,, | ,, | ,, |
| 215 | 215 | கோக்குள முற்றனர் | ,, | ,, | 273 | க. |
| 216 | 216 | கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான் | ,, | ,, | 280 | கு. |
| 217 | 217 | கோட்டியூர் நல்லாந்தையார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 218 | 218 | கோடை பாடிய பெரும்பூதனர் | ,, | ,, | 286 | கு. |
| 219 | 219 | கோண்மா நெடுங்கோட்டனர் | ,, | ,, | 287 | சி. கு. |
| 220 | 220 | கோதமனர் | ,, | ,, | 289 | கு. |
| 221 | 221 | கோப்பெருஞ்சோழன் | ,, | ,, | 296 | ,, |
| 222 | 222 | கோவதத்தர் | ,, | ,, | 333 | சி. கு. |
| 223 | 223 | கோவூர் கிழார் | ,, | ,, | 335 | க. |
| 224 | 224 | கோவேங்கைப் பெருங்கதழ்வர் | ,, | ,, | ,, | சி. கு. |
| 225 | 225 | கோழிக் கொற்றனர் | ,, | ,, | 337 | ,, |
| 226 | 226 | கோளியூர்கிழார் மகனர் செழியனர் | ,, | ,, | 348 | ,, |
| 227 | 227 | கோனட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனர் | ,, | ,, | ,, | கு. |
| 228 | 228 | சங்க வருணரெனும் நாகரியர் | ,, | ,, | 365 | ,, |
| 229 | 229 | சத்தி நாதனர் | ,, | ,, | 408 | சி. கு. |
| 230 | 230 | சல்லியங்குமரனர் | ,, | ,, | 518 | கு. |
| 231 | 231 | சாகலாசனர் | ,, | ,, | 542 | ,, |
| 232 | 232 | சாத்தனர் | ,, | ,, | 561 | ,, |
| 233 | 233 | சாத்தந்தையார் | ,, | ,, | ,, | ,, |

| தொடர் எண் | பகுதி எண் | பொருள் | ஆசிரியர் | தொகுதி எண் | பக்கம் (அல்) பக்கங்கள் | தன்மை |
|---|---|---|---|---|---|---|
| 234 | 234 | சிறுமோலிகனார் | ஆசிரியர் குழு | 4 | 761 | சி. கு. |
| 235 | 235 | சிறுவெண்தேரையார் | ,, | ,, | ,, | ,, |
| 236 | 236 | சிறைக்குடி ஆந்தையார் | ,, | ,, | ,, | கு. |
| 237 | 237 | சீத்தலைச்சாத்தனார் | ,, | 5 | 7-8 | க. |
| 238 | 238 | செங்கண்ணனார் | ,, | ,, | 151 | கு. |
| 239 | 239 | செம்பியனார் | ,, | ,, | 168 | ,, |
| 240 | 240 | செம்புலப் பெயல்நீரார் | ,, | ,, | 169 | ,, |
| 241 | 241 | செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தனார் | ,, | ,, | 178 | ,, |
| 242 | 242 | செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார் | ,, | ,, | 180 | ,, |
| 243 | 243 | செல்லூர்க் கொற்றனார் | ,, | ,, | 186 | சி. கு. |
| 244 | 244 | செல்லூர்க் கோசிகன் கண்ணனார் | ,, | ,, | ,, | கு. |
| 245 | 245 | செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார் | ,, | ,, | ,, | ,, |
| 246 | 246 | சேந்தங்கண்ணனார் | ,, | ,, | 208 | ,, |
| 247 | 247 | சேந்தம் பூதனார் | ,, | ,, | ,, | ,, |
| 248 | 248 | சேந்தன் கீரனார் | ,, | ,, | ,, | சி. கு. |
| 249 | 249 | சேரமான் இளங்குட்டுவன் | ,, | ,, | 211 | ,, |
| 250 | 250 | சேரமான் கணைக்காலிரும்பொறை | ,, | ,, | ,, | கு. |
| 251 | 251 | சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை | ,, | ,, | ,, | ,, |
| 252 | 252 | சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ | ,, | ,, | 212 | ,, |
| 253 | 253 | சேரமானெந்தை | ,, | ,, | ,, | சி. கு. |
| 254 | 254 | சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் | ,, | ,, | 258-259 | கு. |
| 255 | 255 | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் | ,, | ,, | 278 | ,, |
| 256 | 256 | சோழன் நல்லுருத்திரன் | ,, | ,, | ,, | ,, |
| 257 | 257 | சோழன் நலங்கிள்ளி | ,, | ,, | ,, | ,, |
| 258 | 258 | தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் | ,, | ,, | 409 | ,, |
| 259 | 259 | தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் | ,, | ,, | ,, | சி.கு.+பா. |
| 260 | 260 | தங்கால் பொற்கொல்லனார் | ,, | ,, | 409-410 | கு.+பா. |
| 261 | 261 | தண்காற்பூட் கொல்லனார் | ,, | ,, | 440 | கு. |

254. Eggs — முட்டைகள்
255. Fried egg — பொரி
256. Poached eggs — அவித்த முட்டைகள்
257. Drink — குடிக்கிறது
258. Liquor — சாராயம்
259. Tea — தேயிலை
260. Coffee — காப்பிக்கொட்டை
261. Sherbet — சற்பட்டு
262. Lemanade — சர்க்கரையு எலுமிச்சம் பழமுசாறுந் தண்ணியுங் கலந்த பானம்
263. Punch — பொஞ்சு
264. Wine — ஒயின்சாருயம்
266. Madeira — மருதரு சாராயம்
266. Claret — கிளாரட்டி சாராயம்
267. Beer — பீர் சாராயம்
268. Brandy — பிராந்திசாராயம்
269. Arrack — ருக்கிசாராயம்
270. Of the Apparel — உடுப்புகளுடையது
271. Clothes, dress — உடுப்பு
272. Suit of Clothes — ஒரு திஸ்து உடுப்பு
273. Banian — உள்ளரைச் சொக்காய்
274. Shirt — கம்மிசு
275. Long dress — நிசார் கால் சட்டை
276. Pantaloons — நிகள கால்சட்டை
277. Breeches — குள்ளக் கால் சட்டை
278. Short dress, Short drawers — உள்ளறைக் கால் சட்டை
279. Waist coat — வாசுகோட்
280. Jacket — சாக்கட்டு - மேல் அரைச்சட்டை
281. Neck cloth — கழுத்து குட்டை
282. Sleeves — சட்டைக்கை
283. Pocket — சட்டை - சாக்கு
284. Coat — மேல்சட்டை
285. Hunting—drefs — வேட்டையாடப் போகும்போது போடும் உடுப்பு.
286. Mourning cloths — துக்கவுடுப்பு
287. Buttons — பொத்தான்
288. Cloth — புடைவை
289. Long cloth — முழப்புடையவை
290. Stockings — மேசோடு
291. Cotton — பஞ்சு
292. Thread — நூலிழை
293. Silk — பட்டு

294. Vilvet — சூரியகாந்திப்பட்டு
295. Cavas — ரெட்டுப்பிடவை
296. Stox cloth — மெழுகுச்சீலை
297. Salampore — சிலம்பிறி
298. Palampore — பலம்போற்
299. Gingham — கிண்டன்
300. Shoes — செருப்பு
301. Boots — பூட்சு
302. Spurs — பூட்டுசு முள்ளு
303. Shoe Buckles — செருப்பு பொக்கிளஸ்
304. Bell Bukles — அரைக்கால் சட்டை
305. Sandals — பாதக்குறடு
306. Slipper — வைச்சார்
307. Cap — குல்லா
308. Hat — தொப்பி
309. Wig — கள்ளமயிர்
310. Curl — சுருட்டுமயிர்
311. Womens clothes — ஸ்திரிகளின் வுடுப்பு
312. Gown — அங்கி
313. Petticoat — பாவாடை
314. Jacket — ரவிக்கை, stays.
315. Shift — பெண்களின் கம்மிசு
316. Tucker — மார்பு மூடுகிற துணி
317. Bonnet — பெண்கள் தொப்பி
318. Ribbon — பட்டுநாடா
319. Hand kerchief — லேஞ்சுகுட்டை
320. White hand kerchief — வெள்ளைகுட்டை
321. Packet hand kerchief — சாக்கிலே வைக்கிறகுட்டை
322. Gloves — கைக்குப் போடுகிற கோடு
323. Frock — சின்ன அங்கி
324. Damasth — பூ பட்டு
325. Chintz — சிட்டி
326. Stain — கறை
327. Iron mould — இப்புக்கறை
328. Jewel — உடைமை - நகை
329. Necklace — அட்டிகை
330. Bracelets — காப்பு - கங்கணம் - சரி
331. Ear Rings — கடுக்கன் - கம்மல்
332. Gold chain — பொன்சங்கிலி
333. Ring — மோதிரம்
334. Fan — விசிறி
335. Comb — சீப்பு
336. Brush — புறுசு

337. Musk — கஸ்தூரி
338. Civet — சவ்வாது
339. Lavender — வாசனைத்தண்ணீர்
340. Rose water — பன்னீர்
341. Soap — சவுக்காரம்
342. Pin — குண்டுசி
343. Needle — ஊசி
344. Thimble — அங்குஸ்தான்
345. Snuff Box — மூக்குத்தூள் பரணை
346. Snuff — மூக்குத்தூள்
347. Tobacco Pipe — சுங்கான்
348. Scissors — கத்திரிக்கோல்
349. Looking glass — கண்ணுடி
350. Umbrella — குடை
351. Watch — கடியாரம்
352. House — வீடு
353. Home — வீடு
354. Hut — குடிசை
355. Floor — தளவரிசை
356. Ground — மனை
357. Foundation — அஸ்திவாரம்
358. Wall — சுவர்
359. Brick wall — கல்சுவர்
360. Mud wall — மண் சுவர்
361. Plonks — பலகைகள்
362. Rope — கயிறு
363. Stone — கல்லு
364. Brick — செங்கல்
365. Chunam — குளிஞ்சம்-சுண்ணும்பு
366. Clay — களிமண்
367. Sand — மணல்
368. Tile — தட்டோடு
369. Joint — சிங்காவட்டம் - குறுக்குவிட்டம்
370. Roof — மேற்கூரை
371. Pillar — தூண்
372. Ladder — ஏணி
373. Entry — தெருநடை
374. Hall — கூடம்
375. Step — படி
376. Steps — படிகள்
377. Office — எழுதுகிறயிடம்
378. Cook room — சமயல் வீடு
379. Store room — கிடங்கு

380. Barn — களஞ்சியம்
381. Shop — கடை
382. Veranda — சறுக்காறு
383. Stable — குதிரைலாயம்
384. Straw — வைக்கோல்
385. Well — கிணறு
386. Necefsary — சலவாதியிடம்
387. Room — அறைவீடு
388. Yard — வீட்டின் முத்தம்
389. Backyard — பிழைக்கடை
390. Door — கதவு
391. Window — ஜெனல்
392. Lock — பூட்டு
393. Bolt — தாப்பாள்
394. Key — சாவி
395. Badlock — மாங்காப்பூட்டு
396. Furniture — வீட்டுத் தட்டுமுட்டு
397. Box — பொட்டி - பரணை
398. Trunk — தோல்பொட்டி
399. Rat rap — எலிபொன்
400. Hearth — அடுப்பு
401. Hoven — ரொட்டி சுடுகிற அடுப்பு
402. Ladle — அகப்பை
403. Kettle — கரகம்
404. Pot — பானை
405. Pan — சட்டி
406. Grid Iron — இருப்பு அடுப்பு - கறிசுடுகிற இரும்பு
407. Twine — சனப்பிரி
408. Knot — முடிச்சு
409. Nail — ஆணி
410. Towel — துவாலை
411. Napkin — பெரியதுவாலை
412. Table cloth — மேசை துப்பட்டி
413. Tub — பிப்பாய்—தொட்டி
414. Winnaw — முறம்
415. Basket — கூடை
416. Scales — தராசுதட்டு
417. Balance — தராசு
418. Weight — படிக்கல்
419. Jug—Jar — சாடி
420. Lamp — விளக்கு
421. Lantern — செவிர்லாந்தர்

422. Globe — குளோப்லாந்தர்
423. Wall lantern — செவிர்லாந்தர்
424. Shade — ஷேடு
425. Shade stand — ஷேட்டுத்தண்டு
426. Candle — வத்திவிளக்கு
427. Candle stick — வத்தித்தண்டு, குத்துவிளக்குத் தண்டு
428. Wax candle — மெழுக்குவத்தி
429. Wick — வத்தி, திரி
430. Broom — துடைப்பம்
431. Broom stick — துடைப்பக்கட்டு
432. Scissors — கத்திரிக்கோல்
433. Looking glass — கண்ணடி
434. Bench — விசுப்பலகை
435. Stool — மணை
436. Carpet—Tapestry — சமுக்காளம்
437. Mat — பாய்
438. Bed, Bedding — மெத்தை
439. Cot, Bedstead — கட்டில்
440. Pillow — தலைகாணி—திண்டு
441. Pillow Cover — தலைகாணி உறை
442. Sheet — துப்பட்டி
443. Couch — கவுச்சுக்கட்டில்
444. Chair — நாற்காலி
445. Champer pot — மூத்திரப்பீரகான்
446. Picture — படம்
447. Table — மேசை
448. Desk — சாய்ப்பான மேசை
449. Comb — சிப்பு
450. Vile — சிசா
451. Pason — தட்டுப்பாத்திரம் கூசா
452. Cup — கோப்பை
453. Saucer — தசிஞா அடிக்கோப்பை
454. Sneaker — பெரிய கோப்பை
455. Bowl — போல்
456. Teapot — தேத்தண்ணீர் கரகம்
457. Plate — பிங்கான்
458. Dish — நீண்ட தட்டைப் பிங்கான்
459. Knife — கத்தி
460. Fork — முள்ளு
461. Spoon — கரண்டி
462. Salt cellar — உப்பு சல்லர்
463. Mustard Bottle — கடுகு புட்டி

464. Glass — கிளாசு
465. Tumbler — தம்பிளர்
466. Water glass — தண்ணி குடிக்கிற கிளாசு
467. Bottle — புட்டி
468. Provision தீனி சம்பராங்கள் சின்ன புட்டி களில் தினுசு வாரியாய் வைத் திருக்கின்ற விருத்தமான சட்டம்
469. Cork — புட்டியடைக்கிற சடை
470. Cork screw — சடைபிடுங்கிற இருப்பு வளையம்
471. Desk — சாய்ப்பு மேசை
472. Bureau — பீரோ—அறைக்குளப் பெட்டி
473. Of city — பட்டணத்தோடே சேர்ந்தது
474. City — பட்டணம்
475. Reins — கடிவாளவாம்
476. Bridle — கடிவாளம்
477. Horse shoe — லாடம்
478. Cart — மாட்டுவண்டி
479. Cart man — வண்டிக்காரன்
480. Church — கோவில் சபை
481. Haltar — பீடம்—மாடம் பலிபீடம்
482. Bell — மணி
483. Burying place — புதைக்கிற இடம்
484. Burning place — சுடுகிற இடம்
485. Grave — குழி
486. Coffin — சாவு பெட்டி
487. Bier — பாடை
488. Mass — பூசை
489. Litany — பிரார்த்தினை
490. Alms — பிட்சை
491. Bishop — பெரிய குரு
492. Clerk — உபதேசி
493. Greve - digger — குழிவெட்டி
494. Heathen — அக்கியானி
495. Bramin — பிராமணன்
496. Prayer — மந்திரம் - ஜெபம்
497. Blessing — ஆசிர்வதிப்பு, ஆசிர்வாதம்
498. Glory — மோட்சம்
499. Hell — நரகம்
500. Sin — பாவம்
501. Devil — பிசாசு, பேய்
502. Feast — திருநாள்
503. New year — புது வருஷம்

504. Christmas — கர்த்தாவின் பண்டிகை, முருஜா பண்டிகை
505. Lent — தபசு நாள்-உயிர்த்தெழுந்த நாள்
506. Account — கணக்கு
507. Account Current — கொடுக்கல் வாங்கல் கணக்கு
508. Arrear — நிலுவை
509. Auction — ஏலம்
510. Bag — மூட்டை
511. Bale — கட்டு
512. Bond — பத்திரம்
513. Broker — தரகரி
514. Bundle — கட்டு
515. Business — வேலை
516. Charge — சிலவு
517. Cheap — நயம்
518. Dealer — வர்த்தகன்
519. Debtor — கடன்காரன்
520. Town — பட்டணம்
521. Country — நாடு - ஊர்
522. Gate — கெவுனி வாசல்
523. Street — தெருவு
524. Channel — தண்ணீர் கால்
525. Road — வழி
526. Market — கடை
527. Fort — கோட்டை
528. Rampart — கொத்தளம்
529. Barrack — இராணுக்கள் சாலை
530. Justice — ஞாயம் விசாரிக்கிற சாவடி
531. Petty Court — சின்ன கோட்டு
532. Supreme Court — பெரியக்கோட்டு
533. Jail — சிறைச்சாலை - கிடங்கு
534. Debtor Jail — கடன்காரரை யடைக்கிற கிடங்கு
535. Grant Jail — பெரிய கோட்டுக் கிடங்கு
536. Hospital — ஆசுபத்திரி-நோயாளிகள் விடுதி, வீடு
537. Tavern — சாராயக்கடை
538. Punch house — பொஞ்சிக்கடை
539. shop — கள்ளுக்கடை
540. Poor house — கஞ்சித்தொட்டி - அன்னசத்திரம்
541. Bridge — வாராவதி
542. Boat — படவு
543. Bank — திரவியச்சாலை
544. Bank note — பணப் பிறிதிக் கட்டு

545. Custom house — தீர்வை வாங்கிறயிடம்—மேட்டு
546. Duty custom — தீர்வை
547. Tax — வரி
548. Quit rent — குப்பை வரி
549. Assessment — வீட்டு வரி
550. Post office — தபாலாபிஸ்
551. Arsenal — ஆயுதசாலை
552. Mint — தங்கசாலை
553. Boundary — குண்டுசாலை
554. Inhabitant — குடித்தனக்காரன்
555. Native — உள்ளூரான்
556. Foreigner — அசலூரான்
557. Stranger — பிறத்தியான்
558. Governor — ஊராளுகிற துரை
559. Secretary — பெரிய கிராணி
560. Counsellor — ஆலோசனைக்காரன்
561. Town major — கோட்டை சேர்வைக்காரன்
562. Contractor — குத்தகைக்காரன்
563. Collector — கும்பினி தண்டல்காரன்
564. Examiner — ஒத்திடுகிறவன்
565. Writer — எழுதுகிறவன்
566. Sea customer — கப்பல்மேல் வருகிற சரக்குகளை தீர்வை போடுகிறவன்
567. Land customer — கரைவழி சரக்குகளுக்கு தீர்வை போடுகிறவன்
568. Paymaster — சம்பளங் கொடுக்கிறவன்
569. Judge — ஞாயாதிபதி
570. Lawer — ஞாய சாஸ்திரி—ஓரவழக்கு பேசுகிறவன்
571. Interpreter — ஒரு பாஷையிலிருந்து மறு பாஷையில் விடுவிக்கிற துபாசி
572. Painter — வர்ணக்காரன்
573. Book binder — புத்தகங் கட்டுகிறவன்
574. Hawker — அமாந்தவர்தகன்
575. Workman — தொழிலாளி
576. Goldsmith — தட்டான்
577. Ironsmith — கருமான்
578. Gilter — பொன்முலாம் பூசு...
579. Plater — வெள்ளி ...
580. Engraver — சித்திரவெட்டு வேலைக்காரன்
581. Barber — அம்பட்டன்
582. Watch maker — கெடியாரம் பண்ணுகிறவன்
583. Auctioner — ஏலம் போடுகிறவன்

584. Weaver — சேணியன்
585. Tailor — தையற்காரர்
586. Baker — ரொட்டிக்காரன்
587. Butcher — ஆடுமாடு அடிக்கிறவன்
588. Fisher man — மீன் பிடிக்கிறவன்
589. Oil monger — வாணியன்
590. Water man — தண்ணிக்காரன் - பங்காளி
591. Washer man — வண்ணான்
592. Iron-man — இஸ்திரிக்காரன்
593. Servant — வேலைக்காரன்
594. Cook — குசினிக்காரன்
595. Cookmate — குசினிமேட்டி
596. Butler — பொட்ளர்
597. Dubash — துபாசி
598. House breaker — கன்னமிடுகிறவன்
599. Liar — பொய்யன்
600. Perjurer — பொய்யாணையிடுகிறவன்
601. False witness — பொய்சாட்சி
602. Murderer — கொலை பாதகன்
603. Pimp — சங்கமாங்கி
604. Ware — தேவடியாள்—Whore
605. Wore longer — வேசிக் கள்ளன்
606. Gallows, Gibbets — தூக்குமரம்
607. Grammar — இலக்கணம்
608. Story — சரித்திரம்
609. Fencing — சிலம்பம்
610. Dancing — கூத்து
611. Drawing — படமெழுதுகிறது
612. Writing — கையெழுத்து
613. Painting — அச்செழுத்து
614. Picture — படம்
615. Print — அச்சு
616. Claur — வர்ணம்
617. White — வெள்ளை
618. Red — சிகப்பு
619. Blue — நீலம்
620. Yellow — மஞ்சள்
621. Green — பச்சை
622. Pale — மக்கல்
623. Gray — ஊதா - மேக வர்ணம்
624. Purple — ஊதா
625. School — பள்ளிக்கூடம்
626. College — சாஸ்திர பள்ளிக்கூடம்

627. Learning — வித்தை - படிப்பு
628. Schoolmaster — வாத்தியார்
629. Monitor, usher — சட்டாம்பிள்ளை
630. Scholar — சிஷன்
631. Form — வரிசை, மேல் பாடம்
632. Ink Bottle — இங்கி புட்டி
633. Sand box — மணல்புட்டி
634. Sealingwax — அரக்கு
635. Seal — முத்திரை
636. Wafer — வொய்பர்
637. Paper — கடுதாசி
638. Rule — கோடுகிழிக்கிற கொம்பு
639. Line — வரி, கோடு
640. Pen knife — இறவு சீவுகிற கத்தி
641. Pen -- சீவின இறகு
642. Quill — முழுயிறகு
643. Copy — சட்டம்-நகல்-காப்பி
644. Letter — எழுதின காகித்தம்
645. Direction — மேல்விலாசம்
646. Sign — கையெழுத்து
647. Book — புத்தகம்
648. Spelling Book —
649. Cliphering Book — கணக்கதிகாரம்
650. Page — ஏடு
651. Translation — பாஷையைத்திருப்புகிறது, மொழிபெயர்ப்பு
652. Language — பாஷை
653. Lesson — பாடம்
654. Punishment — தெண்டனை
655. Forfeit — அபராதம்
656. Rattan — பிரம்பு
657. Lash, stroke — அடி
658. Block head — முட்டாள்
659. Clever — கெட்டிக்காரன்
660. Box — பரணை
661. Case — உறை
662. Chain — கொலுசு
663. Wheel — சக்கரம்
664. Screw — திருகாணி
665. Hammer — சுத்தி
666. Scissors — கத்திரி — Scissors
667. Nail — ஆணி
668. File — அரம்

669. Axe — கோடாலி
670. Hatchet — கைக்கோடாலி
671. Gimlet — துரப்பணம் - Drill
672. Razor — அம்பட்ட கத்தி
673. Whelstone — சாணைக்கல்லு
674. Hook — தூண்டி
675. Coach — நாலுருளை ரதம்
676. Carriage — வாகனம் - சவாரி - நாற்சக்கர வண்டி
677. Harness — குதிரை முஸ்தீப்பு
678. Saddle — சீனி
679. Fright — கேள்வி
680. Income — வருத்து
681. Interest — வட்டி
682. Merchandise — வியாபாரம்—வர்த்தகம்
683. Merchant — வர்த்தகன்
684. Mortgage — குதுவை
685. Outstanding — வெளிபாக்கு
686. Partners — பங்காளி—கூட்டுவர்த்தகன்
687. Principal — முதற்பணம்
688. Retail — சில்லறை விக்கிறையம்
689. Muster — மாதரி
690. Security — ஜாமின்
691. Fruit — கனி
692. Ripe — பழம்
693. Unripe — காய்
694. Flower — பூ
695. Bud — மொக்கு, தளிர்
696. Leaves — இலைகள்
697. Garden — தோட்டம்
698. Grapes — கொடிமுந்திரிப்பழம்
699. Rose apple — சம்புராகப்பழம்
700. Pine apple — அன்னாசிப்பழம்
701. Orange — கிச்சிலிப்பழம், பொம்பிளிமாசுப் பழம்
702. Lemon — எலுமிச்சம்பழம்
703. Pome granate — மாதுளம்பழம்
704. Plantain — வாழைப்பழம்
705. Guava — கொய்யாப்பழம்
706. Mango — மாம்பழம்
707. Jack fruit — பலாப்பழம்
708. Sugar candy — கற்கண்டு
709. Sugarcane — கரும்பு

710. Beast — மிருகம்
711. Horse — குதிரை
712. Jackass — கோவேறு கழுதை, Mule
713. Ass — கழுதை
714. Mare — மாதவான்
715, Ox — ரிஷபம்
716. Cow — பசு
717. Calf — சேங்கண்
718. Bullock — எருது, மாடு
719. Bull — ரிஷபம்
720. Sheep — ஆடு
721. Lamb — ஆட்டுக்குட்டி
722. Kid — வெள்ளாட்டுக்குட்டி
723. Hag — பன்றி
724. Stag — மான் - Deer
725. Bear — கரடி
726. Lion — சிங்கம்
727. Tiger — புலி
728. Camel — ஒண்டை
729. Buffalo — எருமைக்கடா
730. Elephant — யானை
731. Jackal — நரி
732. Squirrel — அணிப்பிள்ளை
733. Mangoose — கிரிப்பிள்ளை
734. Rabbit — முசல் - Hare
735. Dog — நாய்
736. Puppy — நாய்க்குட்டி
737. Cat — பூனை
738. Monkey — குரங்கு
739. Rat — எலி
740. Bandicoat — பெருச்சாளி
741. Mouse — மூஞ்சூறு - சுண்டெலி
742. Bird — குருவி
743. Crow — காக்கை
744. Sparrow — அடைக்கலான் குருவி
745. Swallow — தகைவிலான் குருவி
746. Parrot — கிளிப்பிள்ளை
747. Braminy kite — ஆள்வார் - கெருடன்
748. Kite — பருந்து
749. Paddy Bird — கொக்கு
750. Peacock — மயில்
751. Peahen — பெண்மயில்
752. Partridge — கவுதாரி

753. Teal — கிளுவை
754. Snipe — உள்ளான்
755. Pigeon — புரு
756. Dove — புரு
757. Fowl — கோழி
758. Cock — சாவல்
759. Chicken — கோழிக்குஞ்சு
760. Turkey — வான்கோழி
761. Duck — வாத்து
762. Fish — மீன், வவ்வால்
763. Seer fish — வெள்ளருமீன்
764. Whitins whtng — கிழங்கான்
765. Salt fish — கருவாடு
766. Milk fish — தசுதும்பு
767. Mullet — மடவை
768. Crab — நண்டு
769. Prans — இரு
770. Oyster — ஆளி
771. Frog — தவளை
772. Turtle — ஆமை
773. Alligator — முதலை
774. Poison — விஷம்
775. Snake — பாம்பு
776. Coppra capel — நாகப்பாம்பு
777. Lizard — பல்லி
778. Spider — சிலந்தி
779. Scorpion — தேள்
780. Ant — எறும்பு
781. Dig — உண்ணி
782. Lause — பேன்
783. Nit — ஈரு
784. Bug — முட்டுப்பூச்சு
785. Fly — ஈ
786. Musquito, gnat — கொசு
787. Diamond — வச்சிரக்கல்
788. Emerald — பச்சை, வைடுரியம்
789. Carbungle — மாணிக்கம்
790. Coral — பவழம்
791. Ruby — கெம்பு
792. Pearl — முத்து
793. Gold — பொன்
794. Silver — வெள்ளி
795. Copper — செம்பு

796. Brass — பித்தளை
797. Pinch back — தம்பாக்கு
798. Iron — இரும்பு
799. Tin — தகரம் - Pewter
800. Steel — எழுகு - எகு
801. Lead — ஈயம்
802. Rust — துரு
803. Time — காலம், வேளை, சமையம், நேரம், சாமம்.
804. Date — தேதி
805. Calendar — பஞ்சாங்கம்
806. Day — நாள்
807. Morning — காலமே
808. Noon — மத்தியானம்
809. Afternoon — மத்தியானம்
810. Evening sunset — சாயிந்திரம்
811. Night — இராத்திரி
812. An hour — ஒரு மணி நேரம், நாழிகை
813. One O Clock — ஒரு மணி
814. Minute — ஒரு விகலை
815. Year — வருஷம்
816. Month — மாசம்
817. Week — வாரம்
818. Sunday — ஞாயிறு
819. Monday — திங்கள்
820. Tuesday — செவ்வாய்
821. Wednesday — புதன்
822. Thursday — வியாழன்
823. Friday — வெள்ளி
824. Months — மாதங்கள்
825. January — தை
826. February — மாசி
827. March — பங்குனி
828. April — சித்திரை
829. May — வையாசி
830. June — ஆனி
831. July — ஆடி
832. August — ஆவணி
833. September — புரட்டாசி
834. October — அற்பிசி
835. November — கார்த்திகை
836. December — மார்கழி
837. One — ஒன்று

838. One — ஒன்று
839. Two — இரண்டு
840. Three — மூன்று
841. Four — நான்கு
842. Five — ஐந்து
843. Six — ஆறு
844. Seven — ஏழு
845. Eight — எட்டு
846. Nine — ஒன்பது
847. Ten — பத்து
848. Eleven — பதினொன்று
849. Twelve — பனிரெண்டு
850. Thirteen — பதின்மூன்று
851. Fourteen — பதினாலு
852. Fifteen — பதினைந்து
853. Sixteen — பதினாறு
854. Seventeen — பதினேழு
855. Eighteen — பதினெட்டு
856. Ninteen — பத்தொன்பது
857. Twenty — இருபது
858. Thirty — முப்பது
859. Forty — நாற்பது
860. Fifty — ஐம்பது
861. Sixty — அறுபது
862. Seventy — எழுபது
863. Eighty — எண்பது
864. Ninty — தொண்ணூறு
865. Hundred — நூறு
866. Two-hundred — இருநூறு
867. Three-hundred — முன்னூறு
868. Four-hundred — ௪௱
869. Five-hundred — ௫௱
870. Six-hundred — ௬௱
871. Seven hundred — ௭௱
872. Eight hundred — ௮௱
873. Nine hundred — ௯௱
874. One thousand — ௧000
875. Of visit — சந்திப்புக்குச் சேர்ந்தது
876. Good morning sir — காலமே சலாமையா
877. Good day sir — பகல் சலாமையா
878. Good evening sir  சாயிந்திர சலாமையா
879. Good night sir — இராத்திரி சலாமையா
880. How do you do — நீரென்னமாயிருக்கிறீர்

| | | | |
|---|---|---|---|
| 881. | Very well by your favour | — | உங்களுடைய தயவினுலே சுகமா யிருக்கிறேன். |
| 882. | How is Ammaloo | — | அம்மாளுயென்னமாயிருக்கிருள் |
| 883. | She is sick | — | அவள் வியாதியாயிருக்கிருள் |
| 884. | How long since | — | எத்தனை நாள் பிடித்து |
| 885. | Since two months | — | இரண்டு மாதமாய் |
| 886. | Where is dubash | — | என் துபாசி யெங்கே |
| 887. | He is gone to country | — | அவன் ஊருக்குப் போயிருக் கிருன் |
| 888. | To what country | — | எந்த வூருக்கு |
| 889. | To Sadras | — | சதிரங்கப்பட்டணத்துக்கு |
| 890. | Why did he go there | — | அவனங்கே யேன் போனுன் |
| 891. | To Bring his mother | — | அவன் தாயாரை அழைத்துக் கொண்டு வருகிறதுக்கு |
| 892. | Walk in sir | — | உள்ளே வாருமையா |
| 893. | Never mind | — | அக்கரையில்லே |
| 894. | Come in and sit down | — | உள்ளே வந்து உளுக்காறும் |
| 895. | Geting late | — | நேரமாய்ப் போகுது |
| 896. | I must go | — | நான் போக வேணும் |
| 897. | Where do you live | — | நீ எங்கே குடியிருக்கிருய் |
| 898. | At Santhome | — | மயிலாப்பூரிலே |
| 899. | Near the church | — | கோவிலண்டை |
| 900. | Shall I come with you | — | நானுங்களோடே கூட வரட்டா |
| 901. | Better come to-morrow | — | நாளைக்கு வந்தால் நலமாயிருக் கும் |
| 902. | Very well sir | — | நல்லதையா அப்படியே யாகட்டு மையா |
| 903. | Good by to you sir | — | போகிறேன் உமக்கு சலாமையா |
| 904. | Of master and servant | — | துரைக்கும் வேலேக்காரனுக்குஞ் சேர்ந்தது |
| 905. | Good day sir | — | பகல் சலாமையா |
| 906. | Who you | — | நீயார் |
| 907. | I am your old servant | — | நானுங்களுடைய பழைய வேலேக் காரன் |
| 908. | What you want | — | உனக்கென்ன வேணும் |
| 909. | I got no employment | — | எனக்கு உத்தியோகமில்லே |
| 910. | What shall I do | — | நானென்ன செய்வேன் |
| 911. | Give me some money | — | எனக்குக் கொஞ்சம் பணங் கொடும் |
| 912. | Come another time | — | இன்னெரு வேளைக்கு வா |
| 913. | Give me someting now | — | எனக்கிப்போதேதாகிலுங் கொடும் |
| 914. | Dont bother me | — | என்னைத் தொந்தரவு பண்ணுதே |

915. Where shall I go sir — நானெங்கே போவேணையா
916. Go home — வீட்டுக்குப்போ
917. I got no for expence — எனக்கு சிலவுக்கு இல்லையே
918. I cannot help — நானுதவி செய்யமாட்டேன்
919. Employ me sir — என்னை உத்தியோகத்தில் வைத்துக்கொள்ளுமையா
920. What will you do — நீ என்ன செய்யமாட்டுவாய்
921. I can be your Butler — நானுங்களுக்கு பொட்லராயிருப்பேணையா
922. I dont require — எனக்கு வேண்டியதில்லை
923. Dont be angry — கோபித்துக் கொள்ளாதையுங்கள்
924. Hold your tongue — உன் வாயை மூடு
925. I say peon — அடா சேவகா
926. Sir — ஐயா
927. Push him out — அவனை வெளியிலே தள்ளிவிடு
928. Shut the dore — கதவைச்சாத்து
929. Dont let him out — அவனைவுள்ளே விடாதே
930. Very well sir — நல்லதையா (அப்படியே செய்கிறேன்)
931. Of buyer and seller — கொள்ளுகிறவனுக்கும் விற்கிறவனுக்குஞ்சேர்ந்தது
932. Good evening sir — சாயந்திரம் வந்தனமையா
933. Come to my shop sir — என்னுடையகடைக்கு வாருங்களையா
934. What you got — உன்னண்டை யென்ன யிருக்குது
935. I got every thing — என்னண்டை யெல்லா மிருக்குது
936. Show me a long cloth — எனக்கொரு முழப் புடைவையைக் காண்பி
937. Here it is look sir — இதோ யிருககுது பாருமையா
938. What price — என்ன விலை
939. Tell me the lowest price — குறைந்த விலையை யென்னுடன் சொல்லு
940. Give me Twenty rupees — எனக்கு இருபது ரூபாய் கொடும்
941. It is too dear — அது ரெம்ப குறைச்சல்
942. You cannot get so cheap — உங்களுக்கு அவ்வளவு நயத்திலே கிடையாது
943. I can get plenty — எனக்கு சேனையகப்படும்
944. Go and enquire — போய் விசாரித்துப் பாரும்
945. Will you give me for ten rupees — பத்து ரூபாய்க்கு யெனக்குக் கொடுக்குறையா
946. Never less one fanam too — நானொரு பணமாகிலுங் குறைக்கமாட்டேன்

| | | | |
|---|---|---|---|
| 947. | Then keep it with you | — | அப்படியானால் நீ வைத்துக்கொள் |
| 948. | Do you like Europe Cloth | — | உமக்குச் சிமைப்புடைவை சம்மதியாயிருக்குமா |
| 949. | That will not do | — | அது உதவ மாட்டாது |
| 950. | See the muslin | — | இந்த சல்லாவைப்பாரு |
| 951. | What is the price a yard | — | கெசம் ஒன்னுக்கு விலையென்ன |
| 952. | One an half rupees | — | ஒண்ணரை ரூபாய் |
| 953. | Without custom | — | தரகில்லாமற்படிக்கு |
| 954. | Bring that cloth with me | — | அந்தப்புடைவையை என்னோடே கூட கொண்டுவா |
| 955. | No one here | — | இங்கே ஒருத்தருமில்லை |
| 956. | I shall send my man | } — | என்னுடைய மனுஷனை அனுப்பிவிக்கிறேன் |
| 957. | I will send my man | | |
| 958. | Do so | — | அப்படி செய் |
| 959. | Send the money also | — | பணத்தையுங்கூட அனுப்பிவையும் |
| 960. | Dont change the cloth | — | துணியை மாற்றிப்போடாதே |
| 961. | No sir take my word | — | இல்லையா என்பேச்சை நம்பு |
| 962. | Take care | — | பத்திரம் |
| 963. | Tont fear - 'fride' | — | பயப்படாதே - Fraid |
| 964. | I will not do so | — | நானப்படி செய்கிறதில்லை |
| 965. | Peon | — | சேவகனே |
| 966. | Take the money go and pay it the merchant (pay it the) | — | இந்த பணத்தை யெடுத்துக் கொண்டு போ வர்த்தகனுக்குக் கொடு |
| 967. | He will give you a piece of muslin | — | அவன் உன்கையிலொரு சல்லாப் புடைவையைக் கொடுப்பான் |
| 968. | Bring it to me | — | அதை யென்னண்டை கொண்டுவா |
| 969. | Very well sir | — | நல்லதையா very well sir |
| 970. | Peon and (Servant) Merchant | — | சேவகனுக்கும் வர்த்தகனுக்கும் நடந்த சம்பாஷணை |
| 971. | Who sold muslin | — | சல்லா ஆர் விற்றது |
| 972. | I sold your master | — | நான் உங்களுடைய துரைக்கு விற்றேன் |
| 973. | How many yards that | — | அது எத்தனை கெசம் |
| 974. | Ten yard a piece | — | துண்டொண்ணுக்கு பத்து கெஜம் |
| 975. | At what price you sold it | — | என்ன விலைக்கு நீ விற்றாய் |
| 976. | For Fifteen rupees | — | பதினைந்து ரூபாய்க்கு |
| 977. | Here takes Fourteen rupees | — | இதோ இந்த பதினாலு ரூபாயை வாங்கிக்கோ |
| 978. | Where is another rupee | — | இன்னொரு ரூபாயெங்கே |

979. I took that for my custom — அதை நான் என்னுடைய தாகுக் கெடுத்துக்கொண்டேன்
980. I settle without custom — நான் தரகில்லாமல் தீர்த்துக் கொண்டேன்
981. Give me another piece — எனக்கு வேறொரு துண்டைக் கொடு
982. Like that — அதைப்போலே
983. I shall pay this money to-morrow — நானிந்தப் பணத்தை நாளைக்குக் கொடுக்கிறேன்
984. Very well sir — நல்லது அப்படியே யாகட்டும்
985. Boy — பையலே
986. Sir — அய்யா
987. Common words — வழக்கமான சொற்கள்
988. Who is there — ஆரங்கே - Common
989. Dressing boy sir — உடுத்துகிற பிள்ளையாண்டானையா
990. Call him here — அவனையிங்கே அழை
991. Here I am — இதோயிருக்கிறேனையா
992. Why so late — ஏன் இன்னேரம்
993. I am not well sir — எனக்கு வுடம்பு லகுவில்லை ஐயா
994. Take care — பத்திரம்
995. Where the bason of water — தட்டுத் தண்ணீரெங்கே
996. Bring my tooth brush — என்னுடைய தந்த சுத்தி பண்ணுகிற புருசு கொண்டுவா
997. Get me a towel — எனக்கொரு துபால்குட்டைகொடு
998. Clean my shoe — என் சோட்டை துடை
999. Give me a shirt — எனக்கொரு கம்மிசு கொடு
1000. Where is my short — என் அரைக்கால் சட்டை யெங்கே
1001. Bring my pantaloons — என் கால்சட்டையைக் கொண்டு வா
1002. Show me the stockings — மேசோட்டை எனக்குக் காண்பி
1003. Tie my neck cloth — என்னுடைய கழுத்துக் குட்டையைக் கட்டு
1004. Look for my suspender — கால்சட்டையை மாட்டுகிற நாடாவைத்தேடு
1005. Show me looking glass — எனக்குக் கண்ணுடியைக் காண்பி
1006. Take out my waistcoat — என்னுடைய வாஸ்கெட்டை யெடு
1007. Pull my jacket — என்னுடைய ஜாக்கெட்டை இழு
1008. Where is my comb — என்னுடைய சிப்பு எங்கே
1009. Call the cook — குசினிக்காரனை கூப்பிடு + vasket
1010. Cook — குசினிக்காரா
1011. Master wants you — துரையுன்னைக் கூப்பிடுகிறுர்

1012. Breakfast — அலுமுசு அல்லது காலை போசனம் தயராயிருக்குதா
1013. Yes - ready sir — ஆம் தயாராயிருக்குதையா
1014. What you got for break fast — அலுமுசுக்கு நீ யென்ன வைத்துக் கொண்டிருக்கிறாய்
1015. Bread and Butter — ரொட்டியும் வெண்ணெய்யும்
1016. Whathelse — பின்னையென்ன
1017. Fried fish — பொரித்த மீன்
1018. Boiled Egg — அவித்த முட்டை
1019. Ham and Cheese — பண்ணித்துடையும் சின்னுக் கட்டியும்
1020. Tea and Coppy — தே தண்ணியும் காப்பியும்
1021. Without sugar and milk — சர்க்கரையும் பாலுமில்லாமல்
1022. Why are you fool — ஏன் நீ பயித்தியக்காரனா
1023. What I can do money — நானென்ன செய்வேன்—பணமில்லை
1024. Cash keeper did not give — சருப்பு கொடுக்கவில்லை
1025. Go and borrow — கடன்போய் வாங்கு
1026. I shant sir — நான் மாட்டேனையா
1027. Come here dubash — இங்கே வா துபாசி
1028. Pay the cook — குசினிக்காரனுக்குச் சம்பளங் கொடு
1029. Discharge him — அவனைத் தள்ளிப்போடு
1030. Get another cook — இன்னொரு குசினிக்காரனைச் சம்பாதி
1031. Boy bring my umbrella — பையலே என்னுடைய குடையைக் கொண்டுவா
1032. Get my palankeen ready — என் பல்லக்கை தயார்படுத்து
1033. Take me to the fort — என்னைக் கோட்டைக்கெடுத்துப் போ
1034. Go fast — சீக்கிரமாய்ப் போ
1035. Stop here — இங்கே நிறுத்து
1036. Hold the umbrella — குடையைப் பிடி
1037. Take me home — என்னை வீட்டுக்குக்கொண்டு போ
1038. Where is butler — பொட்டலர் யெங்கே
1039. Here I am sir — இதோ இருக்கிறேனையா
1040. Open a Bottle of Beer — ஒரு புட்டி பீர் திற
1041. No cork screw sir — சடை பிடிங்கி இல்லை ஐயா
1042. What is become of it — அது யென்னமாய்ப் போச்சு
1043. I dont know sir — நானறிய மாட்டேனையா
1044. Buy another one — வேறொன்று வாங்கு
1045. Sent for the old cook — பழைய குசினிக்காரனை அழை

1046. Ask him where is the cork screw — சடைபிடிங்கி யெங்கேயிருக்கு தென்று அவனைக் கேள்
1047. He says that he dont know sir — அவன் அறியமாட்டேனென்று சொல்லுகிறான் ஐயா
1048. He is stole that — அவன் அதை திருடிக்கொண்டான்
1049. No sir I didnt steal — இல்லையா நான் திருடவில்லை
1050. You better bring it soon — நீ அதை சீக்கிரமாய்க் கொண்டு வந்தால் தாவளை
1051. I will send you to Police — நானுன்னைப் போலீசுக்கனுப்ப வேணும்
1052. Come let us both go sir — நாமிரண்டு பேரும் போகலாம் வாருமையா
1053. Send him away out — அவனை வெளியே அனுப்பிவிடு
1054. Bring my dinner — என்னுடைய மத்தியான போசனத்தைக் கொண்டுவா
1055. Give me some brandy — எனக்குக் கொஞ்சம் பிருந்தி கொண்டு வா
1056. Lay the table — மேசையைப் போடு
1057. Bring the table cloth — மேசை துப்பட்டிக் கொண்டுவா
1058. Open that Gaddown — அந்தக் கிடங்கைத் திற
1059. Take out the silver things — வெள்ளி சாமான்களை வெளியிலே யெடு
1060. Bring two large spoons — இரண்டு பெரிய கரண்டியைக் கொண்டுவா
1061. Clean the small spoons — சின்ன கரண்டிகளைத் துலக்கு
1062. Bring me a knife and fork — எனக்கொரு கத்தியு முள்ளுங் கொண்டுவா
1063. This is not sharp — இது சுருக்கில்லை
1064. Get another — வேறே கொண்டுவா
1065. Lay the plates — பீங்கான்களை பரப்பு
1066. Get some fruits — கொஞ்சம் பழங்களைக் கொண்டு வா
1067. What fruits — என்ன பழங்கள்
1068. Orange and plantain — கிச்சிலிப் பழங்களும் வாழைப் பழங்களும்
1069. Bring salt beef — உப்புப்போட்ட மாட்டிறைச்சிக் கொண்டு வா
1070. Bring salt fish — கருவாடு கொண்டு வா
1071. Get a lime — ஒரு எலுமிச்சம் பழங்கொண்டு வா
1072. Squeeze the juice — ரசத்தைப் பிழி
1073. Make some salad — கொஞ்சம் சல்லாது பண்ணு
1074. Bring the venegar — காடி கொண்டு வா

1075. Get some green chillys — கொஞ்சம் பச்சை முளகாய் கொண்டு வா
1076. Cut the onions — வெங்காயத்தை யறு
1077. Pound some pepper — கொஞ்சம் முளகு தூள் பண்ணு
1078. Mix all together — எல்லாத்தையுங் கலந்துவிடு
1079. Put little salt — கொஞ்சம் உப்புப்போடு
1080. This is too much — இது அதிகமாயிருக்குது
1081. Put some more — இன்னங் கொஞ்சம் போடு
1082. That will do — அது போதும்
1083. Shall I bring mustard — கடுகு கொண்டுவரட்டா
1084. Do so — அப்படியே செய்
1085. Pour little water — கொஞ்சந் தண்ணீர் வார்
1086. Get some hot water — கொஞ்சம் வெந்நீர் கொண்டுவா
1087. This is very warm — இது ரொம்ப சுடுது
1088. Make it cold — குளுறப்போடு - Cool
1089. Pan it soon — சிக்கிரமாய் விசறு
1090. I like you well — உன்பேரிலே எனக்கு சந்தோஷமாயிருக்குது
1091. I dont like you at all — உன்னைப் பார்க்கிறத்துக்கு எனக்கு சுத்தமாய் மனமில்லை
1092. You are not deligent — நீ ஜாக்கிரத்தைக்காறனல்ல
1093. Mind what you are about— நீ செய்கிறதென்னவென்று நினைத்துக்கொள்
1094. Take care for next time — இனிமேல் சாக்கிரத்தையாயிரு
1095. Dont be angry sir — நீ கோபம் பண்ண வேண்டாமையா
1096. I shall take care hereafter — நான் இனிமேலைக்கு சாக்கிரத்தையாயிருக்கிறேனையா
1097. Dont be angry — நீர் கோபம் பண்ண வேண்டாமையா
1098. Get me a Palankeen — எனக்கொரு பல்லாக்குக் கொண்டுவா
1099. I must go to Fort — நான் கோட்டைக்குப் போக வேண்டும்
1100. I cannot stay here — நானிங்கே யிருக்கக் கூடாது
1101. You go and call that gentleman — அந்தத் துரையைப் போய் கூப்பிடு
1102. Tell him to come soon — அவரைச் சிக்கிரமாய் வரச் சொல்லு
1103. I cannot wait — நான் காத்திருக்க மாட்டேன்
1104. Dont speak a lie — பொய் பேசாதே
1105. Tell me the truth — என்னுடனே நிசத்தைப் பேசு

1106. I will not trust you — நானுன்னை நம்ப மாட்டேன்

1107. Send another person — வேறொரு மனுஷனை அனுப்பிவை

1108. Tell him to go soon — அவனைச் சிக்கிரமாய்ப் போகச் சொல்லு

1109. He cannot run — அவனோட மாட்டான்

1110. He runs like an old man — அவனொரு கிழவனைப் போல் ஓடு கிறான்.

1111. Dont tell tales against one — என் பேரில் பொய் சொல்லாதே

1112. What I did to him — நானவருக் கென்ன செய்தேன்

1113. What I done to him — நான் அவருக்கு என்ன பண்ணி னேன்

1114. What I did to him — நான் அவருக்கு என்ன செய்தேன்

1115. I am not a cheater — நானேமாத்துகிறவனல்லா

1116. You are a honest man — நீ கிறஸ்தன்

1117. What you think me then — நீ என்னை யென்ன வென்று நினைத்தாய்

1118. Who makes noise there — அங்கே யார் சந்தடி பண்ணு கிறது

1119. He is quarrelling with me sir — இவனென்னோடே சண்டை பண் ணுகிறானையா

1120. What about — என்னத்தைக் குறித்து

1121. I dont know for what sir — என்னத்துக்கென்று எனக்குத் தெரியவில்லை அய்யா

1122. He is a busing me since this morning — இன்று காலமே முதல் (பிடித்து) என்னைத் திட்டுகிறான்

1123. Tell him to......his tongue — அவனை வாயை மூடச் சொல்லு

1124. Keep silence sir — பேசாமலிருமையா

1125. Speak slow — மெதுவாய்ப்பேசு

1126. Why you are stammering — நீ யேன் தெத்திப் பேசுகிறாய்

1127. Are you stammer — நீ தெத்து வாயனா

1128. I cannot hear what you say — நீ சொல்லுகிறது எனக்குத் தெரியவில்லை

1129. I think you are deaf — நீ செவிடென்று நினைக்கிறேன்

1130. I am not deaf sir — நான் செவிடனல்லவையா

1131. Are you blind — நீ குருடனா

1132. I am not blind — நான் குருடனல்ல (ஐயா)

1133. You are very impertinent fellow -- நீ மெத்த ஆங்காரி-(impertinent)

1134. I dont want your business sir — உங்களுடைய உத்தியோகம் எனக்கு வேண்டாமையா

1135. Discharge this man — இந்த மனுஷனைத் தள்ளிவிடு

| | | | |
|---|---|---|---|
| 1136. | I can get plenty business sir | — | எனக்கு அனேகம் உத்தியோகம் அகப்படுமையா |
| 1137. | Go away, immediately | — | இப்போதுதானே போய்விடு |
| 1138. | Give me my pay | — | என் சம்பளத்தைக் கொடு |
| 1139. | What is due to you | — | உனக்கென்ன சேரவேண்டியது |
| 1140. | You must know better | — | உங்களுக்கு நன்ருய்த் தெரிந்திருக்க வேணும் |
| 1141. | Could not you tell me how much that | — | அது இவ்வளவென்று யென்னேடே சொல்லக் கூடாதா |
| 1142. | Look into your account | — | உங்களுடைய கணக்கைப்பாரும் |
| 1143. | Go and call the conicopillay | — | கணக்கு பிள்ளையைக் கூப்பிடு |
| 1144. | I am here sir | — | நானிங்கே தானிருக்கிறேனையா |
| 1145. | Pay this fellow his wages | — | இவனுடைய சம்பளத்தை யிவனுக்குக் கொடுத்து விடு |
| 1146. | Discharge him Immediately | — | இந்த க்ஷணத்திலே இவனைத் தள்ளிவிடு |
| 1147. | Get another servant | — | வேறேயொரு வேலைக்காரனைச் சம்பாதி |
| 1148. | Have you paid him | — | அவனுக்குப் பணங்கொடுத்துவிட்டையா |
| 1149. | Not yet sir | — | இன்னமில்லை ஐயா |
| 1150. | Tell him to come tomorrow | — | அவனை நாளைக்கு வரச்சொல்லு |
| 1151. | What time shall I come | — | நான் என்னேரத்துக்கு வரட்டும் |
| 1152. | Come to me any time | — | எந்த வேளைக்காகிலும் என்னிடத்துக்கு என்னண்டை வா |
| 1153. | Tont go out before I come | — | நான் வருகிறதுக்கு முன்னே நீ போகாதே |
| 1154. | I shall come tomorrow evening | — | நாளை சாயங்காலம் வருகிறேன் |
| 1155. | Wait for me until I come | — | நான் வருகிற மட்டுக்கும் எனக்காக கார்த்துக் கொண்டிரு |
| 1156. | I shall do as you tell | — | நீ சொல்லுகிற படிக்கே செய்கிறேன் |
| 1157. | Dont fail to come | — | வராமலிருக்காதே |
| 1158. | If not come how I shall get money | — | வராவிட்டால் பணம் எப்படியகப்படும் |
| 1159. | Where is the new servant | — | புது வேலைக்காரனிங்கே |
| 1160. | He will come by and by | — | அவன் பின்னாலே வருவான் |
| 1161. | What he will tell him to do | — | அவனை என்ன செய்யச் சொல்லுவீர் |

1162. I will make him to do every business — அவனை சகலமான வேலையுஞ் செய்யப் பண்ணுகிறேன்
1163. Two-rupees a week — வாரத்திலிரண்டு ரூபாய்
1164. How many rupees for month — மாசத்திலே எத்தனை ரூபாய்
1165. It comes do nine rupees — அது ஒன்பது ரூபாயாகுது
1166. How is that — அதெப்படி
1167. Why is it wrong — ஏன் அது தப்போ
1168. Certainly it is wrong — நிட்சயமாய் அது தப்புதான்
1169. How many rupees it will come — அது எத்தனை ரூபாயாகும்
1170. I think it must come eight rupees — நான் எட்டு ரூபாய் வருமென்று நினைக்கிறேன்
1171. I shall see that accounts — நான் அந்தக் கணக்கைப் பார்க்கிறேன்
1172. Give me a piece of paper — எனக்கொரு துண்டு கடுதாசி கொடு
1173. Bring my pen and ink — என்னுடைய இறகையும் இங்கியுங் கொண்டுவா
1174. Take your Iron pen and cudjan — உன்னுடைய எழுத்தாணியும் ஓலையையும் எடுத்துக்கோ
1175. Come let us now examine— இப்போது ஒத்துப் பார்க்கலாம் வா
1176. How many weeks for a month — ஒரு மாசத்துக்கு எத்தனை வாரம்
1177. Four weeks — நாலுவாரம்
1178. It is right — அது சரிதான்
1179. Come let us eat — நாம் சாப்பிடலாம் வா
1180. Take this — இதை யெடுத்துக்கொ
1181. You want more — உனக்கின்னம் வேணுமா
1182. Enough sir — போதுமையா
1183. Eat little more — இன்னங் கொஞ்சஞ் சாப்பிடு
1184. That will do sir — அது போதுமையா
1185. Wash your hands — உன் கைகளைக் கழுவு
1186. Wipe your mouth — உன் வாயைத் தொடை
1187. Hold this — இதைப்பிடி
1188. Cut that piece — அந்தத் துண்டை அறு
1189. Scrap all that — அதையெல்லாஞ் சுரண்டு
1190. Make fire — நெருப்பைப் பத்தப் போடு
1191. Boil some water — கொஞ்சந் தண்ணீர் காச்சு
1192. Buy some milk and sugar — கொஞ்சம் பாலுஞ் சக்கரையும் வாங்கு

1193. Take one cup of butter — ஒரு கோப்பை வெண்ணெய் வாங்கிக்கோ
1194. Get two pound tea — இரண்டு ராத்தல் தேயிலே கொண்டு வா
1195. How they sell sugar sandy — கற்கண்டு யெப்படி விற்கிறார்கள்
1196. Five pagodas a mands — மணங்கு ஐந்து வராகன்
1197. I dont want that — அதெனக்கு வேண்டாம்
1198. How can — அப்படியானலெப்படி
1199. Get some brown sugar — கொஞ்சம் நாட்டுச்சக்கரை கொண்டுவா
1200. I want a cup of tea — எனக்கொரு கோப்பை தேத் தண்ணீர் வேணும்
1201. Cover that plate — அந்த பீங்கானை மூடு
1202. Shake this bottle — இப்புட்டியைக் குலுக்கு
1203. Keep it one (side) place — அதை ஒறண்டை வை
1204. Cool the Claret — கிளாரட்டைக் குளிரப்போடு
1205. Change this — இதை மாத்து
1206. Bring a new towel — ஒரு புது துவாலை கொண்டுவா
1207. Old sheet — பழந்துப்பட்டி
1208. Stitch that — அதைத்தை
1209. No needle and thread — ஊசியும் நூலுமில்லே
1210. Take some thread — கொஞ்சம் நூலெடுத்துக்கோ
1211. Twist it well — அதை நன்ருய் முறுக்கு
1212. Pull that — அதையிழு
1213. Have you done — அதை முடித்தையா (traugh)
1214. Who through them there — அதுகளை அங்கே ஆர் போட்டு விட்டது
1215. Enquire the price — விலையை விசாரி
1216. How you sell tamarind — புளியென்னமாய் விற்கிருய்
1217. Two fanames a viss — வீசை இரண்டு பணம்
1218. How you sell ghee — நெய் எப்படி விற்கிருய்
1219. Twenty pagodas for a candy — பாரம் - கஇ- உய - ஹ (+)
1220. Come let us go — நாம் போகலாம் வா
1221. Where — எங்கே
1222. To China bazar — பீங்கான் கடைக்கி
1223. To big bazar — பெரிய கடைக்கி
1224. To Tiffen bazar — குச்சிலி கடைக்கி
1225. What for — என்னத்துக்காக
1226. To buy house furniture — வீட்டு தட்டு முட்டுகள் வாங்கிறதற்கு
1227. To buy curry stuff — மசால் வாங்கிறத்துக்கு

1228. Lift up that box — அந்தப் பெட்டியை தூக்கு
1229. See under that — அதற்கடியிலே பார் - (Throw) -
1230. What is that — அதென்ன
1231. The door key and Box key — கதவு சாவியும் பெட்டி சாவியும்
1232. Is that good Ghee — அது நல்ல நெய்யா
1233. It is very pure — அதுரொம்ப அப்பட்டமாயிருக்குது
1234. Not mixed — கலப்படமல்ல
1235. Give me two jars full — எனக்கு இரண்டு சாடிநிரம்பக் கொடு
1236. Weight well — செவ்வையாய் நிறு
1237. Hold it right — ஒழுங்காய்ப்பிடி
1238. See how that liks — அது எப்படி ஒழுகுது பார்
1239. I shall give you right weight — நானுங்களுக்குச் சரியாய் நிறுத்துக்கொடுக்கிறேன்
1240. Tont cheat — ஏமாற்ருதே
1241. I am not so — நானப்படிப்பட்டவனல்ல
1242. You are a very good man — நீ மெத்த நல்ல மனிதன்
1243. I will come again — நான் மறுபடியும் வருகிறேன்
1244. டு சோ — அப்படி செய்
1245. Good by sir — போறேன் சலாமையா
1246. God bless you — சுவாமி உன்னை இரட்சிக்கக் கடவது
1247. Breach — கலகம்
1248. Overtake — தொடர்ந்து போகிறது - வழியிற் கலந்து கொள்ளுகிறது
1249. To escape — தப்பித்துக் கொள்ளுகிறது
1250. Whithersoever — எங்கேயாகிலும் எவ்விடத்திலாகிலும்

[*Comprehensive critical notes on this work will occur in the next issue.*]

"Dictionaries are like watches; the worst is better than none, and the best cannot be expected to go quite true."

— Samuel Johnson (*Piozzi, Johnsoniana*, 178)

*    *    *

"I am not yet so lost in lexicography as to forget that words are the daughters of the earth, and that things are the sons of heaven."

— Samuel Johnson (*Dictionary of the English Language : Preface*)

*    *    *

"It is not perhaps extravagent to say, that, in its poetic form, the Tamil is more polished and exact than the Greek, and in both dialects, with its borrowed treasures, more copious than the Latin. In its fulness and power it more resembles English and German than any other living language."

— Rev. Miron Winslow (*A Comprehensive Tamil and English Dictionary of High and Low Tamil : Preface)*

நாட்டுப்புற இலக்கியம் :

# ஈனமுத்துப் பாண்டியன் கதை

பதிப்பாசிரியர்கள் :
மு. சண்முகம் பிள்ளை,
தமிழ் விரிவுரையாளர்,
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி.

சு. சண்முகசுந்தரம், எம். ஏ.,
ஆராய்ச்சி மாணவர்,
தமிழ்த்துறை.

சென்னைப் பல்கலைக் கழகம்

1974

# முன்னுரை

## கதைப் பாட்டு

ஈனமுத்துப் பாண்டியன் கதை நாட்டுப்புறக் கதைப் பாடல்களுள் ஒன்று. பெரும்பாலான கதைப் பாடல்களும் அம்மானைப் பாடல் முறையிலேயே அமைந்துள்ளன. அல்லி அரசாணிமாலை, தேசிங்கு ராசன் கதை, இராமப்பய்யன் அம்மானை போன்றவற்றின் நடையி லேயே இவை காணப்படுகின்றன. இப் பாடல்கள் தனிமையில் பாடி மகிழ்வதற்கும், பலர் கூடியிருந்து வாசிக்கக் கேட்டு மகிழ்வதற்கும் ஏற்றவை. இவ்வகை நூல்களுள் முற்றும் பாடலாய் அமைந்தனவும் இடையிடையே கதைத் தொடர்பான விருத்தம் முதலிய வேறு வகைப் பாடலோ, உரைநடையோ அமைந்து காணப்படுவனவும் ஆக இரு வகையுண்டு. இவற்றுள், பலவற்றை உடுக்கை முதலிய இசைக் கருவி களுடன் பாடுதலும், வில்லிசையில் பலர் கூடி இசைத்தலும் வழக்க மாகும். வில்லிசைப் பாடல் வகையில் அடங்குவதே இங்கு வெளியிடப் பெறும் ஈனமுத்துப் பாண்டியன் கதைப் பாட்டு.

## வில்லுப் பாட்டு

வில்லுப் பாட்டு எனப்படும் வில்லிசைப் பாடல்கள் சிறு தெய்வக் கொண்டாட்டங்களில் சிறப்பிடம் பெறுகின்றன. குறித்த தொரு தெய்வத்தை முன்னிட்டு வழங்கும் சிறப்புப் பாடல்கள் அந்தந்தத் தெய்வங்களின் விழாக்களில் பாடப்பெறும். இவ்வகைத் தனிப்பாட்டு தெய்வங்களின் ஆவேசத்திற்காகப் பெரிதும் பயன் படுத்தப்படுவதாம். ஏனைய நேரங்களில் மக்களுக்கு எழுச்சியும் இன்பமும் நல்லறிவும் ஊட்டத்தக்க வகையில் அமைந்த புராணக் கதை களிலான வில்லுப் பாட்டுகளை இசைப்பார்கள். சுடலைமாடன் கதை, இசக்கியம்மன் கதை, ஐயனார் கதை எனப்படும் சாத்தா கதை. சங்கிலி பூதத்தார் கதை, முத்தாலம்மன் கதை, நல்லதங்காள் கதை, கட்ட பொம்மு கதை போன்றவை சிறப்பாகப் பாடப்படும் வில்லுப் பாடல் களாம். சிறப்பாக அந்தந்த பகுதிகளில் வழங்கும் வீரபெருமக்களின் வரலாறுகளும் இடம்பெறும். ஆனால், இப்பொழுது காலத்துக்கு ஏற்ற வகையில் நாட்டுப் பெருமக்களின் வரலாறுகளையும் வில்லிசையில் அமைத்துப் பாடி வருகின்றனர்.

## வில்லுப் பாட்டின் தனி இயல்பு

கதைப் பாடல்கள் அனைத்தும் வில்லிசைக்கேற்ப அமைவன அல்ல. வில்லிசைக்கான இசை அமைதியும், தாளக் கோப்பும் உடைய பாடல்கள், சிறுசிறு தொடர்களில் அமைந்த பாடல்கள், மீண்டும் மீண்டும் இசைத்து உணர்ச்சியூட்டும் பாடல்கள்தாம் பெரும்பாலும்

விரும்பப்படுகின்றன. ஆகவே, எல்லாக் கதைப் பாடல்களையும் வில்லுப் பாடல்கள் என்று சொல்லுவதற்கில்லை. பாடல்களை ஓசையாலும் அடியளவு முதலியவற்றாலும் பெயரிட்டு வழங்குவதே மரபு. அம்மானைப் பாடல்கள் மெட்டில் வளர்ந்த நிலையே வில்லுப் பாட்டுகள்.

இந்த யாப்பு மரபு எத்தனையோ வகையில் வளர்ச்சியுற்று இசைக் கலைக்கும், இசைக் கருவிகளுக்கும் ஏற்ற வகையில் பல்வேறு வடிவங்களையும் ஒலி அமைப்புகளையும் தாள நிலைகளையும் பெற்றுக் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ளன. இவ் வளர்ச்சியில் சிந்து கும்மி போன்ற எளிய இசைப் பாடல்கள் பின்னாளில் பெரு வழக்குற்றன. இத்தகைய இசை அமைதியோடு பழைய ஆசிரியத்தின் மாற்று வடிவம்போல் இவை வளர்ச்சியுற்றுள்ளன.

### பெயர் வரலாறு

பாடலின் இசை அமைதியைப் பொறுத்தும், பாட்டை இசைப்பவர்களைப் பொறுத்தும், அவர்கள் இசைக்கும் கருவிகளை மையமாக வைத்தும் பாடல்களுக்குப் பெயர் சூட்டுவதுண்டு. வெண்பா, அகவல் கலிப்பா முதலிய பா வகைகள் எல்லாம் ஓசையமைதியைக்கொண்டு பெயர் பெற்றவையே. தாய்மார்கள் பாடி மகிழ்வதற்காகவே பாடப் பெற்றவை அல்லி அரசாணிமாலை முதலிய அம்மானைப் பாடல்கள். அம்மனை என்பதற்குத் தாய் என்பது பொருள். அதுவே ஈறு நீண்டு அம்மானை என வழங்கப்படுவதுண்டு.[1] கோடங்கி பாட்டு, இராப் பாடி பாட்டு, கணியான் பாட்டு, மாட்டுக்காரன் பாட்டு என்னும் வழக்குகள் பாடுபவரைக்கொண்டு பிறந்தவை. கருவிகளினால் பெயர் பெற்ற பாடல்கள் உடுக்கடிப் பாட்டு, வில்லுப் பாட்டு, கும்மிப் பாட்டு, கோலாட்டுப் பாட்டு போன்றவைகள். வில் என்னும் இசைக் கருவியை முதன்மையாக வைத்துப் பாடப்படும் பாடலே வில்லுப் பாட்டாகும்.

### இன்றைய நிலை

திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில் கிராமதேவதைகளின் கொடை விழாக்களில் இன்றும் இப் பாடல் வகை வழக்கிலுள்

---

1. புகழேந்திப் புலவர் சிறையில் இருந்த காலத்தில் அச் சிறைக் கூடத்தின் அண்மையிலுள்ள கிணற்றில் நீரெடுக்க வந்த பெண்களின் பொருட்டு, அல்லி அரசாணி மாலை போன்றவற்றை பாடியதாகச் சொல்வது செவிவழிச் செய்தி. 'இராமாயண நங்கைப் பாட்டு' என்னும் ஒரு நூல் அம்மானை முறையில் அமைந்ததே. இதில் நங்கைப் பாட்டு என்று சுட்டியிருப்பதும் கவனிக்கத்தக்கது. அல்லி அரசாணிமாலை முதலிய அம்மானைப் பாடல்களை 'மாதர் மஞ்சரி' என்னும் வரிசையில் சரவண பவானந்தம் பிள்ளை வெளியிட்டிருப்பதும் ஈண்டுக் கவனித்தற்குரியது.

ளது. இதைப் பாடுபவர்களும் அங்கே பலராய் உள்ளனர். ஆண்களே யன்றிப் பெண்களும் இந் நிகழ்ச்சியை நடத்துகின்றனர். சென்னை, திருச்சி முதலிய வானொலி நிலையத்தாரும் நாட்டுப்புறப் பாடல் நிகழ்ச்சி களுள் ஒன்றாக வில்லுப் பாடல்களையும் ஒலிபரப்பி வருகின்றனர். இதனால், தமிழகத்தின் பிற பகுதிகளிலும் வில்லுப் பாட்டு சிறப்புற விளங்குகிறது. கல்வி நிலையங்களில்கூட மாணவர்கள் தங்கள் விழா நாள்களில் வில்லுப்பாட்டுப் பாடுதலையும் அங்கங்கே காணலாம். இவ்வாறு ஒரு பகுதியில் மிகுதியும் போற்றப்பட்டு வருகிற வில்லுப் பாட்டு தமிழகம் முழுவதும் பரவி எல்லோரும் இனிது கேட்டு மகிழும் நல்லிசையாக இன்று விளங்கி வருகின்றது.

### தோற்றம்

வில்லுப் பாட்டு மரபு எவ்வாறு தோன்றியது எனச் சற்றுப் பார்ப்போம். பண்டை மனிதர்களின் வேட்டைத் தொழிலுக்கும் போர்த்தொழிலுக்கும் பயன்பட்ட முக்கியமான கருவி வில். இக் கருவியில் மணி கோத்திருப்பது வழக்கமென்பதைக் கம்ப இராமா யணம் போன்ற காவியங்கள் வாயிலாய் அறிந்துகொள்ளலாம். இராமனுடைய வில் மணி ஓசை ஒலிக்கேற்ப யானை முதலிய எதிரி களின் படைகள் வீழ்ந்தன என்பதைக் கம்பர்,

‘கடுமணி நெடியவன் வெஞ்சிலை
கணகண கணகண எனும் தொறும்’

(யுத்த : மூலபல : 214)

என்று குறிப்பிடுகின்றார். இங்ஙனம் வெற்றி பெற்ற வீரர்கள் மகிழ்ச்சியால் வில் நாண், வில்மணி ஒலிக்கேற்ப மகிழ்ச்சிக் கூத்து ஆடினர். இந்த வில் மணி ஓசை மகிழ்ச்சிக் கூத்தாட்டத்திற்கேற்ப அமைந்திருப்பதுகொண்டு வீரர் வழிபாட்டிலும் வில்லை இயக்கி ஆடிப் பாடும் மரபு தோன்றியிருக்கலாம். மற்றும் இது பற்றிய இன்னொரு கருத்தும் உண்டு. அதாவது, வேட்டைத் தொழிலில் ஈடுபட்டு வீர வாழ்வு நடத்திய மனிதன், ஓய்வு நேரங்களில் இளைப்பாறும்போது வில் மணி ஓசைக்கேற்பப் பாடியிருக்கலாம் என்பதே. எவ்வாறா யினும் வில்லிசை எழுப்பிப்பாடும் பாடல் வீரர்களின் எழுச்சிக்காகவே முதன்முதலில் தோன்றியிருத்தல் வேண்டும். பின்னர், அது வீரர் வழிபாட்டிற்கும் பயன்பட்டிருக்க வேண்டும் எனக் கருதுவது இயல்பே.

### வில்லுப்பாட்டுக் கருவிகள்

வில் பாட்டிற்குரிய முதன்மைக் கருவி வில்லே. இந்த வில் கூந்தற் பனையின் அடிமரத்தால் செய்யப்படுவதாகும். இதன் இரு முனை களிலும் வெண்கலக் குப்பிகள் பொருத்தப்பட்டிருக்கும். மாட்டுத்தோல் வடத்தை முறுக்கி நாணாகப் பயன்படுத்துவர்; வில்லில் பரல்களோடு கூடிய ஒலிக்கும் மணிகள் பொருத்தப்பட்டிருக்கும். வில்லிசை தொடங்கும்போது மட்டுமே வில் வளைத்துக் கட்டப்படும். வில்லின்

நடுப் பாகத்தைப் பெரிய மண்குடத்தின் கழுத்திலே பொருந்தும்படி வைத்துக் கட்டுவர். அந்த மண்குடம் வைக்கோலால் முறுக்கப்பட்ட புரிமணைமேல் வைக்கப்பட்டிருக்கும். வில்லை அடித்து ஒலி எழுப்ப இரு வீசுகோல்கள் பயன்படும். அந்த வீசு கோல்களிலும் வெண்கல மணிகள் பொருத்தப்பட்டிருக்கும், இதற்குத் துணையான இசைக் கருவி களாய் அமைபவை உடுக்கை, வெண்கலத்தாளம், கட்டை, குடமட்டை ஆகியவையே. இப்பொழுது ஆர்மோனியமும் பயன்படுத்தப்படு கிறது.

கருவிகளை இயக்கும் வகை

வில்லடிக்கும் தலைமைப் பாடகராகிய புலவரே, வீசுகோலைக் கையில்கொண்டு இசைக்கேற்ப வில்நாணை அடித்து ஒலி எழுப்புவார். இவரை அண்ணாவி, வில்லுக்காரர் என்றும் அழைப்பர். இதற்கு ஏற்பவே ஏனைய கருவிகளும் ஒத்து இசைக்கப்படும். குடவாயை மட்டையால் அடிக்கும் ஒருவகைத் திறத்தாலேயே 'பம்பம்' எனத் தனி ஓசை எழுப்பப்படும். வலக்கையால் குடத்தை அடித்துக் கொண்டே இடக்கை விரலிடுக்கில் பிடித்துள்ள சொட்டிக் கட்டையால் குடத்தைக் கொட்டியும் ஒலி எழுப்புவார். வெண்கலத் தாளமும், கட்டைகளும், உடுக்கையும் கையினால் இயக்கப்படுபவையே.

பாடும் முறை

வில்லுப் பாட்டுப் புலவர் வில்லின் முன் நடுநாயகமாய் அமர்ந்து வில்லுப்பாட்டு நிகழ்ச்சியை நடத்துவார். தலைப்பாகையுடன் கம்பீர மாய் அவர் அமர்ந்து நிகழ்ச்சியை நடத்தும் பாங்கும் சிறப்பாக இருக்கும். புலவர் பாடுகின்ற முறையும், வீசுகோலை வீசிச் சுழற்றி வில் நாணை அடிக்கின்ற பாங்கும், அவர்தம் அங்க அசைவு மெய்ப்பாடு களும், சுற்றியிருந்து கேட்போரைக் கவரத்தக்க வண்ணம் அமைந் திருக்கும். வில்லின் தரை சார்ந்த பக்கத்தில், அதாவது வில்லின் இடப்புறம் புலவரும், அவருக்கு வலப்புறம் குடத்தை இயக்குபவரும் அமர்ந்திருப்பர்; ஏனையோரும் அடுத்துப் பின் பக்கம் சூழ்ந்திருப்பர். பாடல்களைப் புலவர் பாடும்போது ஏனையோர் இசைக்கருவிகளை இயக்கியும் அவர் பாடலை வழிமொழிந்து பாடியும் சுவையூட்டுவர்.

புலவர் தம் பாடலைத் தொடங்குகின்ற பொழுது, 'தந்தினத்தோம் என்று சொல்லியே வில்லினில் பாட' என்று தொடங்கி, கணபதி, கலை மகள் முதலிய தெய்வங்களை வணங்கும் பாடலை முதலில் இசைப்பார். வில்லுப்பாட்டின்இசை எவ்வாறு அமையும் என்பதை, 'தந்தினத்தோம்' என்ற சந்தக் குறிப்பே காட்டும்.

வில்லுப்பாடல் முழுவதும் குறித்ததொரு தெய்வத்தைப் பற்றியே இருப்பதில்லை. எந்தக் கோயிலில் பாடுகிறாரோ அந்தக் கோயில் தெய்வத்தைப் பற்றிய பாட்டே ஆவேசகாலத்தில் பாடப்படுவதாய் இருக்கும். ஏனைய காலங்களில் வீரர் கதைகளும் புராண இதிகாசக்

கதைகளும் நாட்டுத் தலைவரின் வரலாறுகளும் பாடப்படுவதுண்டு. கதைகள் முழுவதும் பாடலாகவே அமைவதில்லை. ஒருவகையில் இந் நிகழ்ச்சியை அரிகதை சொல்லும் பாகவதர்களின் நிகழ்ச்சியோடு ஒப்பிடலாம். எப்படிப் பாகவதர் உரையும் பாட்டுமாகத் தம் கதையை நடத்திச்செல்லுகிருரோ அந்த வகையில்தான் வில்லுப் பாட்டு நிகழ்ச்சி களும் நடைபெறுகின்றன. முக்கிய நிகழ்ச்சிகளைப் பாடலாகவும் இடை யிடையே தொடர்புக்காகக் கதை சொல்லும் முறையில் உரைகளும் இடம் பெறுவதுண்டு.

பொது மரபுகள்

புலவர் பாடும்போது ஏனையோர் அப் பாட்டை திரும்பிப் பாடுதலும், பாடற்பகுதியின் பின்தொடர்களை மட்டும் மீண்டும் பாடுதலும் உண்டு. தொடர்களை மீண்டும் அழுத்திப் பாடுகின்றபோது பாடலின் நயம் கேட்போருக்கு நன்கு புலப்படும். புலவர் உரை களின் இடையிடையே அதற்கு ஏற்றாற்போல ஆமா, ஓஹோ, ஆஹா என்று உணர்ச்சிக் குறிப்புகளை வெளிப்படுத்துவர். தாள லயங்களும் மெய்ப்பாடுகளும் மேலும் மேலும் உணர்ச்சியை வெளிப்படுத்தும். கதை சொல்லும்போது இடையிடையே பொருத்தமான சிறு வினுக் களைப் பின்னுள்ளோர் எழுப்புதலும், அதற்கு விடை சொல்லுகின்ற பாங்கில் புலவர் உரைப்பதும் கதை விளக்கத்திற்குத் துணைபுரியும்.

பெரும்பாலான பாடல்களின் தொடக்கத்தில் நாட்டு வளப்பம் பாடுவது குறிப்பிடத் தக்கது. ‘நாடு நல்லோ நல்ல நாடு, நாவலர்கள் புகழும் நாடு’ என்று தொடங்கி நிலவளம் நீர்வளம் போன்றவற்றையும் ஏத்திப்பாடுவார். ‘நாடான நாடதிலே நல்லவள நாடதிலே’ என்று தொடங்கிப் பாடுவதும் உண்டு. நகரங்களையும் ஊர்களையும் குறிக் கின்றபோது ‘தேனிருந்து மழை பொழியும்’ என்று புகழுவது பொது மரபாய்க் காணப்படுகின்றது. இந்த ஈனமுத்து கதைப் பாட்டிலும் ‘தேனிருந்து மழைபொழியும் தெற்குவள்ளியூர் தலமதிலே’ என்று குறிப்பிடப்படுவதைக் காணலாம்.

தெய்வ ஆவேசம் உண்டாவதற்காக அத் தெய்வ வரவு குறித்துப் பாடப்படுகின்ற பாடலை ‘வரத்துப்பாட்டு’ என்பர். தெய்வம் எங்கிருந்து எப்பொழுது எவ்வெவ்வாறெல்லாம் வந்தது என்றும் அதன் திருவிளையாடல்கள் இன்ன என்றும், அத் தலத்தில் வந்து கோயில் கொண்டுள்ள மகிமையும் பிறவும் மிக உருக்கமாகவும் விளக்கமாகவும் பாடப்படுவதுண்டு.

வில்லுப்பாட்டு நிகழ்ச்சியை முடிக்கின்ற தருணத்தில் பாடுகின்ற பாடலை வாழ்த்துப்பாட்டு, வாழ்த்திப் பாடல், வாழி பாடல் என்றும் கூறுவர். நாட்டையும் ஊரையும், ஊர்ப் பெருமக்களையும், கோயிலுக் குச் சிறப்புச் செய்யக் காரணமாய் இருந்தவர்களையும் ‘வாழ்க வாழ்க’ என வாழ்த்திச் சிறப்பிப்பர். வில்லுப்பாட்டுப் புலவர்க்கு வெகுமதி

1. 4. 'வைகறை மலர்கள்' வகை தொகை செய்யப்பட்ட நிலையில் இல்லை. ஆய்வுரையாளார் வேலை அது; தோய்வுரை—காய்வுரை ஆளருக்கு அது தேவையில்லை தான்! என் பகுத்தறிவுக்கு எட்டிய வகையில்—வரையில்—இந்த 56 பாடல்களைப் பின்வரும் தலைப்புகளில் வகை தொகை செய்யலாம்.

*1. கவியுள்ளம்*

1. ஒரு குரல், 2. தேவை இரு சிறகு.

*2. பொது*

1. புன்னகை, 2. அழியா அழகு.

*3. இயற்கை*

1. காவிரி அன்னை, 2. வயல், 3. ஆயிரம் கற்பனை அந்தி, 4. நிலவு.

*4. காதல்*

1. ஒருத்திக்காக அலைகின்றேன், 2. காதல் கொதிகலன், 3. பார்வைப் பாவம், 4. நினைவு வெள்ளம், 5. சுமையின் சுவை, 6. இன்பச் சுரபி, 7. பிறை நோய், 8. இதயச் சுவடுகள், 9. தொல்லையோ தொல்லை, 10. கவி மது, 11. எல்லாம் நான், 12. தொடராத காதலி, 13. காலமெல்லாம் ஏக்கம், 14. ஏங்கவோ!, 15. இழந்தேன்.

*5. குழந்தை*

1. வா! வா!, 2. பள்ளி எழுக.

*6. தலைவர்கள்*

1. கலைஞர் ஒரு புரட்சித் தலைவர் (க$^{1}$), 2. கல்லறை கேட்டவன் (அ$^{1}$), 3. என்றும் வாழும் எங்கள் அண்ணன் (அ$^{2}$) 4. பிறந்து நீ வருவாய் (அ$^{3}$), 5. பரிதாபம் உன்றனுக்கோ (பி$^{1}$) 6. அழகும் வியப்பும் (அ$^{4}$), 7. இளமை நாயகனே (க$^{2}$), 8. யாருக்குக் கொடும்பாவி? (க$^{3}$), 9. யார் வருந்த வேண்டும்? (க$^{4}$), 10. கீழ்த்திசைக் கதிரவன், 11. இழந்தால் பெறலாமோ இரகுமானே! (இ$^{2}$),
12. கழக ஆன்றோன்,
13. கொள்கைச் சான்றோன், } (நா$^{1,2}$)
14. அண்ணன் இல்லாத பொங்கல் (அ$^{5}$), 15. எழுக நீ அண்ணா! (அ$^{6}$).

*(க-கலைஞர்; அ-அறிஞர்; இ-முசபர் இரகுமான்; நா-நாவலர்)*

*7. சமுதாயம்*

1. ஆசிரியர், 2. எமதினிய தாயகமே!, 3. வெள்ளிவிழா வந்ததென்ன?, 4. பிரளயம் காண், 5. விடுதலையின் விலை, 6. புரட்சியே வாராய்.

8. விழா

1. தமிழர் திருநாள், 2. பொங்கலோ பொங்கல்.

9. சீர்திருத்தம்

வேடங்கள் நிலைப்பதில்லை!

10. சிறை—நகை

1. சிறையில் திருடினேம், 2. சிறையில் கொலை.

11. கட்சி அரசியல்

1. எமதினிய இயக்கமே!, 2. திருடரிடம் திறவுகோலா?

12. கற்பனை

பகற்கனவு

13. சிந்தனை

பொல்லாத உலகம்

14. வாழ்க்கை

காலம் வளர்ந்திடும்.

1.5. இவ் வகைதொகையால் கவிஞருக்கு எவ்வெப்பொருள் களில் எவ்வெவ்வளவு ஈடுபாடு என்பதை ஒருவாறு உணரலாம்.

1.6. நம் கவிஞர் காதலிலும் அகத்தையும் புறங்காணும் வகை யில் அரசியல் மோதல் ஈடுபாடு உடையவர் என்பது வெள்ளிடை மலை. எண்ணத்தை அளக்க எண்ணிக்கையே இறுதிச்சான்று ஆகாது எனினும் வேறு முரண்பாடுகள் இல்லாதவரை இந்த அளவுகோலை நன்கு பயன்படுத்தலாம்.

பதினுன்கு பெருந்தலைப்புகளில் பொருத்தக்கூடிய ஐம்பத்தாறு, உட்தலைப்புகளை உடைய 'வைகறை மலர்கள்' முதலில் 'புன்னகை' புரிகிறது; முடிவில் 'புரட்சியே வாராய்!' என்று கூவுகிறது! புன்னகை புரிந்து புரட்சிக்கு வழி செய்வது—விழி செய்வது—நல்லதே; வல்லதே. 'வைகறை மலர்கள்' முடிந்த முடிவாக,

பொருள்எலாம் பொதுவாய் மாற்றும்
புரட்சியே வாராய் இங்கே!

என்று முழங்குகிறது. ஆம். இங்கே? இந்த நிலை வந்தால் 99% சிக்கல்கள் தீர்ந்துவிடும்.

1.7. நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள மாண்புமிகு கலைஞர் ஆசிரியருக்கு 'இயல்பான மிடுக்கும் துடிப்பும் தமிழ் வளமும்' அவர்தம்

கவிதைகளில் காணப்படுவதாகக் கூறியுள்ளார். படைப்போன் ஆளுமை படைப்பில் படியும் அடிப்படைப் பண்பைச் சுட்டும் அறி வார்ந்த பகுதி இது. நாவலர் (மிகப் பொருத்தமாக மே தினத்தில் தந்துள்ள கருத்துரையில்) (1) உள்ளத்தைத் தொடும் அரிய நிகழ்ச்சி களை ஒட்டிப்பாடிய கவிதைகளையும் (2) சிறந்த கருத்துக்களை விளக்கிக் காட்டுவதற்காகப் புனையப்பட்ட கவிதைகளையும் (3) கற்பனை ஊற்றில் பிறந்த சிறந்த கவிதைகளையும் (4) பகுத்தறிவு நெறியை விளக்கிடும் கவிதைகளையும் தேர்ந்தெடுத்து நூல் வடிவில் தந்துள்ளார்' என்று 'தெளிவாகவும் திட்பமாகவும்' (தெளிவே—திட்பம் அன்றோ?) தெரிவித்துள்ளார். பேராசிரியர் டாக்டர் மு. வ. கவிஞரின் இதயம் 'பெருங்கடல்' என்றும், அவர்தம் உணர்ச்சிகள் 'பெரும்புயல்' என்றும் உரைக்கின்றார். இந்தத் திறனாய்வுக் குறிப்புகள் எல்லாம் 'உண்மை (தான்); வெறும் புகழ்ச்சி இல்லை!

1. 8. ஆசிரியன் 'அரும்புரை' 'வைகறை மலர்களை' வனப்பு மிக்க வண்ண மலர்களாக வெளியிட விரும்பிய விருப்பத்தின் விழுப் பத்தை விளக்கும். கவிஞரின் கட்டுரைக்கனிமொழிகள் வருமாறு :

'எதைச் செய்தாலும் எழில் மிளிரச் செய்திட வேண்டும்; இல்லை யென்றால் மனம் ஏற்க மறுத்திடுகின்றது. இதனால் ஏற்பட்ட செலவு இரண்டு அல்லது மூன்று நூல்களைக் கொண்டுவரும் அளவிற்கு! எண்ணியதைச் செயலாக்கிடவே இதயம் துடிக்கின்றது; இளமைக் காலம் வேறு!'

* * *

'அழகுற நூல்களை அச்சிட வேண்டும் என்ற ஆர்வத்தை எனது அருமைத் தமிழகத்திற்கு இதன்மூலம் அரும்பாக்குகிறேன்!

* * *

ஆசிரியரின் அரும்புரையின் வாய்மையை 'வைகறை மலர்க'ளில் பக்கத்திற்குப் பக்கம் பாட்டுக்குப் பாட்டுப் பார்க்கலாம். கவிஞரின் கருத்தோவியங்களோடு — சொல்லோவியங்களோடு — போட்டி போடும் அமுதோனின் அழகோவியங்கள் அருமையானவை. சிறப்பாக, 'ஆசிரியர்' 'தேவை இரு சிறகு', 'பொல்லாத உலகம்', 'பார்வைப் பாவம்', 'கவி மது', 'திருடரிடம் திறவுகோலா?' ஆகிய தலைப்புகட்கு அமைந்துள்ள வண்ண ஓவியங்கள் எண்ண ஓவியங்களே ஆகும். இவற்றுள்ளும் 'தேவை இரு சிறகு' என்னிரு கண்களையும் பெரிதும் ஈர்த்தன. இவ்வளவு சிறந்த ஓவியர் குழந்தை பற்றிய இரு பாடல் களில் ஒன்றுக்கும் பிள்ளைக் கனியமுதின் 'பேசும் பொற்சித்திர'த்தை வரையாதது பெருங் குறையே. பிள்ளை இல்லாக் குறையை — ஆண் பிள்ளை இல்லாக் குறையை அடுத்த 'எடிசன்' (இந்த ஆங்கிலத் தமிழ்ச் சொல்லுக்கு ஒரு மரபுப்பொருள் (Idiom—meaning) 'குழந்தை'— உண்டு தெரியுமோ?) — மன்னிக்க வேண்டும்—பதிப்பில்—நீக்குவார் என்று நம்புகிறேன்! என்னால் முடியாது; அவரால் முடியும்! (ஆமாம்! மரபுப் பொருளிலும்)

1. 9. பெரிதும் ஒரு பக்கமே சார்புடைய கவிஞரின் 'வைகறை மலர்கள்' பல பக்கங்கள் (இருபொருளிலும்) உடையதாயினும் ஒரு பக்கத்திற்கும் பண்பாட்டிற்கும் பக்க எண் இல்லை. ஆய்வுரையில் குறிப்புகள் பொறிக்க இப்போது உள்ள இந்த இடையூறு எப்போதும் இரா வண்ணம் ஆசிரியர் பகல் (விளக்கம்) செய்வாராக!

1. 10. எந்த ஒரு தமிழ்க்கவிஞரை ஆராயும்போதும் முதலில் அவர் தமிழ்—தமிழர்—கவிதை—கவிஞர் பற்றிக் கூறியிருப்பனவற்றை வகை தொகை செய்து பார்த்தல் எனக்கு இயல்பு. அந்த அடிப்படையில் பார்த்தபோது கிடைத்தமணிகள் வருமாறு:

1. 10. 1. தமிழ்

1. நறுந்தமிழ் (பக். 18), 2. வண்டமிழ் (பக். 21, 96, 98), 3. அருந் தமிழ் (பக். 14), 4. மணித்தமிழ் (பக். 21), 5. கனித்தமிழ் (பக். 2) 6. இனித்தமிழ் (பக். 21), 7. இயற்றமிழ் (பக். 21), 8. தனித்தமிழ் (பக். 21), 9. தாய்த்தமிழ் (பக். 21), 10. வெல்லுந்தமிழ் (பக். 23, 97), 11. செந்தமிழ் (பக். 88, 89, 107), 12. வரலாறெட்டாத் தமிழ்மொழி (பக். 101), 13. அன்னைத்தமிழ் (பக். 108), 14. தென் தமிழ் (பக். 108), 15. கற்பூரச் செந்தமிழ்.

1. 10. 1. தமிழர்

1. பழமை சான்ற பைந்தமிழர், 2. நாற்றிசைவாழ் நற்றமிழர், 3. சிங்கமாத் தமிழர் (பக். 70).

1. 10. 3. கவிதை

1. வேட்கை மதுக் கவி (பக். 57), 2. பாட்டுப்புதுவெள்ளம் (பக். 2), 3. புதுமைப்பாடல் (பக். 61), 4. பாட்டுப்புதுமை (பக். 72), 5. பாட்டுப்பிள்ளைகள் (பக். 72), 6. முதற் சீரின் மோனைக்கு முடி தாழ்த்தாற்போல் மூன்றும்சீர் ஒத்துவரும் பாட்டில் (பக். 25), 7. கள்ளாகப் பாட்டு (பக். 4), 8. ......உணர்ச்சி உள்ள சொற்களிலே அழகுதனைக் கண்டார், பாட்டுச் சுவைமக்கள் பிறந்தார்கள்! 9. ...... மக்கள் பேசும் சொல்லாலே கவிசெய்தால் என்ன? பாட்டுச்சுவை குறைந்து போய்விடுமோ? (பக். 11), 10. .........கவிப்பூங் காவில் (பக். 13), 11. மழை மழையாக் கவிதைகள் (பக். 18), 12. அமுது கமழ் கவிதைகள் (பக். 18), 13. தூவிய சொற்குழம்பில், தூக்கிய கவிதை (பக். 21).

ஆம். கற்பனையில் தோய்ந்திருந்தான் கவிஞன்; பாட்டுக் களி பிறக்கத் தொடங்கிற்று!

1. 10. 4. கவிஞர்

1. நற்புலவர் 23.

*2. ……………………நாளை
பயின்றிட நேற்றே நூலைப்
படைத்திடும் கவிஞன் !

3. ……………………சொல்லை
நேர்நிறுத்தி இடம்பார்த்துப் போடு வோர்க்கு
நிலவியது கவிஞரெனும் பெயர்தான் ! 8.

4. படைக்கின்றான் இறைவனைப்போல் கவிதைப் பிள்ளை
கவிஞன்எனப் பாடுவார்கள் 9.

5. பயிர்களிலே களைவந்து முளைக்கும் ; நல்ல
பாட்டினிலே அசையொன்று தடுக்கும்.

6. ……………………எழுதுகோலாம்
எழில்வில்.

இவ்வெடுத்துக்காட்டுகள் கவிஞரின் அடிமனத்தில் தமிழ், தமிழர், கவிதை, கவிஞர் பற்றி இருக்கும் கருத்துகளை இயம்பும். உடுக்குறி பெற்றது என் உள்ளங் கவர்ந்த உயர்வுடையது.

1.11. இனி, கவிதைக்கு மூலமாய் இருக்கும் மொழி வகையில் ஆசிரியர் கையாளும் சொற்கள் பற்றி எண்ணலாம்.

1.11.1. புதுச்சொற்கள்

1. இரும்புக்கூழ் 11
2. தன்னேற்றம் 12 = தன்முயற்சியால் பெற்ற உயர்வு.
3. காதல் கொதிகலன் 45
4. இரத்த வாயர் 73

இவற்றுள் இரண்டாவது ஆசிரியர் உள்ளத்தில் அறிவியலின் தாக்குறவைக் காட்டும்.

1.11.2. பேச்சுவழக்குச் சொற்கள்

1. காட்டுறான் 42
2. முடியலையே 62
3. பொச்சரிப்பு 74 : 4 : 3
4. வெறுமனே 103

இவற்றுள் மூன்றாவது அவையல் கிளவியும் ஆம் !

ஆசிரியர் பேச்சுவழக்குச் சொற்களைக் கூடலுக்கு உப்புபோல்—உடல்போல்—பயன்படுத்தல் கருதத்தக்கது.

1. 11. 3. கவிஞர் செல்வராசரின் சொல்வளம் (Diction) பாரதி, பாரதிதாசனை மிகப் பெரிதும் பின்பற்றியது எனலாம். சொற்கள் இவரிடம் எவ்வாறு பற்கள் காட்டி நிற்கின்றன என்பதற்கு இவர்தம் ஒவ்வொரு பாட்டுமே உயரிய சான்று. எனினும், ஓர் எடுத்துக்காட்டு:

> ஒளிநிலா பிடித்து வந்தே உயிர்நிலா வடித்த தைப்போல்
> குளிர்நிலா ஆனாய்! உன்றன் குறுநிலா நெற்றி கூட்டித்
> தளிர்நிலா நடையைப் போட்டுத் தமிழ்நிலா வேலா! என்றன்
> உளநிலாக் கண்ணே! உன்னை உவப்புடன் அணைத்துக்
> [கொள்வேன்!

மழலைச் செல்வத்திடம் மயங்கி மகிழ்ந்து பாடும் இப் பாடலில் கவிஞரின் உணர்ச்சி, உவமை, கற்பனை, கருத்து, எல்லாவற்றையும் காண்கிறோம். எல்லாவற்றிற்கும் மேலாக அவர்தம் சொல்லாட்சித் திறனில் சொக்கிப் போகிறோம். மரபுவழிப் புதுக்கவிதையிலும் மன நிறைவைக் காண்கிறோம். ஆசிரியர் கட்சிப்பொருள் இல்லாமலே அருந்தமிழ்க் கவிதை ஆக்க வல்லவர் என்பதற்கும் 'வைகறை மலர்கள்' வாரி வழங்கும் சான்றுகளுள் ஒன்று இப் பாடல் எனலாம். இவ்விடத்தில் இறுதியாகக் குறிக்கத் தக்கது ஆசிரியர் சொற்களைப் பிளந்து சொற்சிலம்பம் ஆடுவதில் ஆரூண்டுக் காலத்தில், ஆரம்பகாலத்தில், இளமை ஈடுபாடு காட்டி இருப்பினும் முதுமைக்காதல் கொள்ளவில்லை என்பது தெளிவு. கவிஞர் இத்தகைய மலிவுச் சுவையை நாடாது வலிவுச் சுவையை நாடுவது அவர்தம் பண்பறிந்தார்க்கு எளிதில் விளங்கும் ஏற்றம் உடையது.

— டாக்டர் ந. சஞ்சீவி

## மலைநாட்டுத் திருப்பதிகள்

நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளைப்பற்றி வெவ்வேறு காலங்களில் சிலர் எழுதியுள்ளனர். அவையெல்லாம் ஒவ்வொரு திருப்பதியும் இருக்கும் இடத்தையும், அங்குச் செல்வதற்குரிய பிரயாண வசதிகளையும், அந்தந்தத் தலத்து எம்பெருமான் சிறப்புகள் தல விசேடம் தீர்த்த விசேடங்களையும் சுருக்கமான அளவில் தெரிவிக்கின்றன.

திருமால் திருப்புகழ் கூறும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தைப் பல்லாண்டுகள் ஆராய்ந்த இவ்வாசிரியர் ஒவ்வொரு திருப்பதியையும் நேரில் சென்று தரிசித்து, கண்டு கேட்டு அநுபவித்தவற்றை விளக்கமுறத் தெரிவிக்கின்றார். திருப்பதிகளுக்கான வழிவகைகளோடு அப் பதிகள் விளங்கும் இடத்தின் இயற்கை வளங்களையும், கோயில் நடைமுறைகளையும் அங்கு வாழும் மக்களின் பழக்க வழக்கங்களையும், அவ்வத் திருப்பதிகளுக்குரிய திருமொழிகளையும்

கூர்ந்து நோக்கிச் செவ்விய சீரான முறையில் திருப்பதிகளை அறிமுகப் படுத்துகின்றார்.

மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றிற்கு ஆசிரியர் சென்று தாம் கண்டவற்றைப் பிறரும் நேரில் காண்பது போன்ற உணர்வைப் பெறும் வகையில் இந் நூலை இயற்றியுள்ளார். அப் பகுதிகளுக்குரிய ஆழ்வார் பாசுரங்களையும் நன்கு அறிமுகப்படுத்தும் வகையில் அவற்றின் நுண்பொருள்களை ஆங்காங்குத் தெளிவுற எடுத்துக்காட்டி யுள்ளார்கள். வைணவ சமய தத்துவங்களையும் அம் மதத்தின் பக்தி நிலைகளையும், ஆழ்வார் ஆசாரியர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் எடுத்துக்காட்டி இனிய முறையில் சமய உணர்வு மேலெழும் வகையில் விளக்கம் தந்துள்ளார். எனவே, இந்நூல் பிரயாண நூலாக மட்டு மன்றி, மலைநாட்டுத் திருப்பதிகளைச் சிறப்பித்துப் பாடிய ஆழ்வார் பாசுரங்களின் விளக்கமாகவும், வைணவ சமய உண்மைகள் பல வற்றை எடுத்துக்காட்டும் தத்துவ விளக்க நூலாகவும் இது அமைந்து விளங்குகின்றது. ஏற்ற இடங்களில் ஆழ்வார்களின் அருளிச்செயல்களை எடுத்துக்காட்டியதோடு, அவற்றிற்குரிய அரும்பத விளக்கங்களையும் அடுத்துத் தந்துள்ளார். பொருளுணர்ந்து பாடலைப் படித்து அனுப்புவ தற்கு இது ஏற்ற துணையாகும். இத்தகைய விளக்கங்களையும் இடை யிடையே தாராமல் அந்தந்தப் பக்கங்களில் அடிக்குறிப்பாகவே தந்திருந்தால் சிறப்பாயிருந்திருக்கும் என்று தோன்றுகிறது.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடலடிகள், சொற்கள், இரகசி யக் கிரந்த விளக்கங்களையும் தம்முரையுடன் இணைத்து இழைத்துக் குழைத்துச் சொல்கின்ற திறமும் பாராட்டுக்குரியதாம். தம்முடைய உரை விளக்கத்தில் கலந்து வரும் மேற்கோள்களுக்கு, மற்றும் தொடர் களுக்கு உரிய இடங்களும் அடிக்குறிப்பில் காட்டப்பட்டிருப்பது பெரிதும் பாராட்டுக்குரியதொன்றாகும்.

இத்தகு பெரு நூலிலும் ஒரு சில செய்திகள் மரபுக்கு ஒத்தனவாக இல்லை. பக். 9-ல் 'சீனிவாசன்' என்றும், பக். 10-ல் 'ஸ்ரீநிவாசன்' என்றும் தருகிறார். 'பக்தர்'களுக்குப் 'பேட்டி' அளித்துவரும் பெருமா னல்லவா?' (பக். 12) என்பதில் இறைவனுக்கும் இன்றைய 'பேட்டி' சென்றுவிட்டது வியப்புத் தரலாம்.

திவ்வியப் பிரபந்தப் பாடல்கள் பப்பத்தாக அமைந்தபோதிலும் அவற்றைத் 'திருமொழி' என்று சொல்வதுதான் மரபு. இவ் வாசிரியர் தேவாரத்திற்குச் சுட்டுவதுபோல 'பதிகம்' எனப் பல இடத்தும் எழுதுவது புதுமையாய்த் தோன்றுகிறது.

பக்கம் 51-ல் அனந்தபுரத்தில், 'ஆண்டிற்கொரு முறை 'முரஜபம்' என்ற சமய வழிபாடும் தவறாது நடைபெற்று வருகிறது' என்று குறிப் பிடுகின்றார். இங்கே 'முரஜபம்' என்பது, 'முறை ஜபம்' என்றிருக்க வேண்டும். இதனை, ஆண்டுக்கொரு முறை நடைபெறுவதாகச் சொல்

வதும் பொருந்தாது. இது குறித்துச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) பின்வருமாறு விளக்கம் தருகிறது:

> "முறை ஜபம் - பிராமணர்கள் விரதமிருந்து நீரில் நின்று வேத மோத திருவிதாங்கூர் அரசாங்கத்தார் ஆறு ஆண்டுக்கொரு முறை நாற்பத்தொன்று அல்லது ஐம்பத்தொரு நாள் நடத்தும் ஒரு பெருஞ் சடங்கு."

காலச் சூழலில் திருவிதாங்கூரிலே ஊட்டுப்புரைகள் எடுபட்டுப் போனது போலே இந்த முறை ஜபமும் இப்பொழுது நின்று போயிருக் கிறது.

பக்கம் 179-ல் 'ஆல்வாய்' என வழங்கும் ஊர்ப் பெயரை ஆங்கிலத் திரிபுபற்றிய வழக்கையொட்டி 'ஆல்வே' எனத் தருதலும் அவசியமற்றதாம்.

ஒரு சில செய்திகள் கூறியது கூறலாக வெவ்வேறு இடங்களிலும் வருகின்றன. மலையாளத்திலுள்ள கோயில்கள் திறந்திருக்கும் நேரம் பல இடங்களில் சுட்டப்பட்டிருக்கிறது. திருமந்திரம், துயம், சரம சுலோகம் என்னும் இவை பற்றிய விளக்கமும் வெவ்வேறிடங்களில் மீண்டும் மீண்டும் வருகின்றன (பக். 74, 200). எல்லாவற்றிற்கும் மேலாகப் பொருள் மயக்கம் தரும் வகையில் பிழைகள் மலிந்துள்ளன. இவையெல்லாம் சீர்பெற அமைதல் இனி வரும் பதிப்புக்கு ஏற்றமாம்.

புதிய சொற்பொருள் விளக்கங்கள் சிலவும் இந் நூலால் தெரிய வருகின்றன. பக்கம் 111-ல் 'கலம்பகன்—பல மலர்களால் தொடுக்கப் பட்டது' என்பதனை, ஈட்டுத் தமிழ் கொண்டு விளக்குகிறார். கலம்பகம், கலம்பக மாலை என்பனவற்றைப் போலவே, 'கலம்பகன்' என்னும் இச் சொல்லும் அகராதியில் இடம்பெறத் தக்கதே.

'தெங்கு என்பதனை யாழ்ப்பாணத்தார், 'தேங்கு' என வழங்கு கின்றனர். இதனைத் தமிழ்ப் பேரகராதியின் பிற்சேர்க்கைத் தொகுதி தெரிவிக்கின்றது. ஆனால், அங்கே இலக்கிய ஆட்சி எடுத்துக்காட்டப் படவில்லை. 'புல்லிலைத் தேங்கினூடு கால் உலவும்' எனத் திருவாய் மொழியாட்சியுள்ளமையை (8, 9, 7) இந் நூலுள் ஆசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார். இவ் வழக்குப் பிற்கால நூலான அப்பாண்டை நாதர் உலாவிலும் காணப்படுகிறது.

இந் நூலுள் குறைகள் ஒருசில காணப்பட்டபோதிலும், மொத்தத் தில் இது சிறந்ததொரு பிரயாண இலக்கியமாக, வைணவ பத்தி இலக்கியமாகத் திகழ்கிறது என்பதில் ஐயமில்லை. இனிவரும் பதிப்பில் மேலும், தெளிவும் இனிமையும் பயந்து இந் நூல் ஏற்றமுறுவதாக.

மலைநாட்டுத் திருப்பதிகள்: 'அருங்கலைக்கோன்' வித்துவான், டாக்டர் ந. சுப்புரெட்டியார், எம். ஏ., பி.எஸ்சி., எல்.டி.,

பிஎச்.டி., தமிழ்ப் பேராசிரியர், திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி. வெளியீடு: எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை, திருநெல்வேலி — சென்னை.

— மு. சண்முகம் பிள்ளை

## இலக்கிய மலர்கள்

'பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்' என்ற பாட்டுக்கொரு புலவன் பாரதியின் கனவைப் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள் இந்நூலின்வழி நனவாக்குகின்றார். உலக இலக்கியப் பூஞ்சோலையிலிருந்து நமக்குச் சில. நறுமண மலர்களை எடுத்துத் தந்துள்ளார்.

இராபர்ட் பிரௌனிங் (Robert Browning—Pippa Passes), வில்லியம் ஹென்ரிடேவிஸ் (W. H. Davies—Leisure), ரால்ப் ஹாஜ்ஸன் (Ralp Hodgson—The Bull), பிரான்சிஸ் தாம்சன் (Francis Thompson—The Hound of Heaven) ஆகியோரின் பாடல்களைத் தீந்தமிழ்ப் பாடல்களாக இந் நூலில் தேனைக் குழைத்துத் தந்திருக்கின்றார் ஆசிரியர். இந் நூலில் இடம் பெற்றுள்ள வேறு சில மலர்கள் தமிழ்ச்சோலையில் திரட்டப் பெற்றவையாகும்.

'பிப்பா செல்கின்றாள்' என்னும் இராபர்ட் பிரௌனிங்கின் இனிய பாடலோடு நம் நாட்டு ஞானியாகிய ஆழ்வார் பாடலையும், கவிஞன் என்ற நிலையில் இருந்தே ஞானத்தை எட்டிய பாரதியாரின் பாடலையும் இணைத்துச் சுவையாகக் கருத்து விருந்து படைக்கின்றார். பிரௌனிங் அமைத்த நாடக உலகத்திற்கு நம்மையும் அழைத்துச் சென்று ஸிபால்ட்டும், ஆதிமாவும் காமவெறியில் கொலைசெய்த காட்சியையும், இறுதியில் அவர்கள் வேதனைத்தியிலே மீண்டும் அக் கொடுமைகளைச் சுட்டெரித்து மற்றொரு ஆன்மாவுக்காக வேண்டும் உளநிலையைப் பெறுவதையும் நன்கு சித்திரித்துக் காட்டுகின்றார்.

விட்டு முற்றத்திலே சிதறிக்கிடக்கும் நெல்மணிகளைத் துள்ளித் துள்ளிப் பொறுக்கிக் கொண்டிருக்கும் சிட்டுக்குருவி பாரதியாருக்குக் கவிதை பிறக்கக் காரணமாயிற்று. 'செங்கால் நாரையினைத் தூதாக அனுப்பியவர் சத்திமுற்றப் புலவர். ஆங்கிலக் கவிஞன் வில்லியம் ஹென்ரிடேவிஸ் எழுதிய 'மீன் கொத்திப் பறவை'யே இவற்றோடு இணைத்துக் கவிஞர்களின் உள்ளத்தைத் திறனாய்வு செய்கின்றார் ஆசிரியர்.

'கடைசிக் கனவு' என்னும் தலைப்பில் இந்த நூற்றாண்டு ஆங்கிலக் கவிஞரான 'ரால்ப் ஹாஜ்ஸன்' என்பவரின் 'கிழ எருது ஒன்றின் கடைசிக் கனவு' என்னும் கவிதையை ஆய்கின்றார். அவர்தம்

திறனாய்வுக் கருத்து உற்று நோக்கியும் ஒப்பு நோக்கியும் அமைந்துள்ள தாகத் திகழ்கிறது.

> "மாட்டின் வாழ்க்கைக்குள்ளே, மனித இதயத்தைக் கொண்டு போய்ப் பொருத்தி அந்த உலகத்தைப் பார்க்கிறான். அவன் பாடலில், கொம்புக்கும் குளம்புகளுக்கும் இடையிலே மனித உள்ளம் நின்று துடிக்கிறது. அழகு, பயங்கரம், பழைய நினைவு, இரக்கம்—இவையெல்லாம் மனிதனுக் குரியவை. இவற்றின் ஒளியில், சாகும் கிழமாடு ஒன்றின் சொல்லற்ற, உருவற்ற மிருகவேதனை, சொல்லும், உருவும், தெளிவும் பெறுகிறது.
>
> 'இனி நினைந்திரக்கம் ஆகின்று' 'கழிந்துபோன என் கல்லா இளமை'யை இன்று — கோலூன்றித் தள்ளாடும் இந்த முதுமைப் பருவத்தில்—எண்ணி இரக்கப்படுகிறேன்' என்று சங்க காலத்துத் தமிழ்க் கவிஞன் பாடினான்.
>
> இத்தகைய இரக்கந்தான் ஆங்கிலக் கவிஞன் ஹாஜ்ஸன் என்பவனுடைய கையில், எருதின் கடைசிக் கனவாக வடி வெடுத்தது" (பக். 65)

என்று சங்க காலத் தமிழ்க் கவிஞனின் உள்ளத்தையும், ஆங்கிலக் கவிஞனுடைய உள்ளத்தையும் ஒப்பிட்டுப் பேசுவது உளங்கொளற் குரியது.

மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்கு ஆண்டாளுடைய திருப் பாவை என்ற அருமையான இலக்கியம் எங்ஙனம் உதவுகிறது என் பதை எளிய சொற்களால் உணர்ச்சி ததும்ப விளக்குகின்றார் ஆசிரியர். ஆண்டாளுடைய பக்தி உணர்வு இந்த மண்ணை—நாம் நடமாடும் இந்தப் புழுதியை இறைவனுடைய விளையாட்டுத் தலமாகக் கொண்ட பாவனை யையும், இந்த உலகம் அவளுக்கு இறைவன் நடமாடுகின்ற பிருந்தா வனமாகவும், இங்குள்ள இன்பங்கள்—அவனை மறைக்கின்ற இடர்ப் பாடுகளாகத் திரியாமல்—கண்ணனோடு கூடியிருந்து பெறும் இன்ப மாகவும் திகழுவதை நன்கு விளக்கியுள்ளார்.

கற்பனைத் தீயிலே தோய்த்துத் தோய்த்து, நமது நெஞ்சைச் சொல், சந்தம் என்ற சம்மட்டி கொண்டு எப்படிக் கவிதைக் கொல்லன் அடித்து உருவாக்குகிறான் என்பதைக் கம்பர், பாரதியார், அப்பர், ஆண்டாள் ஆகியோர் பாடல்கள் வழி அருமையாக விளக்குகின்றார். 'கிறிஸ்துபிறந்தார்' 'மார்கழித்திங்கள்', 'மணல்வீடு', 'இருளில்ஒளி' முதலான கட்டுரைகளில்—ஆசிரியர் நீண்ட காலமாக 'ஊன்கலந்து உயிர்கலந்து' சுவைத்து மகிழும் இலக்கிய அனுபவத்தைக் கண்டு மகிழ் வதுடன் படிக்கும் போது நாமும் அதனைப் பெற்று மகிழ்கின்றோம்.

நுணுகி நுணுகித் திறனாய்வு செய்யும் ஆசிரியரின் உள்ளப் பாங்கும், அழகும் இக் கட்டுரைகளில் இனிது புலனாகின்றன.

'கல்கி' இலக்கியப் பூங்காவில் முகிழ்த்து மலர்ந்த இவ் 'இலக்கிய மலர்கள்' எழிலும் மணமும் ஒருங்கே பெற்றுத் திகழ்கின்றன என்று உறுதியாகக் கூறலாம்.

*இலக்கிய மலர்கள் :* அ. சீநிவாசராகவன், மெர்க்குரிப் புத்தகக் கம்பெனி, கோவை, பக்கம் 160 ; 1964, ரூ. 2-50.

—இ. சுந்தரமூர்த்தி

## பரணிப் பொழிவுகள்

சந்தக்கவிமன்னர் சயங்கொண்டாரின் கலிங்கத்துப்பரணி, பரணி இலக்கிய வகையில் தன்னிகரற்றது; 55 சந்த வேறுபாடுகளைக் கொண்டது ; குலோத்துங்கனின் குலச்சிறப்பை — கலிங்கத்துக் கள வெற்றியைக் 'கவித்துவம்' மிளிர எடுத்துரைப்பது ; கற்பனையிடை யிட்ட வரலாற்றுப் பெட்டகமாக மிளிர்வது.

இப் பரணியைப் பற்றித் திருவேங்கடவன் பல்கலைக் கழகம், பாக்காலா தமிழ்ச் சங்கம் ஆகியவற்றின் ஆதரவில் முனைவர் திரு. ந. சுப்புரெட்டியார் அவர்களால் நிகழ்த்தப்பெற்ற ஆறுநாள் கருத்தரங்கக் கட்டுரைகளே இந் நூல்.

இதன்கண் அறிமுகம், கடைத்திறப்பு, பேய்கள் உலகம். வர லாற்றுக் குறிப்புகள், பரணிகாட்டும் சுவைகள், மும்மணிகள் என்னும் ஆறு கட்டுரைகளோடு பொருட்குறிப்பு அகராதியும் இடம் பெற் றுள்ளது.

"தோல்வியுற்றோரையும் பெருமைபடுத்தும்
உயர்பண்பு தமிழர்களிடையே என்றும்
நிலவி வந்தது என்பதனைப் பரணி நூல்கள்
தம் பெயர்களால் பறைசாற்றி நிற்கின்றன"

(பக். 6)

என்னும் கருத்தை உள்ளடக்கியது அறிமுகம் என்னும் முதல் கட்டுரை. நூலை அறிமுகப்படுத்த முனைந்த இக் கட்டுரையில் பெயர்க் காரணம், பரணி இலக்கணம், தோற்றம், தோன்றக் காரணம், நூலமைப்பு என்னும் பொருள்களில் தம் கட்டுரையை ஆராய்கின்றார்.

கடைதிறப்பு என்னும் கட்டுரையில், கடைதிறப்புப் பாடல்கள் ஆசிரியரே மகளிரை விளிப்பதாக அமைந்துள்ளனவா, அன்றி மகளிரே

மகளிரை விளிப்பதாக அமைந்துள்ளனவா என ஆய்கின்றூர். மேலும், இப் பகுதியில், ' முருகிற் சிவந்த கழுநீரும், முதிரா இளைஞர் ஆருயிரும், திருகிச் செருகும் குழல் மடவார்' தம் உறுப்பு நலன், புன்முறுவல், புணர்ச்சி இயல்பு, ஊடல், கூடல், பிற இயல்புகள் ஆகியவற்றை தொகுத்துரைக்கின்றூர்; இடையிடையே சங்க இலக்கியப் பாடல்களையும் (இலக்கிய நயம்பட) ஒப்புமை காட்டுகின்றூர்.

'பேய்கள் உலகம்' என்பதில், காட்டின் இயல்பு, பேய்களின் இயல்பு, அவற்றின் செயல், காளிதேவியின் திருக்கோயில் அமைப்பு, வழிபாடு ஆகியவற்றை ஆராய்கின்றூர்.

நான்காம் கட்டுரையில், கற்பனையூடே பொதிந்து கிடக்கும் வரலாற்றை வெளிப்படுத்துகின்றூர். மற்றும் அக் கால மக்களின் ஆடை, அணி, பொழுது போக்கு ஆகியவைகளையும் எடுத்துரைக்கின்றூர்.

பரணி காட்டும் சுவைகள் என்னும் 5-வது கட்டுரையில், சுவையின் இயல்பை விளக்கி, எண்வகைச் சுவைக்கும் எடுத்துக்காட்டுகள் தருகின்றூர். இறுதியில் குலோத்துங்கன், கருணுகரத் தொண்டைமான், செயங்கொண்டார் ஆகியோரின் சிறப்பை விளக்குகிறூர்.

நிறைவினூடே சில குறைகளும் தட்டுப்படுகின்றன. மீண்டும் என்பதற்கு மீண்டுல் என்றும் (பக். 20), கண்ட என்பதற்குச் 'சுண்ட' என்றும் (பக். 24), இராசாதிராசனே என்பதற்கு இராசாதிசனே (பக். 94) என்றும் சில அச்சுப் பிழைகளும், மேற்கோள் பாடல்களிலேயே காணப்படும் அச்சுப் பிழைகளும், தவிர்க்கப்பட்டிருப்பின் இன்னும் சிறப்பாக இந் நூல் அமையலாம். அன்றியும், ஒரே கருத்து மீண்டும் கூறப்படுகின்ற நிலையைச் சில இடங்களில் காண முடிகின்றது. எடுத்துக்காட்டாக, குறையுறுப்புப் பெற்ற பேய்களின் செயல்கள் (பக். 83, 135), சயங்கொண்டார் நூல் இயற்றிய வரலாறு (பக். 15, 175) என்பனவற்றைக் கூறலாம்.

இந் நூல் முழுவதும் தெளிந்த எளிய நடையில் இலக்கிய நயம் பொதுள அமைந்துள்ளது ; கட்டுரை ஒட்டம் படிப்பாரை மேன்மேலும் படிக்கத் தூண்டும் கதைப் போக்காக அமைந்துள்ளதோடு, மூல நூலைக் கல்லாரும் கற்குமாறு தூண்டும் வினைத்தூண்டி (கிரியா ஊக்கி)யாகவும் அமைந்துள்ளது இந்நூலின் தனிச்சிறப்பு எனலாம்.

> "யான் கையாளும் மொழியும் நடையின் போக்கும் கேட்
> பாரைப் பொருளினுள் இழுத்துச் செல்லுதல் வேண்டும்"
>
> (பக். 119)

என்று ஆசிரியர் கொண்ட உறுதி இந் நூல் முழுமையும் காணலாம்.

பரணிப் பொழிவுகள்: டாக்டர் ந. சுப்பு ரெட்டியார், திரு வேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி; உரிமை: திரு வேங்கடவன் பல்கலைக் கழகம். பக். 4+184; ரூ. 4.

— கு. மோகனராசு

## இரணியவதைப் பரணி

பரணிப் பதிப்பு வரலாற்றில் தி. ஆ. கன்னையா நாயுடுவின் கலிங் கத்துப்பரணிப் பதிப்பும், டாக்டர் உ. வே. சாமிநாதையரின் தக்க யாகப் பரணிப் பதிப்பும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை. திரு. நா. வரதராசுலு நாயுடுவின் இரணிய வதைப் பரணி அச் சிறப்பு வரிசையில் இடம் பெறத்தக்கது. முதல் நாற்பத்து நான்கு பக்கங்களில் விரிவாக விளக்கம் பெற்றுள்ள தோற்றுவாய், ஆசிரியர் நூலுடன் தோய்ந்து எழுதிய திறனைத் துலக்குகிறது. இரணியன் - பிரகலாதன் வரலாறே இப் பரணிக்குரிய கரு. பதிப்பாசிரியர், சமசுகிருத இலக்கியங் களிலும், தமிழிலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ள இரணியன் தொடர்பான செய்திகளை அரிதில் முயன்று திரட்டித் தந்துள்ளார். ஆசிரியர் பெயர் அறியப் பெறாத இந் நூலின் காலம் கி. பி. 12 அல்லது 13 ஆம் நூற்றாண்டு என முடிவு செய்திருப்பது பொருந்துவதே. பரணியைக் காவியம் என்றிவர் அழைப்பது அத்துணைப் பொருத்தமாக இல்லை. இரணியவதைப் பரணியில் ஒறுத்தலையும் அருளலையும் காண்கிறோம். ஏனைய பரணி நூல்களில் ஒறுத்தல் மட்டுமே உள்ளது; அருளல் இல்லை. இது போன்ற வேறு சில ஒற்றுமைகளும் வேற்றுமை களும் உள்ளன. அவற்றை நுனித்தறிந்து பதிப்பாசிரியர் சுட்டியுள் ளார் (பக். 31). அரிஸ்தோதல், மில்டன் ஆகியோரைச் சுட்டிக்காட்டி, ‘தமிழ் மொழிக் காவியங்களில் பரணி மட்டுமே இந்த மேல் நாட்டு மரபைப் பின்பற்றுகிறது (பக். 4) என்று பதிப்பாசிரியர் குறிப்பிட் டுள்ளார். இக் குறிப்புச் சரியன்று. சமசுகிருத நூல்கள் பிறப்பி லிருந்து கதையைத் தொடங்க, இளங்கோ திருமண நிகழ்ச்சியினின்றே தம் காப்பியத்தைத் தொடங்குவது இங்கே நினைக்கத்தக்கது. வேறு சில பிளேபேக் (Plag Back) உத்திகளை இளங்கோ அடைக்கலக்காதை யில் கையாண்டுள்ளார். ஆதலால் இத்தகு உத்திமுறை இறக்குமதி என்று கருத வேண்டா. ‘பரணிகள் யாவும் தோற்றோரையே தம் பெயரால் குறிப்பன’ (பக். 2) என்று பதிப்பாசிரியர் குறிப்பதும் பொருந்துவதாக இல்லை. கலிங்கத்துப் பரணி, கூடல் சங்கமத்துப் பரணி என்ற பெயர்கள் வென்ற இடத்தை அடிப்படையாகக் கொண்டு பெயர் பெற்றவை. மூலமும் குறிப்புரையும் ஆக அமைந்திருக்கும் இப் பதிப்பு, ஆசிரியரின் கைத்திறத்தால் விரிவுரையாகவும் அமைந்து வெளி வருமானால், பரணிப் பதிப்பு வரலாற்றில் ஆசிரியர் பெயர் முனைப்பாக இடம் பெறும் என்பதில் ஐயமில்லை.

*இரணிய வதைப் பரணி மூலமும் குறிப்புரையும்* : பதிப்பாசிரியர் : நா. வரதராசுலு நாயுடு, சாந்தி அறக்கட்டளை, தாச நாயக்கன் பாளையம், பொள்ளாச்சி, 1974, விலை ரூ. 5.

— கா. ப. அறவாணன்

## உணர்வின் விழிப்பு

மீனாட்சி எட்டு வயதிலேயே தந்தையை இழந்தவள். தாய் காமாட்சியோடு சென்னை மயிலாப்பூரில் சொந்த வீட்டில் வாழ்ந்து வருகிறாள். படிப்பு அவ்வளவாகக் கிடையாது; ஆனாலும் புத்தி கூர்மை மிகுதி. எதையும் எளிதில் புரிந்து பற்றிக்கொள்ளும் அறிவு. ஒரு நாள் கடிதம் ஒன்று வருகிறது. காமு எனப்படும் காமாட்சியம்மாளின் சிறு வயதுப் பருவத் தோழி மகன் சண்முகம் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டுச் சென்னைக்கு அவள் ஆதரவில் தங்கிப் படிக்க வரலாமா என்று கேட்டு, கோட்டையூரிலிருந்து அக் கடிதம் வருகிறது. அக் கடிதத்திற்குப் பதில் போடவில்லை காமு. ஆனால், இரண்டொரு நாளில் பள்ளிப் படிப்பை முடித்த பையன் சண்முகனே சென்னைக்குக் காமாட்சியம்மாள் வீட்டிற்கு வந்துவிடுகிறான். காமுவின் அனுமதியின் பேரில் வெளியே சாப்பாடு வைத்துக்கொண்டு அவர்கள் வீட்டிலேயே மாடியறையில் தங்கிப் படிக்கிறான் சண்முகம். மீனாட்சி, சண்முகம் இருவருக்கும் ஒருவரையொருவர் பிடித்துப் போகிறது. ஆனால் தங்கள் உள்ளத்து உணர்ச்சிகளை இருவரும் விண்டுரைக்கவில்லை. ஓர் ஊமை நாடகம். அவ்வளவு தான்! இதனை நாவல் ஆசிரியையே பின்வருமாறு குறிப்பிடுகின்றார் :

“அவளுடைய சரளமான சுபாவம், ஒட்டிக் கொண்டு பழகும் தன்மை, அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவள் காட்டும் அக்கறை நிறைந்த பரிவு, பேச்சின் கனிவு, மாறாத மரியாதை, மறையாத சிரிப்பு ஒவ்வொன்றிலும் மனத்தைத் தொடுகின்ற வன்மை தெரிந்தது அவனுக்கு.’

இண்டர் முதலாண்டுத் தேர்வு முடிகிறது. விடுமுறைக்கு ஊருக்குப் போகிறான் சண்முகம். விடுமுறையைக் கழித்து விட்டுச் சென்னை வந்து இரண்டாமாண்டு படிப்பைத் தொடர்கிறான் சண்முகம். சமவயதுடைய மீனாட்சியோடு நெருங்கிப் பழகும் சந்தர்ப்பங்கள் வாய்க்கின்றன அவனுக்கு. வரம்பு ஒரு சிறிதும் கடவாத நிலையில் அவர்கள் நட்பு வளர்கின்றது. இதனிடையில் மீனாட்சியைப் பெண் பார்க்க வருகிறார்கள். திருமணம் நிச்சயமாகிறது. “அவன் காலடிகளில் தன் தலையை வைத்து விம்மி விம்மி அழ வேண்டும்போலிருந்தது அவளுக்கு. ஆனால் அந்தத் தனிமையிலுங்கூட, இரவின் நெருக்கத்திலும் கூட, அவர்களுக்கிடையே ஆழ்ந்த ஒரு பள்ளம், தாண்டக் கூசுகிற ஓர் இடை வெளி இருப்பது போலத்தான் தோன்றியது அவளுக்கு.”

இது திருமணம் நடைபெறுவதற்கு நான்கு நாள்களுக்கு முன்னர் மீனாட்சியின் மனநிலை இருந்த நிலையாகும்.

திருமணம் முடிகிறது. சண்முகத்தின் ‘இண்டர்’ படிப்பும் முடிகிறது. முதல் வகுப்பில் தேறுகிறான். மீனாட்சியை மணந்தவன் பர்மாவில் பணியாற்றுபவன். அங்கே போய் குடும்பம் அமைப்பதற்குரிய ஏற்பாடுகள் செய்துவிட்டுத் திரும்பவந்து மீனாட்சியை அழைத்துப் போவதாகச் சொல்லிப் பர்மாவிற்குப் போய்விடுகிறான். மீனாட்சி தாய் வீடு வந்து சேருகிறாள். பர்மாவிலிருந்து உற்சாகந் தரத்தக்க கடிதம் ஏதும் வரவில்லை. சில ஆண்டுகளும் உருண்டோடுகின்றன. மீனாட்சியின் கணவன் பர்மாக்காரி ஒருத்தியோடு வாழும் செய்தி அங்கிருந்து வந்தோரால் காமுவிடம் சொல்லப்படுகிறது. மீனாட்சி பெரிதும் திடுக்கிட்டுத் துன்புறுகிறாள். சண்முகம் அவள் மனப் புண்ணை ஆற்ற முயல்கிறான். சண்முகத்தின் அம்மா ஊமையாச்சி மகனுக்குத் தன் சகோதரன் மகள் பார்வதியை மணப் பெண்ணாக நிச்சயம் செய்கிறாள். சண்முகம் தன் கல்லூரி நண்பன் சேகரின் தந்தை நடத்தி வரும் நல்ல ‘கம்பெனி’ ஒன்றில் வேலைக்கு அமருகிறான். அஞ்சல் வழி உயர்படிப்பினை மீனாட்சி சண்முகம் உதவியுடன் படித்து வருகிறாள். சண்முகம்-பார்வதி திருமணம் நடந்து முடிகிறது. மீனாட்சியின் பக்கத்து வீடு காலியாகிறது. அங்கேயே புதுமண மக்களின் புதுத் தனிக் குடித்தனம் தொடங்குகிறது. சேகர் பத்மா என்ற படித்த பெண்ணைக் காதலிக்கிறான். இருவரும் திருமணம் செய்து கொள்வதற்கு முன் நெருங்கிப் பழகக் கூடாது என்று சண்முகம் தடுத்ததின்பேரில், இரண்டு ஆண்டு படிப்பை முடித்து விட்டுப் பத்மா சேகரைத் திருமணம் செய்துகொள்வதாய் உறுதி கூறிவிட்டுப் பத்மா வெளியூர் போய்விடுகிறாள். சண்முகம் பார்வதி இவர்களின் இல்லறம் மீனாட்சியின் துணையுடன் இனிதே நடைபெறுகிறது. பார்வதி கருவுறுகிறாள். அவள் தாய்வீடு போகிறாள். உடல் நலக் குறைவால் கரு சிதைந்து விடுகிறது. பின்னர்க் கருவுற்று ஆண் குழந்தையொன்றைப் பெற்றெடுக்கிறாள். குமரேசன் எனப் பெயர் வைக்கிறார்கள். சண்முகம் மீனாட்சியை மறக்க முடியவில்லை. மீனாட்சியின் நிலைமையும் அவ்வாறே. ஒரு முறை “மீனாட்சி!” என அழைக்கிறான். “அவன் குரலில் பொங்கிய உணர்ச்சியையும், திணற வைக்கும் மனக் கொந்தளிப்பையும் அவள் புரிந்துகொண்டு விட்டாள். அதற்கு மேல் அங்கே இருந்தால் தன் மனமும் நெகிழ்ந்துவிடுமோ என்ற கலக்கம் ஏற்பட்டது அவளுக்கு. அவனை ஒரு முறை நிமிர்ந்து பார்த்து விட்டு சரேலென்று வாசலுக்குப் போய்விட்டாள்.”

இதனால் இருவர்தம் மனப்போராட்டம் நன்கு விளங்கும். மீனாட்சியின் தாய் சில நாள் காய்ச்சலில் இறந்துவிடுகிறாள். இதற்குமுன் மீனாட்சி அவள் கணவனால் அழைத்துக் கொள்ளப்படும் வரையில் அவளைக் காப்பாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறாள். மீனாட்சி அஞ்சல் வழிக் கல்வி பயின்று முடித்து ஆசிரியையாகிறாள். பார்வதி

மீனாட்சியை 'அக்கா, அக்கா' என அழைத்து அன்பு மிகப் பாராட்டு கிறாள். மீனாட்சி, "உன் மனது எனக்குப் புரிகிறது பார்வதி" என் கிறாள். "அக்காவும் அதைப் புரிந்து கொண்டால் போதும். உங்க ளுக்கு அவர்மேல் எத்தனை அன்பும் அக்கறையும் உண்டு என்பது எனக்குத் தெரியும். வாழ்க்கையில் இருண்ட நேரங்களில், ஒரு துணை வெளிச்சமாக உங்களைத்தான் அவர் எதிர்பார்க்க முடியும். அக்கா இதைப் புரிந்து கொண்டால் போதும்" என்கிறாள் பார்வதி.

சண்முகம் அலுவலகத்தில் உயர் பதவி பெறுகிறான். செல்வச் செழிப்பான நிலை. எங்கே சண்முகத்தின் அன்பு தன்னைப் பிணித்துத் தன்னைப் பலவீனமாக்கி விடுமோ என்று கருதி, மீனாட்சி பர்மாவுக்குப் போகப் போவதாகக் கூறி, வலுவில் அவர்களிடமிருந்து விடைபெற்றுச் சென்று விடுகிறாள். பார்வதிக்குப் பெண் குழந்தை பிறக்கிறது. 'மீனாட்சி' எனப் பெயரிட்டு வளர்த்து வருகின்றனர். வளர்ந்து மீனாட்சி பெரியவளாகிறாள். அசப்பில் அந்த மீனாட்சியை நினைவுபடுத்துகிறாள். ஒருநாள் அலுவலகத்திற்கு ஒரு பையன் வந்து, தான் மீனாட்சியின் வளர்ப்பு மகன் என்றும், அவள் சாகக் கிடப்பதாயும், அவனை அழைத்து வரச் சொன்னதாயும் சொல்கிறான். குடும்பத்துடன் சண் முகம் செல்கிறான். இது நாள்வரை பதினைந்து ஆண்டுகள் சென்னை யிலேயே மறைந்து வாழ்ந்து வந்த மீனாட்சியை அனைவரும் பார்க் கின்றனர். மீனாட்சியின் நல்லுயிர் மகிழ்ச்சியுடன் திருப்தியுடன் பிரி கிறது. சண்முகத்திற்கு "எட்டாத—ஆனால் மனத்தளவில் என்றும் நெருங்கிய, எப்போதும் மறையாத—அந்த அன்பு செறிந்த உணர்ச்சி களுக்கு உறக்கம் இல்லை; மறைவும் இல்லை. என்றும் அவை விழித் திருக்கும்."

286 பக்கங்கள் கொண்ட இந் நாவலைக் கையில் படிக்க எடுத்து விட்டால் முடிக்காமல் வைக்கத் தோன்றாத அளவிற்கு நாவிலில் சுவை உளது. உணர்வுகளின் சிலிர்ப்புகளை மெல்லிய வீணையில் மீட்டி இனிய இசையினை நாவலாசிரியை நம் மனத்தே எழுப்புகிறார். சிறிதும் விரசம் தலைதூக்காத ஒரு நாவல். நுண்ணிய தூய காதல் உணர்வுகள் இந் நாவலின் தொடக்கத்திலிருந்து இறுதி வரையிலும் இழையோடு கின்றன. இந் நாவலைப் படிக்கும் பொழுது மனம் பண்படக் காண லாம்.

மீனாட்சி பாத்திரம் நன்றாக வடிக்கப்பட்டுள்ளது. 25 அத்தியாயங் களிலும் மீனாட்சி நிறைந்தொளிர்கிறாள். அவள் பண்பாடு போற்றத் தக்க பண்பாடாகும். சண்முகம் ஆண் என்றாலும் அவசரக்காரனாக இல்லை. நிதானமும் புத்தித் தெளிவும் அவன் சிறப்புப் பண்புகள். பார்வதி ஓர் உயரிய பெண். மீனாட்சியிடத்தில் அளவு கடந்த அன்பு; அதே நேரத்தில் தன் கணவனிடத்திலும் ஆழ்ந்த பெரு நம்பிக்கை.

இவ்வாறு இம் மூன்று பாத்திரங்களும் இந் நாவலில் உயிர் கொண்டு உலவுகிறார்கள்.

"காதல் என்பது ஓர் அழகிய கனவு; அவ்வளவுதான், காளி தாஸனுக்கும் ஷேக்ஸ்பியருக்கும் அது ஓர் அருமையான கவிப்பொருள், அம்மட்டும்தான். நித்திய வாழ்க்கையில் அதற்கு இடம் இல்லை என்பது என் அபிப்பிராயம் என்கிறன் சண்முகம்." (பக். 92)

இக் கூற்று சண்முகம் வாழ்வைப் பொறுத்த வரையில் உண்மை யாகும்.

"காற்றுக்கு ஒதுங்கும் விளக்குக் கொழுந்தைப் போல, அவளாக அந்த ஒதுக்கத்தைத் தேடிக் கொண்டது போல இருந்தது. அந்த முகத்தில் உணர்ச்சிகளை ஒழித்துப் பெருக்கினற்போல் ஒரு வடித்த நிலை. நள்ளிரவின் இருளில், தான் மட்டும் நிற்கும் தனிமையில், மௌனமாய் நெஞ்சைத் தொடும் எண்ணங்கள். வானத்தை அடைந்த மேகப் பாறைகள் சிறைவைக்கும் தென்றலின் குளிர்ச்சியைப் போல இந்த மறைப்பில் அவளுள் என்னென்ன உணர்ச்சிகள் இருந்தனவோ?" (ப: 134, 135.)

இப் பகுதி மீனுட்சியின் உணர்வுகளை, வாழ்வை முற்றும் பிரதி பலிப்பதாகும்.

காமு கூறுகிருள்: "இல்லை தம்பி, எனக்குத் தெரியும், நீ அவளைக் கிளியா வச்சுக் காப்பாத்தி இருப்பே. அவளும் எத்தினியோ சந்தோஷமா இருந்திருப்பா. அதை நான் அப்ப புரிஞ்சுக்கலை. இப்போ புரிஞ்சு என்ன பிரியோசனம்? இப்போ இது வெவஸ்தை இல்லாத பேச்சு, உனக்கு மீனுட்சிமேலே இருக்கிற அன்பு எனக்குத் தெரியும். தப்புக் காண முடியாத அன்பு அது." (ப. 245).

சண்முகம் பேசுகிருன் மீனுட்சியிடம்: "எனக்கு எல்லாமே நீதான்!..... என் வாழ்க்கையில் வழிகாட்டியது நீதான். என்னை வழிப் படுத்தி நிறுத்தியதும் நீதான். எனக்கு வாழ்க்கையைக் கொடுத் தவளும் நீதான். அதனல்தான் நினைக்க முடியவில்லை.—எப்படி நீ இல்லாமல் நான் இருக்கப் போகிறேன் என்று..." (ப. 265).

கதை உணர்த்த வந்த கருத்தை ஆசிரியை கூற்ருலேயே கூறிமுடிக் கிறேன்: "இருபது ஆண்டுகளாக இருந்த அந்த ஞாபகம் அந்தக் கடைசிச் சந்திப்பில் புத்துயிர் பெற்றுவிட்டது. குமருவிடம் அவள் சண்முகத்தைப் பகர்த்ததுபோல, மீனுட்சியிடம் அவர் மறைந்தபோன மீனுட்சியை அவர் என்றென்றும் பார்த்துக் கொண்டிருப்பார். மீனுட்சி மறைந்து போகலாம்; அவரும் கொஞ்ச நாளில் மறைந்து போகலாம். ஆனல் அவர்களிடையே நின்ற அன்பு நிலையானது; அழிவில்லாதது. அது தொடர்ந்து கொண்டே இருக்கும்" (ப. 285).

இந்த நாவலைப் படித்துமுடித்தவுடன் நெஞ்சில் ஒரு நிறைவு தோன்றுகின்றது.

[உணர்வின் விழிப்பு : லட்சுமி சுப்பிரமணியம், வெளியீடு : தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், எழும்பூர், சென்னை-8. பக். 286. விலை ரூ. 6]

## எழுதும் தெய்வம்

ஒன்பது சிறுகதைகளைக் கொண்ட தொகுதி 'எழுதும் தெய்வ' மாகும். சிறுகதைகள் ஆசிரியரின் வாழ்க்கையை நுணுகி நோக்கிக் கண்டு, உணர்ச்சிச் செறிவுடன் அனுபவங்களை வெளியிடும் மனவியல் பிணைத் தெள்ளிதாகப் புலப்படுத்துகின்றன.

'கண்ணில் தெரியு தந்த தோற்றம்' என்ற முதற்கதையின் தொடக்கமே புதுநோக்குடையதாய் விளங்குகின்றது. "பாரதி வந்து கொண்டிருந்தாள். நான் அவளையே, அவள் உருவத்தையே வைத்த கண் வாங்காது பார்த்துக்கொண்டிருந்தேன்." கதையின் முடிவு வரிகள் இவை : "என் மனதில் மனோகரியின் உருவம் மணந்துகொண்டிருந்தது. பாரதி போய்க்கொண்டிருந்தாள்."

குறிக்கோட் காதலின் வெளியீடு இக் கதை. தமிழ் நாட்டுப் பெண்மையின் வார்ப்பாக மனோகரி விளங்குகின்றாள். ஆனால், கதா நாயகனுக்கு அவள் 'காலம் கலைத்துவிட்ட அனுராகப் பொற் கனவு.'

மனோகரியை வருணிக்கும் ஆசிரியர் சில உவமைகள் காட்டி நிற்கிறார். அவை வருமாறு :

"மனோகரி அழகி. அம்பிகையின் கர்ப்பக் கிருகத்தில் ஆடாது சுடர்விடும் தூங்காமணி விளக்கின் சுவாலைபோல், ஆலயத்தில் கமழ்ந்து வரும் அற்புதமான தெய்வீக நறுமணம் போல் உதய நேரத்தில் ஒலிக்கும் நாதஸ்வர இசைபோல், கோடைக்கால நள்ளிரவில் மெல்ல அசைந்து வரும் குளிர் தென்றல்போல், கேட்கும்போதே மனதையும் நாவையும் மகிழ்விக்கும் கற்பனைக்கும் அப்பாற்பட்ட தேவாமிர்தத்தின் சுவைபோல், அழகியவள் மனோகரி. அவளுடைய அழகு அவளது எடுப்பான நாசியிலா, கனிந்த அந்தரங்களிலா, கருநீல விழிகளிலா, கருநாகக் கூந்தலிலா, தந்தச் சிலைக்குத் தங்க மெரு கூட்டியது போன்ற மேனிக் கவர்ச்சியிலா என்று தரம் பிரித்துத் தனித்துக் காண முடியாது. அவளே அழகாக, அழகே அவளாகக் காட்சி தருபவள் மனோகரி.'

இந்த வருணனை நம் நெஞ்சை அள்ளும் போக்கில் அமைந்துள்ளது. உவமைகள் உள்ளத்திற்கு உவகை யூட்டுவன ; நடையும், கிளத்திக் கூறுமுறை (Prescutation)யும் சிறப்பாக உள்ளது.

மனோகரி ஒரு ஆதரிசப் பெண் என்பதனை ஆசிரியர் பின்வருமாறு நிறுவுகின்றார். "அவளுடைய அடக்கமான நடையில், கம்பீரமாகச்

சுடர்விடும் நேர்மையில், நினைவுகளையும் புனிதமாக்கும் பார்வையில், அழகும் பண்பும் பரிமளிக்கும் பேச்சில், ஏன் அவளுடைய ஒவ்வொரு செயலிலும், சிறு அசைவிலும் கூட அவளுடைய பெண்மை விகசித்தது.''

இதனால் ஆசிரியர்தம் எழுத்து பண்பாட்டைப் பிரதிபலிக்கும் வகையில் அமைந்துள்ளது என்பதனை அறியலாம்.

'மகிழம்பூ' என்ற கதையில் ஓர் லட்சியக் காதல் சுட்டப்படுகின்றது. மணப்பதற்கியலாத ஒரு பெண்ணின் சோக வாழ்வும், உடலுறவையே துறந்து உள்ளத்தளவில் வாழ முன்வரும் ஓர் இளைஞனின் தியாக உள்ளமும் இக் கதையில் இடம் பெறுகின்றன.

விதியின் வலிய நெடிய கரத்தினை, 'அலைகடல்தான் ஓய்வதெப்போது?' என்ற கதையும், 'ஒரு படத்தின் கதை'யும் தெரிவித்து நிற்கின்றன. வாழ்க்கையில் வழுக்கிவிழும் ஒரு பெண்ணின் அவல வாழ்வினையும், சத்திரச் சாமியின் கருணைப் போக்கினையும், பக்குவ மனத்தினையும், 'துணை' என்னும் கதை சுட்டி நிற்கின்றது.

'எழுதும் தெய்வம்' ஓர் உயரிய படைப்பு. ஓர் ஏழை எழுத்தாளனின் மனவியல்புகளைச் சிறப்பாகச் சித்திரித்து நிற்கின்றது.

'விடியுமா?' என்ற கதை பல்வேறு மனப்போக்குகளையுடைய மக்களைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றது.

"சேதுமாதவன் ஜன்னலுக்கு வெளியே தெரியும் உலகத்தை, அடிவானத்திற்கு அப்பால் மறைந்து கிடக்கும் தஞ்சை ஜில்லாவிலுள்ள ஒரு கிராமத்தை, அதிலுள்ள ஒரு சிறு வீட்டை, அங்குள்ள சில ஜீவன்களை, தன்னுடைய வெறித்த பார்வையில் கொண்டுவர முயன்று கொண்டிருக்கிறார்.''

இவ்வாறு நெஞ்சைப் பிழியும் சோகத்திலே இந்தக் கதை நடைபோடுகின்றது.

அடுத்த கதை 'பெண்ணெனும் துயரம்', 'உலகத்திற்கு விடிந்துவிட்டது' என்று தொடங்கி, 'பெண்ணுடைய வாழ்வே துயரம் என்பது மட்டுமல்ல. பெண்ணே துயரத்தின் வடிவந்தான் என்பது மட்டுமல்ல, பெண்ணே கூட சமயங்களில் மற்றொரு பெண்ணுக்குத் துயரமாக அமைந்துவிடுகிறாள் என்பதும் உண்மைதான்'' என்ற கருத்துகளோடு முடிகின்றது.

'பிக்ஷு' வரலாற்றுப் பின்னணியில் உருக்கொண்டுள்ள கதை. 'ஆசையே அனைத்துத் துன்பங்களுக்கும் காரணம்' என்ற புத்தரின் பொன்மொழியினை விளக்கி நிற்கும் கதை இது.

இறுதிக் கதை ‘அலைகடல்தான் ஓய்வதெப்போது?’ உலகப் பற்றுகளில் உழைந்து திரிந்த மனம், மனத்துறவில் முடிவதைக் காட்டுகின்றது.

இவ்வாறு அரிய கருத்துகளையும் உயரிய எண்ணங்களையும் பிரதிபலிக்கின்ற முறையில் திரு. சந்திரசேகரன் அவர்களின் கதைகள் அமைந்துள்ளன.

சிறு கதைகள் படிப்பவர் மனத்தில் உயர்ந்த எண்ணங்களை உருவாக்க வேண்டும் என்னும் போக்கில் அமைந்திருப்பதைக் காணச் சிறுகதை ஆசிரியரின் தொண்டு விளக்கமுறுகின்றது. அறிஞர் தி. ஜ. ர. அவர்களின் அணிந்துரை நூலிற்கு அணி செய்கின்றது. சிறுகதை ஆசிரியர் திரு. பா. சந்திரசேகரன் அவர்களின் நன்முயற்சியைப் பாராட்டி அமைகிறேன்.

எழுதும் தெய்வம்: சிறுகதைத் தொகுதி, எழுதியவர்: திரு. பா. சந்திரசேகரன், வெளியீடு: பூங்கொடி பதிப்பகம், மயிலாப்பூர், சென்னை-4. பக்கங்கள் 148. விலை ரூ. 3.

— டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்

## வாழ்த்துவோம்

இந் நூலில், வாழ்த்துவோம், மங்கை என்று இரண்டு குறு நாவல்கள் அடங்கியுள்ளன. பதிப்புரையின் தொடக்கத்தில் “பொதுவாக நிகழ்ச்சிகளின் துரித வேகத்தில் கதைகளைப் பின்னிச் செல்லாமல் உணர்ச்சிகளின் ஆழத்தில் மனித உள்ளங்களின் துடிப்பை விவரிப்பதையே நோக்கமாகக் கொண்டு கதையெழுதுபவர் திருமதி R. சூடாமணி அவர்கள்” என்ற சொற்றொடர் காணப்படுகின்றது. இதற்கேற்பவே இவ் இரு குறு நாவல்களிலும் நிகழ்ச்சிகள் அதிகமாக ஒன்றன்பின் ஒன்ருக வாராத நிலையில் மனித மனங்களின் உணர்ச்சிச் சுழிப்புகள் விரைந்து நடை பயில்வதனைக் காண முடிகின்றது.

‘வாழ்த்துவோம்’ என்ற முதற்கண் அமைந்துள்ள குறு நாவல் வீண் ஆரவாரத்திற்காக, பிறர் மெச்ச வேண்டும் என்ற பேரவாவிற்காக டம்பமிகச் செலவழித்து வாழ்ந்த குடும்பம் இறுதியில் சொல்லொணுத் துன்பப்படுவதனைத் திட்பமாக விளக்கி நிற்கின்றது.

பூபதி பணக்காரர். தன் மகள் வனஜாவின் திருமணத்திற்கு வரதட்சணையாக மாப்பிள்ளைப் பையனுக்குப் பதினைந்தாயிரம் ரொக்கமும், சீர்வரிசை, நகை நட்டுக்கள், ஆடம்பரமான திருமணம் என்று ஐம்பதாயிரம் ரூபாய் வரையில் செலவு செய்கிருர். இதைப் பார்த்தும்,

வழக்கமான அன்றாட நடைமுறை வாழ்வினைக் கண்டும் மாதச் சம்பளம் வாங்கும் இரு குடும்பத்தினர் நெறியல்லா நெறியிற் செல்ல முனை கின்றனர். ரகுராமன் நானூறு ரூபாய் சம்பளம் பெறும் அலுவலர். அவரும் அவர் மனைவி கற்பகம், மகள் ரஞ்சனி முதலியோர் ஆடம்பர மாக வாழ நினைக்கின்றனர்; தங்கள் ஆற்றலுக்கும் அப்பாற்பட்டு அனாவசியமாகச் செலவு செய்கின்றனர். ரஞ்சனியின் திருமணம் சக்திக்கு மீறி நடைபெறுகிறது. இருபதினாயிரம் ரூபாய் கடன் ஏற்படுகிறது. கடன் சுமை தாங்காமல் குடும்பத் தலைவர் ரகுராமன் தற்கொலை செய்துகொள்கிறார். குடும்பம் நிலைகுலைகிறது. ஆடம்பர மாயை அகல்கிறது. வறுமையும் வாட்டமும் வாழ்க்கைப் பாடம் கற்பிக்கின்றன.

மற்றொரு குடும்பம்; அதே வருவாய். குடும்பத் தலைவர் சுப்பிர மணியம் சிந்தனையாற்றல் உடையவர். 'விரலுக்குத் தக்க வீக்கம்' வேண்டுபவர். எனவே செல்வரைப் பார்த்துச் செலவு செய்துவிட்டுப் பின்னால் தியங்கிநிற்கக்கூடாது என்று படித்துப் படித்துச் சொல்பவர். ஆனால் மனைவி நாகுவும் மூத்த மகள் சகுந்தலாவும் அவருக்கு கஞ்சன் என்றே பெயர் சூட்டிவிடுகிறார்கள். ஆனால் இளைய மகள் அகிலா அப்பாவைப்போல் எளிமையைப் போற்றுபவள். ஆடம்பரமாகத் திருமணம் செய்து அரும்பாடுபட்டு ஈட்டிய பணத்தை ஒரு நாளில் கரைத்துவிட்டு நின்று காலத்திற்கும் கண் கலங்கக் கூடாது என்பது சுப்பிரமணியத்தின் அசைக்க முடியாத கோட்பாடு. தன் இலட்சிய வெறியில் தன் மகன் ரவிக்கு நூற்றைம்பது ரூபாய் செலவு (அதில் பெண் வீட்டார் 75 ரூபாய் பாகம் தந்துவிட்டதும்) செய்து ரகுராமன் மகள் மாலதியை மணம் முடித்துக் கொள்கிறார். ஆனால் தன் மகள் சகுந்தலாவின் கைபிடிக்க அப்படி ஓர் இலட்சிய வீரன் வரவில்லை. காலம் செல்கிறது. மனைவி, மகள், ஊரார் ஏச்சு காதில் விழுகிறது. மகள் சகுந்தலா எவனோடோ ஓடிப்போகிறாள். அந்த அதிர்ச்சியில் அவர் தேய்ந்து ஓய்ந்து கிழடுதட்டிப்போனார். அவர் காத்திருந்தது வீணாகவில்லை. பாஸ்கரன் என்ற வாலிபன் அவர் கொள்கைக்குக் கைகொடுத்துப் பின் அவர் இளைய மகள் அகிலாவையும் கைபிடிக் கிறான்.

"நண்பர்களே! நான் ஏழை. இத்தனை பணம் செலவழித்துக் கல்யாணம் நடத்த என்னிடம் வசதி இல்லை. வாருங்கள் நம் சமுதா யத்தை அரித்துக்கொண்டிருக்கும் இந்தக் கேட்டை நாம் சேர்ந்து களைவோம். வெறும் துளசி இதழுடன் மனப்பூர்வமாய் என் மகளைத் தருகிறேன், வரதட்சணையோ ஆடம்பரமோ எதிர்பாராமல் அவளை ஏற்றுக்கொள்ளுங்கள். ஒரு நாளைய வைபவத்துக்காகப் பல ஆண்டு களுக்கான பாரத்தை மரபின் பெயராலும் மதிப்பின் பெயராலும் சுமக்க நான் விரும்பவில்லை. இரு வாழ்வுகள் ஒன்றுக்கொன்று துணை யாக இணையும் விழாத்தானே திருமணம்? அந்த இன்ப விழாவைப் பெரியவர்களுக்கு ஒரு சோதனையான சந்தர்ப்பமாக ஏன் மாற்ற

வேண்டும்? இணைந்த இருவரும் நலம் பெற்று வாழ வாழ்த்துவோம், அதுதானே ஒரு திருமணத்தின் குறிக்கோள்? இப்போது நடக்கும் கல்யாணங்களில்கூட பகட்டும் செலவும் கவலையும் மறைந்துவிடும் போதிலும் சாரமான பொருள் அந்த வாழ்த்து ஒன்றுதானே?''

இதுவே குறுநாவலின் உயிர்க் கருத்து.

"இந்த உணர்ச்சிப் போராட்டங்கள் வாசகர்களின் உணர்ச்சியை நேரான வழியில் சிறிதேனும் திரும்புமாயின் அதுவே இந் நூலைப் படைத்தவர்க்கும் வெளியிட்டவர்க்கும் மகிழ்ச்சியைத் தரும்'' என்று பாரி புத்தகப்பண்ணையார் பதிப்புரையில் கூறுகின்றனர். அவர்கள் முயற்சி வெற்றிபெறும் என உறுதியாகக் கூறலாம். கதை அவ்வளவு ஆழமாக நம் மனத்தில் பதிகின்றது!

'மங்கை' என்னும் இரண்டாவது குறுநாவல் "எப்படியும் நான் பி. ஏ. பாஸ் செய்தே தீருவேன்'' என்று பத்து வயதிலேயே பிடிவாதம் பிடித்து, அதனை ஓர் அடங்காத ஆர்வக் கொள்கையாக வளர்த்து வாழ்ந்து இறுதியில் உடல்நலப் பாதிப்பால் அவ் இலட்சியம் எங்கே எட்டாக்கனியாகி விடுமோ என்று பதைத்து, இறுதியில் தன் குறிக்கோளில் வெற்றிப் பெற்றுத் தனது இருபத்திரண்டாவது வயதில் பி. ஏ. தேர்ச்சிபெற்று, ஒரு கம்பெனியில் வேலைக்கு அமர்ந்து, அங்கு வேலை பார்க்கும் ஓர் இளைஞனையும் திருமணம் செய்துகொள்ளும் மன வுறுதி மாறாத மங்கையாம் 'மங்கை'யின் கதையாகும். சுமித்திரா வேங்கடேசன் மனைவி; ஆசிரியை. நவநீதத்தின் மகள் மங்கையின் கல்விக்கு உறுதுணையாக நின்று, அவள் பிஞ்சு நெஞ்சில் நம்பிக்கையை வளர்த்து இறுதியில் வெற்றிபெறவும் துணை நிற்கிறாள்.

இக் குறுநாவல் மங்கையின் உள்ளத்தில் நடக்கும் உணர்ச்சிப் போராட்டங்களைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறது. கொண்ட கொள்கைக்குத் தளராது அயராது பாடுபட்டுக் குறிக்கோளை அடையும் பெண்ணுள்ளத்தினை ஆசிரியை சூடாமணி அருமையாகச் சித்திரித்துள்ளார்.

ஆசிரியை பொழுது போக்குக்கென்று எழுதாமல் ஒரு குறிக் கோளோடு இக் குறுநாவல்களை எழுதி, படிப்பவர் மனத்தில் சிந்தனையைத் தூண்டிவிட்டு வெற்றிபெறுகிறார்.

வாழ்த்துவோம், எழுதியவர்: ஆர். சூடாமணி; பக்கங்கள் 144. விலை ரூ. 2-75; வெளியிட்டோர்: பாரி புத்தகப் பண்ணை, 576, பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை-5.

—டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்.

# மோகம் முப்பது ஆண்டு

நாஞ்சில் நாட்டைச் சேர்ந்த பொறியியல் வல்லுநர் திரு. நீல. பத்மநாபன் அவர்கள் தமிழ் இலக்கியத்துறைக்குப் புதியவர் அல்லர். 'தலைமுறைகள்' என்ற தம்முடைய புதினத்தால் மறுமலர்ச்சி எழுத்தாளர் என்ற முத்திரையினைப் பொறித்துக் கொண்ட பொறியியல் வல்லுநர் ஆவர்.

'மோகம் முப்பது ஆண்டு' என்னும் இச் சிறுகதைத் தொகுதி ஆசிரியர் 1956-க்கும் 1966-க்கும் இடையில் அமைந்த பத்தாண்டுகளில் எழுதிய பதினொரு சிறுகதைகளைக் கொண்ட நூலாகும். இக் கதைகள் ஆசிரியர் எழுதிய தேதிகளின் வரிசைக் கிரமத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. இக் கதைகள் சில தமிழ்ப் பத்திரிகைகளில் ஏற்கெனவே வெளிவந்தனவாகும். அக் கதைகள் இப்போது இந் நூலில் அடங்கியுள்ள பதினொரு கதைகளில் ஒன்றான 'மோகம் முப்பது ஆண்டு' என்னும் கதையின் தலைப்பினையே நூலின் தலைப்பாகக் கொண்டு வெளிவந்துள்ளன.

'பதில் இல்லை' என்னும் முதற் சிறுகதை 'ராஜு' என்னும் பிஞ்சுமுகச் சிறுவனின் எதிர்பாராத இறப்பினை உருக்கத்தோடு விவரிக்கின்றது. ரவி என்னும் வாலிபன், எதிர்வீட்டு நல்லசிவம் அண்ணாச்சி 'குழந்தை இல்லாமல் பல ஆண்டு தவமிருந்து கடைசியில் வயசுகாலத்தில் பிறந்து முளைவிட்டுக் கொண்டிருக்கும் அவருடைய ஒரே பிள்ளைப்பேறு' ராஜுவினை அழைத்து ஒரு பாக்கெட் சிகரெட்டும், பத்து பைசாவுக்கு வெற்றிலை பாக்கு புகையிலையும் பத்து பைசா மிட்டாய் என்னும் 'அன்பளிப்பு'க்காக வாங்கிவரச் சொல்கிறார். அவற்றை வாங்கிவரத் துள்ளிஓடிய பையன் ஈரமணல் நிரப்பிய லாரிச் சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டு இறக்கிறான். இந்நிலைக்குக் காரணமான ரவி இக் காட்சியைப் பார்த்துவிட்டு மௌனமாய் நிற்கிறான்.

'பையனை யாரு இங்கே ரோட்டுக்கு அனுப்பினது?' என்று பெண்கள் கூட்டத்திலிருந்து எழுப்பப்பட்ட கேள்வி, பதில் இல்லாமல் காற்றில் லயித்தது என்று கதை முடிகிறது.

சிந்தனையைத் தூண்டிவிடும் கதை.

'நான்' என்ற கதை சொற்களின் ஈட்டமாக உளதேயொழியச் சாரமோ சத்தோ எதுவுமே இல்லாத கதையாய் உள்ளது.

'விட்டுக் கொடுத்தவன்' என்னும் கதை சமுதாயத்தின் எங்கோ ஒரு மூலையில் வறுமையின் கோரப்பிடி காரணமாக எழுகின்ற நிலை மாற்றத்தினைச் சித்திரிக்கின்றது. இக் கதையை ஆசிரியர் வளர்த்திச் செல்லும் பாணி புதுமையாக உளது. பெண்ணை வருணிக்கும் இவர்

முறை வருமாறு: "பெண்மையின் சௌந்தரியத்திற்கு மாற்று கூட்ட எங்கெங்கே தன் கைவண்ணத்தைக் காட்டவேண்டுமோ அங்கங்கே அழகை வாரி இறைத்திருந்தது அழகுத் தெய்வம்" (பக்கம். 21).

'மோகம் முப்பது ஆண்டு' கிழவர் ஒருவர் தம் பழைய வாழ்க்கையை நினைவோட்டமிட்டபொழுது எழுந்த சிந்தனைச் சிதறல்களின் கோவையாகும்.

'நான்'—2 என்ற கதை ஒரு புதிய உத்தி. ஆசிரியர் பிறப்பினை நயம்பட நவின்றுள்ளார்.

'பிஞ்சு உள்ளம்' என்னும் கதை வீணு என்ற பள்ளி மாணவியின் கதை. பெற்ருேர் வயதுக்கு நிற்கும் பெண்கள் முன்னிலையில் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும், இன்றேல் என்ன விளைவுகளை அது தோற்றுவிக்கும் என்பதனை எச்சரிக்கையுடன் எடுத்து மொழிவது இக் கதையாகும்.

'தனிமரம்' என்ற கதை படித்து வேலைக்குப் போகும் பெண்ணின் வீட்டில் இயல்பாக எழும் சிக்கலைப் பற்றியதாகும்.

"தாலி கட்டிய பெண்டாட்டி" என்பதற்கும் மூக்கணுங்கயிறு போட்டுவிட்ட கொட்டடிமாடு என்பதற்கும் உங்கள் அகராதிப்படி ஒரே அர்த்தம்தான் போலிருக்கிறது......" என்பது திருமதி. சித்ரா சபேசனின் வாதம்.

இந்தக் கதையினை ஆண்குலம் அவசியம் படித்துப் பார்க்க வேண்டும்.

'க்ஷணங்கள்' என்ற கதை முதலில் பலவீனப்பட்டுப் பின்னர் மனத்தைத் தேற்றித் தன் கற்பைக் காத்துக் கொள்ளும் 'லக்ஷ்மி' என்னும் பெண்ணின் மனப்போராட்டக் கதையாகும். கதை பொழுது போக்குக்கு மட்டுமன்று, கருத்துக்குமாகும் எனும் கொள்கையினை இக் கதை உறுதிப்படுத்துகின்றது.

'சித்ரவதை' எனும் கதையில் கருத்தோட்டம் ஒன்றுமில்லையெனினும் நடைச்சிறப்பு நயமாக உளது. சான்ருக,

"நிலவுக் கீற்றுக்களால் பாலாழியாய்ப் பரிமளித்துக் கலகல வென்று நுரைததும்ப நகை நகைத்துப் புரளும் விசாலக் கடல், தென்றலில் துவளும் கொடியாய் ஆடி அசைந்து கொண்டிருக்கும் வெள்ளியோடம்..."

"வெள்ளி மணற்பரப்பில் கரை சேர்ந்து மல்லார்ந்து கிடக்கும் என் பாதங்களுக்கு கிசுகிசுமூட்டி விளையாடும் அலைக்கரங்கள்" எனும் பகுதியினைக் குறிக்கலாம்.

'ஏகாந்த யக்ஞம்' எனும் கதை நேர்மையை நெகிழவிடாது பற்றிவாழும் கிருஷ்ணகுமாரைப்பற்றிய கதையாகும்.

'தண்டனை' என்ற கதையும் கருத்தை உள்ளீடாகக் கொண்ட நல்ல கற்பனைப் படைப்பாகும்.

திறனாய்வாளர் ஒருவர், ''சொற்சிக்கனம், கருத்தாழம், உள் மனதை ஆழ்ந்து அலசும் அகநோக்கு, மறைமுகக் கிண்டல் கலந்த திவிரப் பார்வை, உருவ அமைதியைக் கெடுக்காத ஒரு சோகத்தின் நிழல்'' முதலியன திரு. நீல. பத்மநாபன் எழுதியுள்ள கதைகளின் பண்புகள் எனக் குறிப்பிட்டுள்ளார். இஃது உண்மையே! ஆயினும், வேண்டாத இடங்களிலெல்லாம் ஆசிரியர் விரும்பி வடசொற்களைப் பெய்துள்ளார். எடுத்துக் காட்டுகள் : பட்டுச் சருமம், உதயமாகிறது, சிருஷ்டி ரகசியம், ஜால வித்தை, ரத்தக் குழாய், ருசியில்லை, பிரதி பலிக்கிறதா, சூத்திரதாரி, அனுயாசமாக, யுகங்கள், மாயமேகந்திர ஜாலமாக, பரிணுமங்கள், பரமாணு, கனகம்பீரம், பிரவேசித்த.

இவ்வாறு பதினைந்தாம் பக்கமாகிய ஒரே பக்கத்தில் பதினைந் துக்கு மேற்பட்ட வடசொற்களைக் காணும்போது எரிச்சலே ஏற்படு கிறது.

இக் குறையினை உளங்கொள்ளாது காணும்பொழுது, தமிழ்ச் சிறுகதை உலகிற்குத் திறம்வாய்ந்த நல்ல சிறுகதை எழுத்தாளர் கிடைத்துவிட்டார் என்ற மகிழ்ச்சி பிறக்கிறது.

*[மோகம் முப்பது ஆண்டு : நீல. பத்மநாபன். பக்கங்கள் : 129. விலை : 2-50. விற்பனை உரிமை : ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், கோர்ட் ரோடு, நாகர் கோவில்-1. ]*

**டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்.**

## செய்திகள் அடக்கம்

1. சிறப்பு நிகழ்ச்சிகள்
2. கவிஞர்களின் நினைவு நாள்கள்
3. அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்
4. தமிழ்த் துறைக்கு அயலவர் வருகை
5. பரிசும் பாராட்டும்
6. ஆசிரியர்—மாணவர் கருத்தரங்கு
7. தமிழ்த்துறை அலுவலர்கள்
8. தமிழ்த்துறை ஆய்வாளர்கள்
9. மதிப்புரை மணிகள்
10. பாராட்டுப் பன்னீர்

## 1. சிறப்பு நிகழ்ச்சிகள்

(i) 22, 23—2—74 ஆகிய இரு நாள்களிலும் திராவிட யாப்பியல் கருத்தரங்கு 'திராவிட மொழிகளில் யாப்பியல் ஒருமைப்பாடு (The Commonness in the Metre of the Dravidian Languages)' என்னும் பொருளில் நடைபெற்றது. கருத்தரங்கைச் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் தாமரைத் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் தொடங்கி வைத்தார்கள். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் வரவேற்றுப் பேசினார்கள். கேரளப் பல்கலைக் கழக மொழியியல் துறைத் தலைவர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியன் அவர்கள் நன்றி கூறினார்கள்.

(ii) சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையின் சார்பில் முதுகலைத் தமிழ்ப் புத்தொளிப் பயிற்சி, சூன் 5 ஆம் நாள் முதல் 15 ஆம் நாள் முடிய பல்கலைக் கழகத்தில் நடைபெற்றது. தமிழ்த் துறை வரலாற்றில் இதுவே முதன்முறை.

(iii) சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையின் சார்பில் நான்காவது அனைத்திந்திய திராவிட மொழியியல் மாநாடு 6, 7—6—74 ஆகிய இரு நாள்களிலும் சிறப்பாய் நடைபெற்றது.

(iv) 26—8—74 அன்று மாலை 5-15 மணிக்குத் திரு. அ. மு. பரம சிவானந்தம் அவர்கள் தலைமையில் 'மொழியியல் எதற்காக?' என்னும் பொருள் பற்றி மைசூர், இந்திய மொழிகளின் மைய அமைப்பின் துணை இயக்குநர் டாக்டர் மா. சு. திருமலை அவர்கள் சிறப்புச் சொற்பொழி வாற்றினர்.

இக் கருத்தரங்கில், எழுந்த ஒரு வினாவிற்குப் பதில் அளிக்கையில் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள், இனி சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை எழுத்துச் சீர்திருத்த முறையைப் பின்பற்றும் என்றார்.

(v) 14—10—74 அன்று பகல் 12 மணிக்குப் பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் மறைவிற்கு நினைவு கூரும் இரங்கற் கூட்டம் தமிழ்த் துறையின் சார்பில் நடைபெற்றது. தமிழ்த் துறையே கண்ணீர் மல்க அன்று இருந்த காட்சி, தமிழ்த்துறை வரலாற்றிலேயே மறக்க முடியாத—மறைக்க முடியாத நிகழ்ச்சியே.

(vi) 31—10—74) அன்று மாலை 5 மணிக்கு டாக்டர் அக்கராசு சர்மா அவர்கள், "கிழக்குக் கடற்கரையில் சூழ்நிலை இயல் மாற்றத் தால் வெளிப்படும் பண்பாட்டுச் சிறப்புகள்" என்னும் பொருளில் ஒளிப் படங்களின் துணையோடு அரியதொரு சொற்பொழி வாற்றினர்கள்.

(vii) அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்த்திய அறிஞர் பெருமக்களுக்குத் தமிழ்த்துறையின் சார்பில் சிறப்பு விருந்துகள் வழங்கப்பட்டன.

| | சிறப்பு விருந்தினர் | நாள் |
|---|---|---|
| (1) | பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் | 8—3—74 |
| (2) | திரு. 'சோமலெ' | 12—3—74 |
| (3) | பெரும்புலவர் அ. நடேச முதலியார் | 19—4—74 |

## 2. கவிஞர்களின் நினைவு நாள்கள்

29—4—74 அன்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் நினைவாக ஆசிரியர்—மாணவர் கருத்தரங்கு ஒன்று தமிழ்த் துறையின் சார்பில் நடைபெற்றது.

11—9—74 அன்று மகாகவி பாரதியார் நினைவாக ஆசிரியர்—மாணவர் கருத்தரங்கு ஒன்று தமிழ்த்துறையின் சார்பில் நடைபெற்றது.

## 3. அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

(i) டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவுத் தொடரில் பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் (தமிழ்த்துறைத் தலைவர், திருவேங்கடவன் பல்கலைக் கழகம்) அவர்கள் 8, 9, 10—3—74 ஆகிய மூன்று நாள்களிலும் 'தமிழிலக்கியத்தில் வேங்கடம்' என்னும் பொருளில் ஆய்வுரை நிகழ்த்தினர்கள்.

(ii) கல்கி அறக்கட்டளைச் சொற்பொழிவுத் தொடரில் திரு 'சோமலெ' அவர்கள் 11, 12, 13—3—74 ஆகிய மூன்று நாள்களிலும் 'பத்தொன்பதாவது இருபதாவது நூற்றாண்டுகளில் தமிழ்ப் பத்திரிகைகள்' என்னும் பொருளில் ஆய்வுரை நிகழ்த்தினர்கள்.

(iii) கல்கி அறக் கட்டளைச் சொற்பொழிவுத் தொடரில் தமிழ்நாடு அரசு செயலர் திரு. கா. திரவியம், ஐ. ஏ. எசு. அவர்கள் 21, 22, 23-3-74 ஆகிய மூன்று நாள்களிலும் 'தேசியம் வளர்த்த தமிழ்' என்னும் பொருளில் ஆய்வுரை நிகழ்த்தினர்கள்.

(iv) திருமதி சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவுத் தொடரில் பெரும்புலவர் அ. நடேச முதலியார் அவர்கள் ஏப்பிரல் திங்கள் 18, 19, 20 ஆகிய மூன்று நாள்களிலும், 'ஞானியாரடிகளின் தமிழ்த் தொண்டு' என்னும் பொருளில் ஆய்வுரை நிகழ்த்தினர்கள்.

(v) திருமதி சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவுத் தொடரில் திவான் பகதூர் தி. மூ. நாராயணசாமிப் பிள்ளை (அண்ணாமலைப் பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர்) அவர்கள்

டிசம்பர்த் திங்கள் 12, 13, 14 ஆகிய மூன்று நாள்களிலும் 'திருவாணைக்கா' என்னும் பொருளில் ஆய்வுரை நிகழ்த்தினார்கள்.

## 4. தமிழ்த்துறைக்கு அயலவர் வருகை

1. அமெரிக்க நாட்டு மெய்ப்பொருளியல் பேராசிரியர் டாக்டர் லெஸ்டர், பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களிடம் 'திருவாய் மொழி' பாடம் கேட்டார்.

2. பிரெஞ்சு நாட்டுப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு. காசி அவர்கள் வருகை புரிந்தார்.

3. ருமேனியா நாட்டறிஞர் Mr. A. D. Munteanu அவர்கள் வருகை புரிந்தார்.

4. அமெரிக்க மாணவியும் இப்போது காசிப் பல்கலைக் கழகத்தில் பயில்பவருமான ரெபக்கா ஸ்மித் (Rebecca smith) அவர்கட்கு முருகனைப் பற்றிய குறிப்புகள் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களால் வழங்கப்பட்டன.

5. இந்திய மொழிகளின் மைய நிறுவனத்திலிருந்து இரண்டாவது முறையாக, தமிழ் மொழி பயிலும் பிற மாநில மாணவர்கள் டாக்டர் ஆரோக்கியநாதன் அவர்கள் தலைமையில் வருகை புரிந்தனர்.

6. இந்திய மொழிகளின் மைய நிறுவனத் துணை இயக்குநர் டாக்டர் மா. சு. திருமலை அவர்கள் அரியதொரு சொற்பொழி வாற்றினர்.

7. அமெரிக்காவில் மானிடவியல் ஆராய்ச்சித் துறையில் இருக்கும் டாக்டர் அக்கராசு சர்மா அவர்கள் சிறப்புச் சொற்பொழி வாற்றினர்.

## 5. பரிசும் பாராட்டும்

### பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்களுக்கு சாகித்திய அகாதமி விருது

சென்னைப் பல்கலைக் கழகத்தின் திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி, தமிழ்த்துறை வெளியீடான 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்னும் நூல் 1971—1973ஆம் ஆண்டுக்கான சாகித்திய அகாதமி விருது பெற்றுள்ளது. திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதியில் 1969 முதல் 1973 வரை பணியாற்றிய பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்களால் 1971-ல் எழுதப்பட்ட சிறந்த இலக்கியத் திறனாய்வு நூல் இது.

இந் நூலிற்காகப் பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்கள் மைய அரசின் ரூபாய் 5000/- பரிசும் செப்புப் பட்டயமும் பெறுகின்றார்.

தற்போது உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் பணியாற்றும் பேராசிரியர் அவர்கள் நீடு வாழ்ந்து சிறந்த இலக்கியத் திறனாய்வு நூல்களை வெளியிட்டு, தமிழ் மொழிக்கு ஏற்றம் அளிக்க வேண்டுமென உளமார வாழ்த்துகிறோம்.

## 6. தமிழ்த்துறை ஆசிரியர் — மாணவர் கருத்தரங்கு (1974ஆம் ஆண்டு)

| எண் | நாள் | கட்டுரையாளர் (ஆசிரியர்) | பொருள் | கட்டுரையாளர் (மாணவர்) | பொருள் |
|---|---|---|---|---|---|
| 1. | 30-1-74 | திரு. கு. மோகனராசு | திருக்குறளிலும் தொல்காப்பியத்திலும் கடவுள்—ஓர் ஒப்பாய்வு | திரு. சு. சண்முக சுந்தரம் | நாட்டுப்புறப் பண்பாட்டியல்—ஓர் அறிமுகம் |
| | | | | திரு. சி. நா. குமாரசாமி | நாடு பற்றிய கோட்பாடுகள்—ஓர் அறிமுகம் |
| 2. | 29-3-74 | திரு. வ. செயதேவன் | அகராதியியலும் அகரநிரலும் | திரு. சு. சண்முக சுந்தரம் | தமிழக நாட்டுப்புறப் பாடலின் வரலாறு—ஒரு கண்ணோட்டம் |
| | | புலவர் மு. சண்முகம் பிள்ளை | தமிழ் நூல்களில் காலக் கணிப்பு | | |
| | | திரு. கு. மோகனராசு | கொடிநிலை, கந்தழி, வள்ளி—மறு ஆய்வு | | |
| 3. | 29-4-74 | புலவர் இ. சுந்தரமூர்த்தி | பரிமேலழகர் மேற்கோள் விளக்கம் | திரு. சி. நா. குமாரசாமி | நாட்டின் ஆக்கக் கூறுகள் (Components of the state) |
| | | திரு. கு. மோகனராசு | தொல்காப்பியம் காட்டும் 'கடவுள் வாழ்த்து'—ஓர் ஆய்வு | திரு. சு. சண்முக சுந்தரம் | தமிழக நாட்டுப்புற இயல்—ஒரு பார்வை |
| 4. | 31-7-74 | டாக்டர் ந. சஞ்சீவி | அளவறிதல்—பொதுமறையில் ஒரு புதிய புதைபொருள் அகழ்வு | திரு. சு. சண்முக சுந்தரம் | 'திருநெல்வேலி மாவட்டம்'—அன்றும் இன்றும் |
| | | | 'நடை'யின் நடை | | |
| | | | 'நடு'வின் நுகர்வு | | |
| | | | இந்திய இலக்கிய வரலாற்றில் இன்பத் தமிழின் இடம் | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | புலவர் இ. சுந்தரமூர்த்தி | நடையின் வகைகள் | | |
| | | திரு. கு. மோகனராசு | திருக்குறளிலும் தொல்காப்பியத்திலும் 'அறம்' என்ற சொல்லாட்சி— ஒரு புள்ளிவிவரப் பார்வை (A Statistical view) | | |
| 5. | *11-9-74* | திரு. கு. மோகனராசு | திருக்குறளிலும் தொல்காப்பியத்திலும் 'அறம்' பொது விளக்கம் —ஒரு புள் நோக்கு (A birds eye view) | திரு. சு. சண்முக சுந்தரம் | களப்பணியில் கண்டதும் கேட்டதும் |
| | | | 'பிசி'—ஓர் அகழ்வாய்வின் வரிப்பட விளக்கங்கள் | திரு. சி. நா. குமாரசாமி | அறிஞர் போடின் அவர்களின் நாடு பற்றிய கோட்பாடுகள் |
| | | புலவர் இ. சுந்தரமூர்த்தி | பரிமேலழகரின் பல்கலைப் புலமை | | |
| | | புலவர் மு. சண்முகம் பிள்ளை | சமயச் சார்பால் தமிழ் பட்ட பாடு | | |
| | | டாக்டர் ந. சஞ்சீவி | கலையா? காமமா? காசா? "கல்விப் பாகன்"— ஒப்பா? உறழ்வா? | | |
| | | திரு. வ. செயதேவன் | அகராதியில் கிழக்கும் மேற்கும் | | |

| எண் | நாள் | கட்டுரையாளர் (ஆசிரியர்) | பொருள் | கட்டுரையாளர் (மாணவர்) | பொருள் |
|---|---|---|---|---|---|
| 6. | 30-10-74 | டாக்டர் ந. சஞ்சீவி | பேராசிரியர் டாக்டர் மு. வ. நூல்கள் கால முறைப்படி வகை தொகை விளக்கம் | திருமதி கிருட்டிணு சஞ்சீவி | பழந்தமிழ் நூல்களில் 'ஆயர்' |
| | | | | திரு. சு. சண்முக சுந்தரம் | நாட்டுப்புறப்பாடலின் வகை தொகை |
| | | | இராமலிங்க அடிகளும் காந்தி அடிகளும்—ஒரு சிறு மேலோட்ட ஒப்பாய்வுக் குறிப்பு. | | |
| | | | இலக்கியக் கொள்கைகள்: பாடத்திற்கு ஒரு படம் | | |
| | | புலவர் மு. சண்முகம் பிள்ளை | நாககுமார காவிய ஆசிரியர் | திரு. க. ப. அறவாணன் | ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் (1) |
| | | புலவர் இ. சுந்தரமூர்த்தி | பரிமேலழகர் உவமை விளக்கம் | | |
| | | டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் | டாக்டர் மு. வ. அவர்களின் 'தங்கைக்கு'—ஓர் ஆய்வு | | |
| 7. | 29-11-74 | திரு. கு. மோகனராசு | திருக்குறளில் அற உவமைகள் | செல்வி கோ. தான்யா | உலோகாயத்தின் முதிர்ச்சி—மார்க்சிய தத்துவம் |
| | | டாக்டர் ந. சஞ்சீவி | 'கவியரங்கில் கலைஞர் (1971) கால முறைப்படி ஒரு வகை தொகை விளக்கக் குறிப்பு | திரு. க. ப. அறவாணன் | ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் (2) |
| | | | | திரு. சி. நா. குமாரசாமி | இறைமையும் பன்மை வாதமும் |
| | | | வள்ளுவர் வழியில் கலைஞர்-I | திரு. த. அமிர்தலிங்கம் | ஆற்றுப் படைப் பாடல்களில் வளமையும் வறுமையும் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | புலவர் மு. சண்முகம் பிள்ளை | 77ஆம் புறப்பாட்டில் ஒரு சொல் | திரு. சு. சண்முக சுந்தரம் | தாலாட்டு |
| | | | | திரு. கோ. இராமச் சந்திரன் | திருவள்ளுவரும் மனித இன நலக் கோட்பாடும் |
| 8. | 20-12-74 | செல்வி தி. சு. சத்தியம் | சங்க இலக்கிய அகத் திணை ஆய்வு அட்ட வணை—ஒரு நெறி முறைக் கட்டுரை | திருமதி கிருட்டிண சஞ்சீவி | தொல்காப்பியத்தில் ஒப்புமைப் பகுதிகள் |
| | | | | திருமதி மா. சு. சாந்தா | இடைக்கால நீதி நூல்களில் நன்னெறி பெறுமிடம் |
| | | | சங்க இலக்கிய அகத் திணைக் கூற்றுகள்—ஒரு வகைதொகை அடங்கல் | புலவர் இரா. மாயாண்டி | இலக்கியத்தில் கற்பனை |
| | | | | திரு. க. ப. அறவா ணன் | எழுத்தின் ஒலி வடிவைத் தொல்காப்பியர் குறித்தாரா? |
| | | டாக்டர் ந. சஞ்சீவி | வள்ளுவர் வழியில் கலைஞர்-II | திரு. சு. சண்முக சுந்தரம் | குழந்தைப் பாடல்கள் |
| | | | கவிஞர் திரு. மா. செல்வ ராசனின் வைகறை மலர்கள்—ஓர் ஆய்வுரை | திரு. த. அமிர்த லிங்கம் | 'கரித்துண்டு நாவல்'—வளமையும் வறுமையும் |
| | | து. மூர்த்தி | 'பள்'படும் பாடு | | |

## 7. தமிழ்த்துறை அலுவலர்

(அ) தமிழ்த்துறை

டாக்டர் ந. சஞ்சீவி, தமிழ்த்துறைத் தலைவர், பேராசிரியர்

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், துணைப் பேராசிரியர்

புலவர் இ. சுந்தரமூர்த்தி, விரிவுரையாளர்

(ஆ) திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி

புலவர் மு. சண்முகம் பிள்ளை, விரிவுரையாளர்

திரு. கு. மோகனராசு, விரிவுரையாளர்

செல்வி தி. சு. சத்தியம், ஆராய்ச்சித் துணைவர்

(இ) பேரகராதித் திருத்தப்பணிப் பகுதி

திரு. வ. செயதேவன், விரிவுரையாளர்

திரு. து. மூர்த்தி, தொழில் நுட்பத் துணைவர்

## 8. தமிழ்த்துறை ஆய்வாளர்
## — டாக்டர் பட்டம் (Ph. D.)

| அ. ஆசிரியர் | ஆய்வுப் பொருள் |
|---|---|
| * புலவர் இ. சுந்தரமூர்த்தி, எம். ஏ., டிப். மானிடவியல், | "பரிமேலழகர் உரைத் திறன் — ஒரு திறனாய்வு" |
| * திரு. வ. செயதேவன், பி. எசி., எம். ஏ., சான்றிதழ்—மொழியியல், | "தமிழ் அகராதிக்கலை— வளர்ச்சியும் வரலாறும்" |
| * திரு. கு. மோகனராசு, பி. எசி., எம். ஏ., சான்றிதழ்—மானிடவியல், | "திருக்குறளும் தொல்காப் பியமும்—ஓர் ஒப்பாய்வு" |
| செல்வி தி. சு. சத்தியம், எம், ஏ., | "திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி—ஓர் அகழ்வாய்வு" |

| ஆ. மாணவர் | ஆய்வுப் பொருள் |
|---|---|
| * திரு. சு. சண்முக சுந்தரம், எம். ஏ., | "திருநெல்வேலி மாவட்ட நாட்டு புறப் பாடல்கள்" |
| * திரு. சி. நா. குமாரசாமி, எம். ஏ., | "தமிழிலக்கியங்களில் நன்னாட்டுக் கோட்பாடு" |
| திரு. த. அமிர்தலிங்கம், எம். ஏ., | "தமிழிலக்கியத்தில் வளமையும் வறுமையும்" |
| செல்வி. கோ. தான்யா, எம். ஏ., | "தமிழிலக்கியத்தில் மார்க்சியக் கொள்கைகளின் தாக்கம்" |

[* இவ்வுடுக்குறியிட்டோர் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் மேற்பார்வையில் ஆய்வு செய்வோர்; ஏனையோர் துணைப் பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கள் மேற்பார்வையில் ஆய்வு செய்வோர்]

(இ) பகுதிநேர ஆய்வாளர்

**பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் மேற்பார்வை**

| | |
|---|---|
| திரு. க. ப. அறவாணன், எம். ஏ., எம். லிட்., | "தொல்காப்பியம்—உரை வேற்றுமை" |
| திரு. பு. அ. மோகனராசு, எம். ஏ., | "1900 வரை தமிழ் அச்சு / பதிப்புத் தொழில் வளர்ச்சி" |
| திரு. ந. பாண்டுரங்கம், எம். ஏ., | "சதகங்கள்—ஓர் ஆழ்வாய்வு" |

**துணைப் பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்களின் மேற்பார்வை**

| | |
|---|---|
| திரு. கோ. இராமச்சந்திரன், எம். ஏ., எம். லிட்., | "திருக்குறளில் மனித நலக் கொள்கைகள்" |
| திரு. இரா. மாயாண்டி, எம். ஏ., எம். லிட்., | "சங்க இலக்கியத்தில் கற்பனை" |
| திருமதி கிருட்டிணு சஞ்சீவி, எம். ஏ., பி. டி., | "சங்க இலக்கியத்தில் ஒப்புமைப் பகுதிகள்" |
| திருமதி மா. சு. சாந்தா, எம். ஏ., | "சிவப்பிரகாசர் நூல்கள் ஆய்வு" |
| திரு. செ. இராசேந்திரன், எம். ஏ., | "தமிழ் வளர்ச்சி / ஆராய்ச்சியில் திராவிட இயக்கத்தின் தாக்கம்" |

# 9. மதிப்புரை மணிகள்

## இலக்கிய இயல் அ. ஆ.

"என் ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு?" என்பது வள்ளுவர் விடுத்த வினா. இந்த வினா கற்றற்குரிய நூல்களின் பெருமையினை உணர்த்த எழுந்ததாகும். அதற்கு ஏற்ப அறிஞர் பலர் தோன்றிப் பன்னெடுங்காலமாகத் தமிழ் இலக்கியங்களைப் படித்துப் பல்வேறு கோணங்களில் அவற்றை ஆராய்ந்து வருகின்றனர். அத்தகைய ஆராய்ச்சியாளர் ஒருவரால் எழுதப்பெற்று, இலக்கியங்களின் அடிப் படைக் கொள்கைகளையும் அவற்றின் சிறப்புக்களையும் தெரிவிப்பதாய் இந் நூல் அமைந்துள்ளது.

நூலின் முதல் தலைப்பில் மனிதனது எண்ணம் விண் போல விரிவானது எனவும், அறிவாகிய ஞாயிறும் கலையாகிய திங்களுமே அவ் 'விண்ணின் இரு சுடர் விழிகள்' எனவும் கூறி விளக்கப்படுதல் காண்கிறோம். அடுத்த தலைப்பில் இலக்கிய ஆராய்ச்சிக்கு ஒப்பிட்டு நோக்கலும் உறழ்ந்து நோக்கலும் இன்றியமையாதவை என்பது அறிவிக்கப்படுகின்றது. நான்காம் தலைப்பில் 'எவர்?' என்னும் வினாவிற்கு 'ஊழ்நிலையாலும் சூழ்நிலையாலும் உருவாகும் மனிதர்' என்னும் விடையும், 'எதை?' என்னும் வினாவிற்கு 'முக்காலங்கள்' என்னும் விடையும், 'எப்படி?' என்னும் வினாவிற்கு 'உணர்ச்சியால் உண்மைக்கு உருவம் கொடுத்தல்' என்னும் விடையும், 'எப்போது?' என்னும் கேள்விக்கு 'கலைஞனின் உளநிலை சமுதாயத்தின் உளநிலையை நாடும்போது' என்னும் பதிலும், 'ஏன்!' என்னும் வினாவிற்கு 'கலைஞ னின் உள்நோக்கும் சமூகத்தின் நோக்கும்' என்னும் விடையும் நுட்பமாக ஆராய்ந்து தரப்பெற்றுள்ளன. ஐந்தாம் மகுடத்தில் எழுத்து, சொல், பொருள் என்னும் மூவகை மொழி இலக்கணங்களுள் நடுநாயகமாகத் திகழும் சொல்லின் சிறப்பும், அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று உறுதிப் பொருள்களின் நடுவண் நிற்கும் பொருளின் சிறப்பும் ஒப்பிடப் பெற்று, அவற்றின் மூலமாகத் தொல்காப்பியர் வகுத்த பொருளிலக்கணத்தின் பெருமை நன்கு விளக்கப்படுகின்றது.

'பொருள் தமிழின் புதுமுகங்கள்' என்னும் ஆறும் தலைப்பு புதிய—தாயினும் பொருத்தமுடையது. அறிவியலில் நடுநாயகமாகச் சமயம் விளங்குகின்றது என்பதும், சமயத்தை வளர்ப்பதில் பெரும் பங்கு கோயிலைச் சார்ந்தது என்பதும், கோயில் வரலாற்றுக்கும் பிற கலைகளுக்கும் பிறப்பிடமாயினும், அக் கோலைப் பற்றிய பக்தி இலக்கியமே உயர்ந்தது என்பதும் இதில் புலப்படுத்தப்படுகின்றன. 'இலக்கியக் குழந்தையின் தாயும் தந்தையும்' என்னும் பத்தாம் தலைப்பின் அடியாக அறிதல் தாய் எனவும், அறிவித்தல் தந்தை எனவும் இப் பெற்றோரால் படைக்கப்படுவதே இலக்கியக் குழந்தை எனவும் அறிகிறோம்.

'நிறை, மறை, குறை' என்பது பன்னிரண்டாம் தலைப்பு. பண்டை இலக்கியங்கள் சமுதாயத்தின் நிறைகளையே எடுத்துக் காட்டின எனவும், மறு மலர்ச்சி இலக்கியங்களில் சமுதாயத்தில் மறைந்துள்ள குறைகளும் தெரிவிக்கப்படுகின்றன எனவும் இத் தலைப் பில் கூறப்படுகின்றன. 'இலக்கியத்தின் இலக்கு' என்னும் பதினன் காம் தலைப்பில், 'ஒன்று' என்பதை அடிச் சொல்லாகக் கொண் டெழுந்த 61 சொற்களைப் பொருளுடன் திரட்டித் தந்துள்ளார் ஆசிரியர். விகாரமின்றி இயல்பாக இருக்கும் உள்ளத்தைத் தன்பால் ஈர்த்து, சிந்திக்கச்செய்து ஒன்றில் ஒன்றுபடுத்துவதே கலை அல்லது இலக்கியம் என்பது விளக்கப்படுகிறது.

பின்னிணைப்பில் சில பல்கலைக் கழக இலக்கிய இயல் பாடத் திட்டங்களும், வினாத் தாள்களும், அறிஞர் சிலரது இலக்கியத் திற னாய்வு நூல்களின் பட்டியலும் சேர்க்கப் பெற்றுள்ளன. இது மாணாக் கர்க்குப் பெரிதும் பயன்படும். தமிழ் இலக்கியத்தை முற்றிலும் புதியதொரு முறையில் ஆராய்ந்து தமது கொள்கைகளை நூலில் வடித்துள்ள ஆசிரியரின் திறன் பாராட்டத் தக்கதாகும்.

[ஆசிரியர் : டாக்டர் ந. சஞ்சீவி, வெளியீடு: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், எழும்பூர், சென்னை-8. விலை ரூ. 7]

— பேராசிரியர் எஸ். வி. வரதராஜ அய்யங்கார்.

## இலக்கிய அணிகள்

இந் நூலில் இடம் பெற்ற 28 கட்டுரைகள் அனைத்தும் ஆராய்ச்சிப் போக்கில் எழுதப் பெற்றவை. நூல் முழுவதும் தமிழ் இலக்கண இலக்கியத்துடன் சிறப்பாகக் காணப்படும் பாடல்கள் மேற்கோளாகக் கையாளப்பட்டிருக்கின்றன. தமிழ், தமிழர் வரலாறு, தமிழர் சமயக் கொள்கை, உரைநடை ஆசிரியர்கள், வள்ளலார் கொள்கை, இளங்கோ வடிகள் திறமை, மணிமேகலை, திருக்குறள், திருமுறைகள் மாண்பு நூல் நெடுகிலும் பின்னிப் பிணைந்து கிடக்கிறது.

இவரது உரைநடையில் அழுத்தமும் கவர்ச்சியும் பிறருக்குத் தெரிய வேண்டிய அறிவு பூர்வமான சரக்குகளும் விரவி வருகின்றன. "வேம்பின் வெண் மலர்கள் பூத்துப் புதுமணம் கமழும். தென்னை மரங்கள் பசிய ஓலை விரித்துத் தென்றலில் தலை அசைத்துத் தீஞ்சுவை நீரினை இளநீராக வழங்கும். பனை மரங்கள் நுங்கினை வழங்கி மகிழ் விக்கும். மாஞ்சோலை எங்கும் ஒருவகைப் புதுமணம் பூக்களால் எழும்பும். மேடையெங்கும் பூங்காற்று வீசும். கோடையில் குளிர் தருக்களின் நிழல் இளைப்பாற்றிக் கொள்ளுதற்கேற்ப விளங்கும்" என்று வர்ணனை செய்யும்போதும், ஆராய்ச்சி பூர்வமான அரிய பொருள்

களைப் பெய்யும்போதும் செஞ்சொற் கவியின்பமும் கருத்து வளமும் பக்கத்திற்குப் பக்கம் காணுகிறோம். ஆராய்ச்சிப்போக்கில் எழுதப் பெற்றாலும் படிக்கப் படிக்க மொழி, இலக்கியம், இலக்கணம், மரபு, கலைகள், மேற்கோள் காட்டும் விதம், பண்டைய அரசியல் வாழ்க்கை நெறி யாவற்றையும் தெளிவாக அறியும் வண்ணம் நம்மைத் தெள்ளியர் ஆக்குகின்றார். நற்றிணை, குறுந்தொகை, இறையனார் களவியல் உரை தொடங்கி பாரதியார் பாரதிதாசன் வரை தமிழ்க் கவி வெள்ளமும் தமிழ்க் கருத்தோட்டமும் எத்தனை மாண்புள்ளது என்பதனை நமக்கு நயம்பட உரைக்கின்றார்.

தமிழ்க் கவிஞர்கள், உரையாசிரியர்கள், சமயவாதிகள் தமிழ் மொழிக்குச் செய்த அளப்பரிய தொண்டு போன்று செந்தமிழ்க் கட்டுரை வடிவத்திற்கும் வளர்ச்சிக்கும் தமிழ் மொழி ஆக்க வழிக்கும் வடிவத்திற்கும் அரிய தொண்டினைச் செய்துள்ளார். புலவர்களும், புதுமைப் பிரியர்களும் விரும்பிப் படிக்கக் கூடிய அணிகள் பல இவற்றுள் இடம் பெற்றிருக்கின்றன.

[டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 7]

— டி. என். சுகி சுப்பிரமணியன்

(தினமணி சுடர் அநுபந்தம் 7—16-12-1973)

## நாக குமார காவியம்

[பதிப்பாசிரியர் : வித்துவான் மு. சண்முகம் பிள்ளை, வெளியீடு: சென்னைப் பல்கலைக் கழகம் (தமிழ்த்துறை), சென்னை - 5. விலை ரூ. 5.]

பழைய தமிழ்க் காவியங்களில் பெருங்கதை, சிவக சிந்தாமணி, சூளாமணி, நீலகேசி, மேருமந்தர புராணம், யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம், சாந்தி புராணம் முதலானவை சைன சமயக் கொள்கைகளை உலகிற்குப் பிரசாரம் செய்ய எழுந்தவை. இவற்றுள் நாககுமார காவியமும் ஒன்றாகும். பெருங்கதை, சிந்தாமணி, சூளாமணி ஆகியவை பெருங்காவியம் எனப் போற்றப் பெற்றவை. மற்றவை நடைச் சிறப்பும் பொருட் பொலிவும் ஒருங்கே அமைந்தவையல்ல ; சமயக் கொள்கைகளைச் சாற்றும் கருத்துடன் தோன்றியவை. தமிழில் ஐம்பெரும் காவியம் என்னும் வழக்கு நன்னூலுக்கு முதன்முதலாக உரை இயற்றியவராகிய மயிலைநாதர் காலத்துக்கு முன்பிருந்தே (14ஆம் நூற்றாண்டு) வழங்கி வருகிறது. அதுபோலவே பிற்காலத்தில் ஐஞ்சிறு காவியம் என்னும் வழக்கும்

ஏற்படலாயிற்று. இவ்வைந்துள் ஒன்ருகக் கருதப்படுவது நாககுமார காவியமாகும். இது முதன்முதலாக இப்பொழுதுதான் அச்சேறி வெளிவருகின்றது. இக் காவியத்தின் ஏட்டுப் பிரதியை உதவியவர் வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த தச்சாம்பாடி கிராமவாசியும், சைன சமயத்தவரும் அச் சமய நூல்களில் நல்ல தேர்ச்சியுடையவரும் ஆகிய திரு. ஜெ. சின்னசாமி நயினர் என்பவர். இது பதிப்புரையிலிருந்து தெரியவருகின்றது.

நாககுமார காவியம் இயற்றியவர் இன்னரென்று தெரியவில்லை. இது ஐந்து சருக்கங்களும் 170 பாடல்களும் கொண்டது. வடமொழியிலுள்ள நாககுமார காவியத்தைப் போலவே இதன் சருக்கங்களின் பெயர்களும் முதல், இரண்டு, மூன்று என எண்ணுப் பெயரால் வழங்கப்பெற்றுள்ளன. பெரும்பாலும் விருத்தப்பாக்களே இதில் பயின்று வந்துள்ளன. இக் காவியத்திற்கு 'நாக பஞ்சமி கதை' என்றும் பெயர் உண்டு. வடமொழியில் இதனை இயற்றிய மல்லிசேனர் இப் பெயரை இக் காவியத்திற்குப் பெயராகக் குறிப்பிடுகிருர். சிரேணிக மகாராசன் தன் சுற்றத்தோடு விபுலமலையிலுள்ள சமவசரணத்திற்குச் சென்று அங்கிருந்த கௌதம முனிவரை வணங்கித் தருமம் கேட்டபின், அவரிடமிருந்து பஞ்சமி கதையைக் கேட்டறிந்தான். அந்த முனிவர் வாக்காகவே இக் காவியக் கதை அமைந்திருக்கிறது. நாக குமாரனின் வீரதீரச் செயல்கள், காதல், களியாட்டங்கள், முற்பிறப்பின் வரலாறு, பஞ்சமி விரத நோன்பு, அதன் பயன், துறவு நிலை ஆகியவை இக் கதையில் இடம் பெற்றுள்ளன. சிலையங்களுக்குச் சென்று வழிபடுதல் முனிவர்களைத் தொழுது தர்மம் கேட்டல், அருக தேவரை உள்ளம் உருகத் துதித்தல் போன்ற சைன சமயக் கொள்கைகளையும் இக் காவியம் விவரிக்கிறது. இவை யாவும் பதிப்பாசிரியரால் பதிப்புரையில் விளக்கப் பெற்றுள்ளன. பன்னிரண்டாம் நூற்ருண்டுக்கு முன்னரே இக் காவியம் தோன்றியிருத்தல் கூடும் என்பதற்குச் சான்றுகள் தரப்பெற்றுள்ளன.

இதுகாறும் அச்சியற்றப்பெற்று வெளி வராத ஒரு பழைய தமிழ்க் காவியத்தை வெளியிட வேண்டும் என்னும் ஆர்வத்தோடு உழைத்து வெற்றி கண்டுள்ள இதன் பதிப்பாசிரியருக்குத் தமிழகம் கடப்பாடுடையது என்பது ஒருதலை. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை செய்துவரும் இத்தகைய தமிழ்ப்பணி போற்றுதற்குரியது.

— பேராசிரியர் எஸ். வி. வரதராஜ ஐயங்கார்

(தினமணி சுடர், அனுபந்தம்—15-9-1974)

## NAGAKUMARA STORY

Nagakumara Kavyam, Edited by M. Shanmukham Pillai,
Lecturer in Tamil, Tirukkural Endowment Research Centre,
University of Madras

The Tamil Research Department of the University of Madras has published Nagakumara Kavyam, an important Kavya not so far published. Its Editor, M. Shanmukham Pillai, has added a detailed preface containing significant facts and figures. Notes about important names appearing in the Kavya and a note mentioning other works which deal with the story of Nagakumara. It is well known that ancient Tamil literature consisted not only of Pathupattu, Ettuthogai, Pathinenkizhkannakku but also five major kavyas and five minor kavyas. Of the five kavyas which are all jain works, Chulamani, Neelakesi, Yasodhara Kavyam and Udayanakumara Kavyam are already available and the fifth kavya, the work under review, has not become available thanks to the efforts of the Madras University Tamil Department.

The Kavya consists of five sargas and 170 stanzas with a useful note under each stanza. Though the style and diction are not so beautiful as in other Kavyas, the story in simple and quite interesting. At the request of King Siranika, Gautma Muni told the story of Nagakumara, his heroic deeds, love affairs, and eventual attainment of spiritual enlightenment and liberation. The book is doubtless a useful addition to Tamil Literature.—K.E.P.

[THE WEEKLY MAIL
18th May, 1974]

## TIRUKKURAL PAPERS

First All-India Tirukkural Research Seminar Papers:

*Edited by* : Dr. N. SANJEEVI, *University of Madras*, Price not stated.

Tirukkural is a work of universal appeal. It deserves wide publicity. It must be made known as a first step, to scholars in all the States of India. This is the reason that urged the University of Madras to organise an All-India seminar on Tirukkural studies recently.

Twelve delegates from "non-Tamil" States and two delegates from the Annamalai and Madurai Universities in Tamil Nadu took part in the seminar.

The papers collected in this volume were prepared by scholars representing the Assamese, Bengali, Gujarathi, Hindi, Kannada, Maithili, Malayalam, Marathi, Punjabi, Sanskrit, Telugu and Urdu languages. Their contributions draw instructive parallels between Tiruvalluvar on the one hand, and Kabir, Guru Nanak, Basava and other saints on the other. The translations of Tirukkural in Marathi, Telugu and other indigenous languages form the subject of some of the papers.

The seminar succeeded in establishing report among scholars devoted to the study of Tirukkural. It has played a useful part in promoting national integration.

THE INDIAN EXPRESS, Saturday,
5th January, 1974.

## TAMILAYVU

### (ANNALS OF TAMIL RESEARCH)

*'Clarity and Precision'*

*Edited by*: Dr. N. SANJEEVI, (*Department of Tamil, University of Madras*, 1972)

*Annals of Oriental Research*, Published by the University of Madras, contains papers mostly in English : Part II of it has sections in several languages including Tamil. In view of the importance given to Tamil after Independence, the University has now rightly thought fit to issue a separate publication. The issue under review is the first number of this new venture and is edited by Dr. N. Sanjeevi, Professor Tamil assisted by the staff and students of the Tamil Department including the Thirukkural Research Centre.

The volume opens with a learned paper on the grammatical works about Tamil poetry, presented by Mr. Shanmukham Pillai in a Seminar. There are two other papers in Tamil followed by a paper in English on "Historical Studies in Tamil" jointly done by Dr. N. Sanjeevi and Mr. K. D. Thirunavukkarasu. Books of history, historical novels, plays and other works which have inspired the Tamils and provided

the inspiration for Tamil literary renaissance are included in this important study.

Part II running into 80p., carries the unpublished Jain literary piece *Appandanathar Ula.* It is a significant attempt worthy of the highest praise. The editing of this *Ula* is now done here by Mr. Shanmukham Pillai for the first time with a note on the Jaina Shrine of Thirunarunkundram, an appeal for further copies of this manuscript, the text of the available manuscript, a list of all *Ula* works in Tamil, index of proper names, texts of connected inscriptions, notes on those inscriptions and details of manuscripts provided by Mr. T. S. Sripal.

Exhaustive reviews of 25 books published in the course of the last five years are provided. Care has been taken to strike a balance between literary and grammatical books on the one hand and modern and pseudo-political works on the other. One of the books covered is the Tamil translation of a rare book on "Ancient Kerala" by the late Professor Elamkulam P. N. Kunjan Pillai, an authority on the subject who had training under Sir Mortimer Wheeler and took part in excavations in Harappa and Arikamedu. Serious students of Tamil can benefit greatly from this section. We would suggest to the Editor to include reviews of books of Tamil interest published outside Tamil Nadu and also compilations like the Cambridge Tamil Prose Reader and Mimeographed bulletins relating to Tamil published by the Chicago University.

A full list of works on Tholkappiyam and the Departmental Report complete the issue, which certainly breaks new ground. A two-page synopsis in English is a *desideratum* in each issue.

This endeavour of the Tamil Department and its active head Dr. N. Sanjeevi come up to more than our expectations, as the Vice-Chancellor Mr. N. D. Sundaravadivelu states in his admirable Foreword. We hope that the high standard of the publication will be maintained in future issues. It is not an easy task and we wish them every success. Public and Educational Libraries should bring this volume to wide notice.

The price of the issue is Rs. 5/- (Five) only.

-SOMALAY

TAMILAYVU: PART-II GENERAL EDITOR: N. SANJEEVI, PUBLISHED BY THE UNIVERSITY OF MADRAS, MADRAS-5.

This second volume in Tamil research has articles dealing with the soundness and precision of the language. The staff and students of the Department have greatly contributed to its excellence. " The origin of the Dravidians ", " The Excellence of Perunkadai ", " Works in Tamil on Rhetoric " are worthy examples of extensive research. The sea-borne trade of the Tamils from ancient to modern times has been discussed by many in the Seminar held in connection with V. O. Chidambaram Pillai's Centenary. M. Shanmukham Pillai's " Nagakumara Kavya " is published for the first time with good commentary.

**—S. V. Varadaraja Iyengar.**

— THE HINDU, SUNDAY, JANUARY 5, 1975.

## 10. பாராட்டுப் பன்னீர்

### 1

ம. பொ. சிவஞானம்,
துணைத்தலைவர்,
தமிழ்நாடு சட்டமன்றம்.

புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை-9
24—11—'74

டாக்டர். ந. சஞ்சீவி,
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை-600005.

அன்புடையீர்,

வணக்கம். தங்கள் 19—11—74 கடிதம் வரப்பெற்று மகிழ்ந்தேன். கலிங்கத்துப்பரணித் திறனாய்வு தமிழன் என்னும் இன உணர்விலே பிறந்ததால் எழுதப்பட்டதாகும். பரணியை ஆராய்வதற்குத் தாங்கள் தான் அன்புகூர்ந்து வாய்ப்பளித்தீர்கள். இல்லையேல், என் பெயரில் இந்த நூல் வெளிவருவதற்கான வாய்ப்பே என் வாழ்நாளில் எனக்குக் கிடைத்திருக்காது. ஆராய்ச்சியில் எடுத்துக்காட்டியுள்ள குறைபாடு களும், அறிவித்துள்ள முடிவுகளும் புலவர்கள் அவ்வளவு பேரும் ஏற்றுக் கொள்ளக் கூடியவையாக இருக்குமென்று நான் நினைக்க வில்லை. அப்படி இருந்துவிட்டால் நான் அதிர்ஷ்டக்காரன்தான். இராமலிங்கர்-காந்தியடிகள் ஒப்பாய்வு ஆங்கில ஆக்கம் பெற்று விட்டதை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன்.

திரு. சுப்பராயன் கட்டுரைபற்றித் தாங்கள் தந்த ஐயமே எனக் கும் ஏற்பட்டது. அதைப் பிரசுரிக்காமல் இருக்க எனக்குத் துணிவு இல்லை. சங்கடம் எதுவும் ஏற்படாது என்று நம்புவோமாக; ஏற் பட்டாலும், அதனைத் தவிர்ப்பதற்கு என்னாலானவதைச் செய்யத் தவற மாட்டேன்.

நன்றி.

அன்புள்ள,
(ஒ-ம்) ம. பொ. சிவஞானம்

### 2

**K. D. Thirunavukkarasu**
M. A. (Tamil), M. A. (His.), M. Litt., Dip. in Lings.,
Associate Professor in Tamil,
International Institute of Tamil Studies,
C. I. T. Campus, Adayar.

Madras-600020
11—10—74

மதிப்பிற்குரிய பேராசிரியர் அவர்கட்கு,

வணக்கம்.

தங்கள் மனமுவந்த பாராட்டுதலுக்கும் வாழ்த்துதலுக்கும் என் உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருக்குறள் ஆராய்ச்சிக்குப் பரிசு அளித்ததன் மூலம் சாகித்திய அகாதமி திருவள்ளுவருக்குச் சிறப்பினைச் செய்துள்ளதாகக் கருதுகின்றேன்.

மூன்று பல்கலைக் கழகங்களுள் மூத்த பல்கலைக்கழகத்தின் திருக்குறள் துறைக்கும், தமிழ்த் துறைக்கும் தனிப்பெருஞ்சிறப்பு கிடைத்தமை 'இன்களிமகிழ்நகை' யூட்டுகிறது.

நல்லதொரு நூலினைப் படைப்பதற்குப் பலவகையில் உதவி புரிந்த அனைவருக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

அன்பன்,

(ஒ-ம்) க. த. திருநாவுக்கரசு

## 3

***ராஜம் கிருஷ்ணன்,***
10, போரூர் தெரு,
சென்னை - 59.
25—12—1973.

அன்புள்ள நண்பர் டாக்டர் திரு. சஞ்சீவி, (எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.) அவர்களுக்கு,

'வேருக்கு நீர்' புதினம், அகதமி பரிசுக்காகத் தேர்வு பெற்றிருக்கும் இச் சந்தர்ப்பத்தில், அந்நூலுக்கு முன்னுரை எழுதிச் சிறப்பித்த தங்களை நினைவுகூர்ந்து இக் கடிதம் எழுதுகிறேன்.

'குறிஞ்சித் தேனை' நான் எழுதி நாலைந்து ஆண்டுகள் சென்றிருந்தும் அந்தப் புதினத்தைப்பற்றி எவரும் சிறப்பாக அறிந்திருக்கவில்லை. அந் நூலைத் தாங்கள் படித்து ஓர் ஆய்வுரை எழுதிய பின்னரே, இலக்கிய உலகில் என்னுடைய நூல்களுக்கு ஓர் மதிப்பு உண்டாயிற்று. என்னுடைய நூலுக்குத் தாங்கள் அணிந்துரை எழுதியிருந்ததைப் பார்த்தபோது, நேராகக் கண்டு அறிமுகச் சொல்கூடப் பரிமாறிக் கொள்ளாத நிலையில் நூலைச் சிறப்பித்துத் தாங்கள் எழுதியிருந்ததைக் கண்டபோது தங்கள் பெருந்தன்மையைப் புரிந்துகொண்டேன். ஓர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர், பல்கலைக் கழகத்தின் நிழலில் கூட ஒதுங்கிக் கல்வியறிவு பெற்றிராத என் நூலுக்கு முன்னுரை அளித்திருக்கிறுர் என்ற சிறப்பே என்னைப் பரிசுக்கும் உரிய நிலைக்கு உயர்த்திருப்பதாகக் கருதுகிறேன். சகோதரி கிருஷ்ணு அவர்களுக்கு என் அன்பைக் கூற வேண்டுகிறேன்.

உளம் கனிந்த நன்றியுடனும் புத்தாண்டு வாழ்த்துக்களுடனும்.

(ஒ-ம்.) ராஜம் கிருஷ்ணன்.

## 4

திருமதி கிரேசு - செல்லத்தாய்,
எம்.ஏ., (பிஎச்.டி.) கோவை.
பூ. சா. கோ. கலைக்கல்லூரி, 30—12—73

எங்கள் கருத்தரங்கில், அறிவியல் தமிழ் ஆக்கம் கருத்தரங்கில் டாக்டர் அவர்கள் தமக்கே உரித்தான நுட்பம், திட்பம், செறிவு ஆகியன பலருக்கும் பயன்படுமாறு பங்கெடுத்துக் கலகலப்பையும் களிப்பையும் புகுத்தினார்கள். நகைச்சுவையாகப் பல சொல்லி (என்னையும்கூட) பலரைச் சிரிக்க வைத்தார்கள். இன்னும் பல சொல்லலாம். ஆனால், அவர்கள் ஏற்றுக்கொண்ட பதவியினால், நான் சொல்வது 'வேறு ஏதோ' உள்நோக்கத்துடன் கூறுவதாக எண்ண இடம் தரக்கூடாதே என்ற அச்சத்துடன் அமைதி காக்கிறேன்.

அன்புள்ள,
(ஒ-ம்.) கிரேசு.

## 5

பா. வீரமணி, சென்னை - 13.
"பாவேந்தர் இல்லம்" 2—11—74
2, காசிபுரம் "பி" பிளாக்,
இராயபுரம்.

அன்புநிறை பேராசிரியர் அவர்கட்கு,

அன்பு வணக்கம். தாங்கள் இதுகாறும் எவ்வளவோ பல அரிய பணிகளைச் செய்து வருகிறீர்கள் என்பதை யான் நன்கு அறிவேன். தங்கள் பேச்சில் பகுத்தறிவுணர்வும், சீர்திருத்த வேட்கையும் நிலைத்து நின்றதை யான் பன்முறை கண்டிருக்கிறேன்.

பலரிடம் இது பேச்சில் மட்டும் இருக்குமேயன்றிச் செயலில் இருப்பதில்லை. இந்நிலை, சீர்திருத்தவாதிகள் என்று தற்பெருமை பேசிக்கொள்ளும் அரசியல் வாதிகளிடத்தும், அறிஞர்களிடத்திலுங் கூட கண்டிருக்கிறேன். ஆனால், தாங்களோ ஜாதி மதம் எனும் சிறைகளைக் கடந்த ஒருவராக உள்ளீர்கள் என்பதைப் பேச்சில் அல்ல, செயலில் என்பதை உணர்ந்து கொண்டேன். மீனவச் சமுதாயத்தைச் சார்ந்த அருமை நண்பர் கு. எழிலரசு, எம்.ஏ. (கு. மோகனராசு) அவர்களைப் பலர் முயன்றும் கிடைக்கமுடியாத இடத்தில் அமர்த்திய பெருமை தங்களையே சாரும். இது போற்றத்தக்கது. ஆம். ஜாதிகள் பல பேசும் சழக்கர் உலகில் இச் செயலைக் காண்பது அரிதினும் அரிதாகும். இந் நன்றியை மீனவச் சமுதாயத்திற்குத்

தாங்கள் தந்த பெருநன்கொடையாகக் கருதுகிறேம். யான், தங்களைப் பாராட்டுவது மீனவச் சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவர்க்கு வேலை கொடுத்ததால் அல்ல. இன்று சமுதாயத்தைச் செரித்துவரும் ஜாதி மதக் கட்டுகளைக் கடந்து செய்திருக்கிற உதவிக்குத்தான். இதே போன்று நண்பர் இ. சுந்தமூர்த்தி, எம்.ஏ., அவர்களையும் பதவியில் உயர்த்தியிருக்கிறீர்கள் என்பதையறிந்து மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன். இஃது இளைஞர்கள்பால் தாங்கள் கொண்டிருக்கும் பேரீடுபாட்டைப் புலப்படுத்துகிறது. "பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம் விழிபெற்றுப் பதவி கொள்ளவேண்டு"மெனக் கூறிய பாரதியின் கனவை நனவாக்கியிருக்கும் தங்கள் வீரநெஞ்சம், ஈர நெஞ்சம் வாழ்க! வளர்க.

வாழ்க பேராசிரியர் சஞ்சீவியவர்கள்
வளர்க அவர்தம் அன்புள்ளம்.

தங்கள் அன்புள்ள,
(ஒம்.) பா. வீரமணி.

## 6

**ப. ரெ. வேங்கடாச்சாரி,** சென்னை - 33
76, கோதண்டராமசுவாமி கோயில் தெரு, 12—2—74.
மேற்கு மாம்பலம்.

மதிப்புக்குரிய ஐயா,

வணக்கம் பல. நலம்; நலம் சிறக்க விரும்புகின்றேன். தங்களுக்கு இக் கடிதம் வியப்பளிக்கலாம்; பல்வேறு அலுவலகத் தொல்லைகளுக்கிடையே வேதனையையும் அளிக்கலாம். ஆனல், தந்தை பெரியார் அவர்களிடம் கொண்டிருந்த அன்பும், கொள்கைப் பற்றும் இக் கடிதத்தை எழுதத் தூண்டின. (இப்போதும் கொண்டிருக்கின்றேன்).

2. அன்னைக் கலை நற்பணி மன்றம் கோகலே மண்டபத்தில் நேற்று (11—2—74) நடத்திய "பெரியார்—கருத்தரங்கிலே" நான் ஒரு பார்வையாளனுக இருந்தேன்; அதனுல் தங்கள் திறனுய்வுச் சொற்பொழிவைக் கேட்கும் பேறு பெற்றேன். உணர்ச்சியுடன், தமிழ் உணர்வுடன் அறிவு கொளுத்தும் வகையில் அமைந்த தங்கள் பேச்சு உள்ளத்திற்கு பெருமகிழ்வு அளித்ததோடன்றி, சிந்தனைக்கும் பெருவிருந்தாக அமைந்திருந்தது. தங்களுக்கு மிகுந்த நன்றியுடையேன்.

3. தந்தை பெரியார் அவர்களைப்பற்றி அரசியல் மேடைகளில் மட்டுமே மிகுதியாகக் கேட்டறிந்தவன் நான். என் போன்ற பெரும்

பான்மையான இளைஞர்களின் நிலையும் அப்படித்தான். அப்படிப் பட்டவர்களுக்குப் பெரியாரை ஒரு புதிய கோணத்திலே அருமையாகப் படம் பிடித்துக் காட்டியது தங்கள் பேச்சு.

4. சமுதாயக் கொள்கைகள் என்று ஒரு குறிப்பிட்ட இனத்தின் ஆதிக்கமே மிகுதியாகப் பேசப்பட்டு வந்தன — தெரிந்தோ, தெரியா மலோ. பெரியாரின் மற்றக் கருத்துக்கள் - சாதிவேற்றுமை - பெண்ணுரிமை - பெண்களுக்குச் சொத்துரிமை - பால் கல்வி - திருமணம் போன்றவைகளின்மீது அவர்கள் கொண்டிருந்த புரட்சிகரமாக கருத்துக்கள் - இந்த இன ஆதிக்கக் கருத்தால் அமுக்கப்பட்டு வந்தன; அமுக்கப்பட்டும் வருகின்றன. அந்தச் சூழலிலே சமுதாய விடுதலை - இன ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்று விட்டோம்; பெற்ற விடுதலையைப் பேணிக் காப்போம்; புதிய சமுதாயம் அமைப்போம் என்று அறைகூவல் விடுத்த உங்கள் பேச்சு உள்ளத்துக்கு நிறைவு தந்தது; உண்மை நிலையினையும் அழகாகப் படம் பிடித்துக் காட்டியது. சாதி உணர்வு அடியோடு மறைந்து விட்டதா, உட்பூசல் - உட்பகை முற்றும் ஒழிந்து விட்டதா என்ற தங்கள் வினா மெய்ம்மை நிலையின் அவலநிலையை விளக்கிக் கூறியது.

5. தானுண்டு, தன் கருமமுண்டு என்றிருந்தனர் பலர். அதுவே ஒரு சிறந்த நற்பண்பாகவும் (virtu) கூறப்பட்டது. அவ்வாறு தருக்கித் திரிந்தவர்களிடையே தன் இன்பங்களையெல்லாம் மறந்தும், துறந்தும் தமிழர் சமுதாயம் ஒரு முதுகெலும்புடைய சமுதாயமாக மாற்ற உழைத்தார் தந்தை பெரியார்; தள்ளாத வயதிலும் தடியூன்றி உடல் நோவுகளையெல்லாம் பொறுத்து ஓயாது உழைத்தார் பெரியார் என்று உணர்ச்சியுடன் கண்களில் நீர் துளும்ப உரைத்த தங்களின் பேச்சு, என் கண்களிலும் கண்ணீரை மல்கச் செய்தது.

6. தனி மாந்தன் வாழ்க்கை வேறு - பொது வாழ்க்கை வேறு என்ற கயமைக் கொள்கையினைச் சாடி, பெரியார் எப்படி தம் பொது வாழ்க்கைக் கொள்கைக்குத் தன் தனி வாழ்க்கையினை ஓர் இலக்கியமாக அமைத்துக்கொண்டார் என்று அழகாக விளக்கியது தங்கள் பேச்சு. சாதியை ஒழிக்கப் பாடுபட்ட பெரியாரின் தொண்டுகள் இனிமேல்தான் முழுமைபெற வேண்டும் : அதற்காகப் பாடுபடுவோம்.

7. திருமண முறை மட்டுமல்ல, திருமணமே தேவையில்லை என்பது பெரியாரின் கருத்து. மண முறைகளிலே - பால் கல்வி - பெண்ணுரிமை போன்றவைகளின் மீது நாம் கருத்துக் கூறும் போது ரசல் (Rusrel) போன்றவர்களின் கருத்துக்களைக் கூறுகின்றோம்; அவைகளைவிடப் புரட்சித் தன்மை வாய்ந்த பெரியாரின் கருத்துக்கள் கூறப்படுவதே இல்லை என்பது என் கருத்து. அந்தக் குறையை நிறைவு செய்யும் வகையில் அமைந்திருந்தது தங்கள் பேச்சு; மேலும் சிக்கனத்தைப் பற்றியும் அழகாக விளக்கியது தங்கள் பேச்சு.

8. கருத்துக்களைக் (opinion) கூறும் உரிமையும், கேட்கும் பொறுமையும் பெரியாரிடமிருந்தன என்பதனை விரிவாக விளக்கிக் கூறுவீர்கள். முழுமையாகப் பெரியாரைப் படம் பிடித்துக் காட்டிய தங்களுக்குத் தமிழகம் என்றென்றும் கடமைப்பட்டிருக்கின்றது. இதைப்பற்றிய நூல்களையும் வெளியிட வேண்டுகின்றேன்.

வணக்கமுள்ள,
(ஒ-ம்) ப. ரெ. வேங்கடாச்சாரி.
12—2—74.

# 7

ந. வேலுசாமி, எம். ஏ.,
(கடந்த ஆண்டு மாணவன்)
பச்சையப்பன் கல்லூரி.

சென்னை,
23—12—74.

பேராசிரியர் அவர்களுக்கு,

மனம் மொழி மெய்களால் ஆன வணக்கம்.

ஐயா, *21-12-74* அன்று மாலை, கலைவாணர் அரங்கில் கவிஞர் ஆனந்தம் புனைந்த 'அண்ணா காவியம்' அரங்கேற்றத்தின்போது தங்களைக் காணும் பேறு பெற்றேன்.

தங்களுக்கு நேராக அமர்ந்திருந்தேன். என்னை நேரில் கண்டால் உணர்ந்துகொள்வீர்கள். தாங்கள் உரையாற்றும்போது, என்னை 'இவர் யார்?' என்று கேட்டவர்கட்கெல்லாம், இவர் என் பேராசிரியர் என்று சொல்லிச்சொல்லி மகிழ்ந்தேன்.

நான் தங்களிடம் பல்கலைக்கழக வகுப்புப் பயின்றபோது, தங்களை - தனித்தன்மையை - உணர்வேன். தங்களைப் பிரிந்து கல்வி முடிந்து ஏழெட்டு மாதங்கட்குப் பின்னர், மீண்டும் உயர்வாக எனக்குப் படுகிறீர்கள்.

என்னைப் பொறுத்தவரை, அன்று மீண்டும் - ஓராண்டுக்குப் பின் - ஒரு திறனாய்வு வகுப்பைக் கேட்ட உணர்வு ஏற்பட்டது.

அந்த அரசியல் ஆரவாரத்திற்கிடையில், தாங்கள் தனித்த தன்மையுடன் அனைவரையும் கவர்ந்தீர்கள். என்னை நெகிழச் செய்தீர்கள் !

நான் துதிபாடுவதாகக் கருதக்கூடாது. அப்படிப் பாடினால்தான் உங்கள் புகழ் இன்னும் உயரும் என்ற நிலை இல்லை. என் உணர்வை எழுதுகிறேன். சென்ற ஆண்டு......

பல்கலைக்கழக வகுப்பைச் சட்டமன்றம் ஆக்கினீர்கள்; மாணவர் நெஞ்சில் எழும் ஐயங்களை எல்லாம் கேட்டுத் தெளிவுபெற யாரும் தாராத சுதந்திரம் தந்தீர்கள். தாங்கள் திறனாய்வு நடத்திக்கொண்டு, எங்களுக்குத் திறனாயும் பொருளாக நின்றீர்கள்......மறக்க முடியவில்லை!

தங்கள் வாழ்த்தை நேரில்பெற, சென்னையில் இருந்துகொண்டே வரமுடியாத நிலை. விரைவில் வந்தால்தான் என் மனம் நிறைவடையும்.

திரு. கி. வா. ஜ. அவர்களுக்கு உ. வே. சா. அவர்கள் ஆசானாகி அமைந்து விட்டதைப்போல, சிறியேனுக்குத் தாங்கள்! ஆனால், நான் கி. வா. ஜ. அல்ல: தாங்கள் உ. வே. சா.!

உயர்வுகளை எல்லாம் எழுத முடிவதில்லை; இப்படியும் ஒரு 'மாணவன் நமக்குண்டா?' என்று ஒரு புன்னகை அருளுங்கள். அது போதும்!

தங்கள் மாணவன்,

(ஒ-ம்) ந. வேலுசாமி.

## 8

சென்னை - 5.
23—11—74.

மதிப்பிற்குரிய பேராசிரியர் அவர்களுக்கு,

வணக்கம்.

நவம்பர்த் திங்கள் கலைமகள் ஏட்டிலே "பள்ளியில் சமய போதனை வேண்டுமா?" — என்பது பற்றித் தங்களுடைய கருத்தைப் படித்தேன். பாராட்ட வேண்டுமென்று தோன்றிற்று.

தங்கள் கருத்து ஆழமானது, துணிவானது; தெளிவானது; வளமானது: வரவேற்கத் தக்கது.

'கருதியது போலவும், கதறியது போலவும்'—
(கட்டுரையில் உள்ள தொடர்)

இப்படிப்பட்ட தங்கள் அழகான சொற்கோவைகள் தங்கள் நடைக்கே உள்ள தனிச் சிறப்பு!

அன்பான வணக்கங்களுடன்,
தங்கள் முன்னாள் மாணவி,
(ஒ-ம்) எ. பிளாரன்ஸ்.

# 9

## EXTRACT FROM THE VISITORS' BOOK OF THE TAMIL DEPARTMENT

### *UNIVERSITY OF MADRAS*

I am visiting for the first time the Tamil Department of my Alma Mater. I have heard about Dr. Sanjeevi's contributions to Tamil studies through my french colleagues and Professors of Madras University. It is a happy surprise to note that Dr. Sanjeevi is deeply involved in literary criticism and making a break through in that field. I wish him all the success in reediting the Tamil Lexicon. Tamil Department is growing fast under his direction.

14—10—1974

KASI
INSTITUTE OF LANGUAGES,
*UNIVERSITY OF PARIS*

# 10

Varanasi Nov. 26

Hello,

I've made it back to Benares safely, and I'm still filled with such wonderful memories of the South. I've been organising my material with an advisor, and also might include a study of the Tamil community in Benares and how they worship here as compared to the south. The Festival of the Fullmoon in Kartikk month will be this week, so I hope to see that.

This week my Hindi classes began again, and my dance lessons (Bharat Natyam) also, so it's been very busy. I have such a limited time in India that I'm trying to accomplish many things at once!

I had tea with my dance teacher when I returned to Benares, and we had many things to share, because he is from Madras originally. We talked of Murugan, Kalakshetra, Madras University, Theosophical Society, Palani, and Madurai. It seems that there is a special twinkle in people's eyes when they speek of the South. I share it with them now, also.

Thank you for the Diwali sweets Dr. Sanjeevi. They made my traid vide home very pleasant. Thank you also for the Hill Serman boat. Thank you for the Kural book E. Sundaramoorthy. It has been very interesting for me to read, and beneficial. There are many very wise ideas included in it.

I could thank both of you forever for all that you did for me, but that could be very repetitive. I just want to be sure you feel my appreciation and warm thoughts to you for accepting me as a student and friend, and for making me feel so welcome in your country.

Not only was I able to collect much material on my subject of Murugan, but I was able to view the life of a South Indian family and the food. It's really so different from the north. It is so much more personal to me to stay with families in a foreign land, than to stay in hotels or hostels. I thank you both for making that possible in Madurai with Dr. V. Veerasami and his family, and in Palani with Prof. N. Sarojini Devi. They were all so kind and helpful to me.

I hope that your work is going well and that you feel very satisfied with it.

I hope also that you enjoyed your Diwali.

Thank you again for everything.

I'll write you again when my Murugan project has been organised further.

With my deepest regards (S. d.) Rebecca

## 11

பின்னிணைப்பு :

ம. ரா. போ. குருசாமி,
நிறைகலைப் பேராசிரியர்,
தமிழ்த்துறைத் தலைவர்,
பூ. சா. கோ. கலைக்கல்லூரி,
கோவை-14.

'செந்தில்' தாமுநகர்,
கோவை-18.
8—1—'75.

அன்புமிக்க டாக்டர் அவர்களுக்கு,

வணக்கம்.

தமிழகத்தின் மூத்த/முதற் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறை ஒரு வகையில் தமிழகத் தமிழுக்கு முதலிடம்தானே; அத் துறையின் தலைமைப் பீடம் தமிழினத்தவரால் போற்றுதற்கு உரியது என்பது என் 'மதம்'. அந்த இடத்தில் முன் இருந்தவர்கள் எப்படியோ—அது பற்றிக் கவலை இல்லை. மு. வ. வீற்றிருந்த நிலையில் அந்தத் தகுதி வலியுற்றது; அவரை அமரச் செய்த வகையில் சொல்லின் செல்வர் வழிபாட்டுக்குரியவரானார்......அந்தப் பீடத்தில் தாங்கள் அமர்ந்திருப்பது

பொருத்தம் என உணர்ந்ததாலேயே—அப்படித் தாங்கள் உணரச் செய்ததாலேயே—நான், இல்லை—என் உணர்வு பேசியது. செந் திலாண்டவன் மேலும் அருளுக!

அன்புக்குரிய,

(ஒ-ம்) ம. ரா. போ. குருசாமி



## 12

SRI AVINASHILINGAM
HOME SCIENCE COLLEGE FOR WOMEN

Tmt. **RAJAMMAL, P. DEVADAS**
M.A., M. Sc., Ph.D., (Ohio State)
*PRINCIPAL.*

Coimbatore - 641011.
10—1—75.

டாக்டர் ந. சஞ்சீவி,
தமிழ்த்துறைப் பேராசிரியர் - தலைவர்
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை - 600005.

அன்புடைய டாக்டர் சஞ்சீவி அவர்களுக்கு,

பல்வேறு பணிகட்கிடையிலும், தாங்கள் எங்கள் அழைப்பை ஏற்று, சென்ற 6—1—1975 அன்று நடைபெற்ற அன்னை சாரதாமணி தேவியின் பிறந்த நாள் விழாக் கருத்தரங்கில் கலந்துகொண்டு, தங்கள் உயர்ந்த கருத்துக்களை மாணவியருக்கு எடுத்துக் கூறியமைக்கு எங்கள் கல்வி நிறுவனங்களின் சார்பில் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

தாங்கள் அய்யா அவர்களுக்கு எழுதிய உளம் நெகிழ்ந்த, அன்பு நிறைந்த கடிதம் கண்டேன். எங்கள் கல்லூரி உயர்ந்த குறிக் கோளுடன் மேலும் மேலும் வளர்ந்து ஓங்க உங்கள் பிரார்த்தனைகள் தொடர்ந்து வேண்டும். இம் முறை தாங்கள் எங்கள் கல்லூரிப் பணிகள் முழுவதையும் காணவில்லை. எனவே, மீண்டும் ஒருமுறை வந்து கல்லூரிப் பணி அனைத்தையும் காண வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

நன்றி, வணக்கம்.

தங்கள் உண்மையுள்ள,

(ஒ-ம்.) இராசம்மாள், பா. தேவதாஸ்.

முதல்வர்